# சங்க இலக்கியத்தில் நீரியல் சிந்தனைகள்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**ரா. ராஜா**

பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி,
கௌரிவாக்கம், சென்னை – 600073.

**நெறியாளர்**

முனைவர் **ம. பாலு** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி,
கௌரிவாக்கம், சென்னை- 600073



**எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி**
கௌரிவாக்கம், சென்னை – 600073

மே - 2023

முனைவர் **ம. பாலு** எம்.ஏ., எம். ஃபில்., பிஎச்.டி.
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி,
கௌரிவாக்கம், சென்னை- 600073.

## நெறியாளர் சான்றிதழ்

**'சங்க இலக்கியத்தில் நீரியல் சிந்தனைகள்'** என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றிற்காக, என் நெறிகாட்டுதலில் எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி, தமிழ்த்துறையில், ஆய்வாளர் ரா. ராஜா அவர்கள் 2018 நவம்பர் முதல் 2023 மே வரை ஆய்வு நிகழ்த்தி எழுதப்பெற்றதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் ஆய்வரங்கிற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்று அளிக்கின்றேன்.

30/5/2023

இடம்: சென்னை.

(ம. பாலு)

நாள்: 30.05.2023

நெறியாளர்

முனைவர் ம. பாலு, M.A., M.A., M.Phil., P.hD.
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
எஸ்.ஐ.வி.இ.டி. கல்லூரி
கௌரிவாக்கம், சென்னை – 600 073.

**ரா. ராஜா**
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி,
கௌரிவாக்கம், சென்னை – 600073.

## ஆய்வாளர் சான்றிதழ்

**'சங்க இலக்கியத்தில் நீரியல் சிந்தனைகள்'** என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு 2018 நவம்பர் முதல் 2023 மே வரையில் என் சொந்த முயற்சியில் ஆய்வு நிகழ்த்தி எழுதப்பெற்றதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் ஆய்வரங்கிற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதி அளிக்கின்றேன்.

இடம்: சென்னை.

நாள்: 30-05-2023

**(ரா. ராஜா)**

ஆய்வாளர்

## நன்றியுரை

முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு எனக்கு வாய்ப்பளித்த **சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு** என் நன்றி.

எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரியில் சேர்ந்து முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு எனக்கு வாய்ப்பு வழங்கிய எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரியின் **தலைவர்** மற்றும் **செயலர்** அவர்களுக்கும் **தென்னிந்திய வாணியர் கல்வி அறக்கட்டளை நிர்வாகக் குழுவினருக்கும்** என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வுப்பணி நிகழ்வதற்கு இசைவு நல்கிய எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி **முதல்வர்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

ஆய்விற்கு உகந்த பல கருத்துரைகளையும் ஆலோசனைகளையும் வழங்கி அவ்வப்போது எழும் ஐயங்களை களைந்து ஆய்வுப்பணிச் சிறக்க எல்லா வகையிலும் துணைநின்ற எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **மு. நளினி** அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

என்னை ஆய்வு மாணவனாக ஏற்றுக்கொண்டு ஆய்வினை மேற்கொள்வதற்கு முழுமுதற் காரணமாக திகழ்ந்த, எனது நெறியாளரும் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியருமாகிய முனைவர் **ம. பாலு** ஐயா அவர்களுக்குப் பணிவான நன்றியைத் தெரிவிப்பதோடு, சங்க இலக்கியத்தினைக் களமாகக் கொண்ட இந்த ஆய்வினை எவ்வாறு மேற்கொள்ளலாம், அணுகலாம் என்ற நிலையில் இக்காலத்திற்கும் மட்டுமல்லாது இனிவரும் காலங்களிலும் இவ்வாய்வேடு பேசப்படக்கூடிய வகையில் ஆய்வுப் பொருண்மை அமையப்பெறுதல் வேண்டும் என்ற விரிந்த கண்ணோட்டத்தோடு

ஆய்வுத்தலைப்பினை ஆராய்ந்து ஆய்வுப் பொருண்மையை வழங்கியமையோடு, நான் முனைவர் பட்டம் பெற வேண்டுமென்று என்மீது மிகுந்த அக்கறைகொண்டு ஆய்வுத் தலைப்பு, பதிவு செய்த நாள் முதற்கொண்டு ஆய்வு முடிகின்ற இதுநாள் வரையிலும் இந்த ஆய்வேடு உருவாவதற்கு உறுதுணையாகத் திகழ்ந்த நெறியாளர் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

எனது ஆய்விற்கு உறுதுணையாக இருந்து உதவிபுரிந்த எஸ்.ஐ. வி. இ.டி. கல்லூரி தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர்கள், முனைவர் **ச. சிதம்பரம்** அவர்களுக்கும், முனைவர் **ஜெ. சரஸ்வதி** அவர்களுக்கும் என் கனிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அலுவலகம் தொடர்பான பணிகளைச் செய்து உதவிய எஸ். ஐ.வி.இ.டி. கல்லூரி அலுவலர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான ஆலோசனைகளையும் ஆய்வு நெறிமுறைகளையும் வழங்கி என்னை நல்வழிப்படுத்திய சென்னைக் கிறித்துவக் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **ப. டேவிட் பிரபாகரன்** ஐயா அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வேல்ஸ் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்ற எனக்கு வாய்ப்பளித்த வேல்ஸ் பல்கலைக் கழக வேந்தர் முனைவர் **ஐசரி. கணேஷ்** ஐயா அவர்களுக்கும், இணை வேந்தர், முனைவர் **ஜோதி முருகன்** ஐயா அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் முனைவர் பட்ட ஆய்வாளராகப் பதிவு செய்த நாள் முதற்கொண்டு இதுநாள் வரையிலும் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து என்னை வழிநடத்திக் கொண்டிருக்கின்ற

வேல்ஸ் பல்கலைக்கழக மொழிகள் புல முதல்வர் (மேனாள் மாநிலக் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர்) முனைவர் பேராசிரியர் **ப. மகாலிங்கம்** ஐயா அவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

எனது முனைவர்பட்ட ஆய்வு செம்மை பெறுவதற்கு வேண்டிய அரிய பல கருத்துரைகளை வழங்கி என்னை நல்வழிப்படுத்திய வேல்ஸ் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத்தலைவர் முனைவர் பேராசிரியர் **வெ. சிவசங்கரன்** அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன் .

எனது முனைவர் பட்ட ஆய்விற்குத் தேவையான நூல்கள் குறித்த ஆலோசனைகள் வழங்கி, துணை நின்று உதவி புரிந்த வேல்ஸ் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை மூத்த பேராசிரியர் முனைவர் **க. கமலா** அவர்களுக்கும், ஆய்விற்குத் தேவையான கருத்துரைகளை வழங்கிய இணைப்பேராசிரியர் முனைவர் **மோகன்** அவர்களுக்கும், ஆய்விற்கு உகந்த பல ஆலோனைகளைத் தந்து உதவிய உதவிப்பேராசிரியர் முனைவர் **ம. பிரபாகரன்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்து கொள்கிறேன்.

எனது ஆய்வேட்டிற்கு எழுத்துப் பிழை திருத்தம் செய்து கொடுத்து ஆய்வு செம்மையுறுவதற்கு ஒத்துழைப்பு நல்கிய வேல்ஸ் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் **பன்னிருகை வடிவேலன்** அவர்களுக்கும், உதவிப்பேராசிரியர்கள் முனைவர் **ம. பிரகாஷ்** அவர்களுக்கும், முனைவர் **ந. தீபாராணி** அவர்களுக்கும், என் ஆய்வு சிறப்புற அமைவதற்குப் பல நூல்களையளித்து துணைநின்ற வேல்ஸ் **தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும்** என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.

எனது முனைவர் பட்ட ஆய்வேடு நல்ல முறையில் வர வேண்டும் என்று மிகுந்த அக்கறையோடும் அன்போடும் சகோதர பாச உணர்வோடும் நல்லுரைகளை வழங்கிய என் உடன் பிறவா சகோதரி பண்பிற்கும் பாசத்திற்கும் உரிய வேல்ஸ் பல்கலைக்கழக பொறியியல் துறை உதவிப் பேராசிரியர் முனைவர் **பா. விஜயலட்சுமி** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்கு வேண்டிய நூல்களைத் தந்து உதவிய நூலகங்களான, **சென்னைப் பல்கலைக்கழக நூலகம், ரோஜா முத்தையா நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், மறைமலை அடிகள் நூலகம், கன்னிமாரா பொது நூலகம், சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழக நூலகம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம், வேல்ஸ் பல்கலைக்கழக நூலகம்** என அனைத்து **நூலக அலுவலர்களுக்கும்** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் வாழ்வின் பல்வேறு நிலைகளிலும் துன்பங்களிலும் இன்னல்களிலும் எனக்கு துணைநின்று உதவிய என் துணைவியார் திருமதி **ரா. எழிலரசி,** பி.எஸ்சி., பி.எட். அவர்களுக்கும், நான் இத்தகைய நிலையை எட்டுவதற்கு, என்னைப் படிக்கவைத்து ஆளாக்கிய என் உயிரிலும் மேலான என் தாய் திருமதி **ரா. பானுமதி** அவர்களுக்கும், என் தந்தை திரு. **ரா. ராஜேந்திரன்** அவர்களுக்கும், என் **குடும்ப சகோதர, சகோதரி**க்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பிழைதிருத்தம் செய்து உதவிய உதவிப்பேராசிரியர் முனைவர் **மகேந்திரன்** மற்றும் உதவிப்பேராசிரியர் **விஜயலட்சுமி** அவர்களுக்கும் அச்சுப் பதிப்புப் பணி செய்து கொடுத்த டுடே கிராபிக்ஸ் நிறுவனர் திரு. **ரெ. பாபு** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ரா. ராஜா**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இ. அ. | - | இறையனார் அகப்பொருள் |
| இளம். | - | இளம்பூரணர் |
| உ.வே.சா. | - | உ.வே. சாமிநாதையர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| அகத். | - | அகத்திணையியல் |
| கிளவி. | - | கிளவியாக்கம் |
| ஐங்குறு. | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| குறள். | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | - | சீவக சிந்தாமணி |
| நச்சி. | - | நச்சினார்க்கினியர் |
| நம்பி. | - | நம்பியகப்பொருள் |

| | | |
|---|---|---|
| நற். | - | நற்றிணை |
| நூற். | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| ப.பா. | - | பட்டினப்பாலை |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பொருந. | - | பொருநாற்றுப்படை |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| மணி. | - | மணிமேகலை |
| ம. கா. | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| மு. பா. | - | முல்லைப்பாட்டு |
| மு.வ. | - | மு. வரதராசனார் |
| மேலது. | - | மேற்குறிப்பிட்ட நூல் |
| பக்க. | - | பக்கங்கள் |

# பொருளடக்கம்

# முன்னுரை

உலகிற்கு இயற்கை வழங்கிய பெருங்கொடையாகவும் ஆற்றல் வாய்ந்ததாகவும் ஆக்க, அழிக்க முடியாததாகவும் விளங்குவது நீராகும். உலகில் தோன்றிய அனைத்து உயிரினங்களும் நீரின்றி வாழ்தல் இயலாது. இத்தகைய நீரைப் பற்றிய பதிவுகள் சங்க இலக்கியத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றன. பண்டைய கால மக்களின் வாழ்வியலைக் கூறும் சங்க இலக்கியத்தில் நீரின் ஆளுமைப் பண்புகளை அகப்புற இலக்கியங்களில் எடுத்தாளப்பெற்றுள்ளமையைக் காண முடிகின்றது. நீரினை உவமைப் பொருளாகவும், இறைச்சிப் பொருளாகவும் பயன்படுத்தப் பெற்றுள்ளமையை இலக்கியங்களின் வழியே அறியமுடிகின்றது. சங்க இலக்கியங்களை நுட்பமாக ஆராய்கின்றபோது பழந்தமிழர்களின் அறிவுசார் திறன்களையும் தொழில்நுட்ப மேம்பாட்டு உத்திகளையும் உணரமுடிகின்றது.

சங்ககாலத் தமிழ்ச்சமூகம் உணவு உற்பத்தி, பொருளாதாரம், நாகரீகம் முதலானவற்றில் வளர்ச்சி பெற்றிருந்ததற்கு அவர்களின் நீரியல் சிந்தனை அடிப்படைக் காரணமாக அமைந்தது என்றே கூறலாம். இயற்கை வளங்களின் உயிரினப் பெருக்கத்திற்கும், வளர்ச்சி நிலைகளுக்கும் நீரே ஆதாரமாக இருந்து வந்ததை நம்மால் உணரமுடிகின்றது. பண்பாட்டு நிகழ்வுகளிலும், வேளாண் உற்பத்தி நிலைகளிலும் நீரின் இன்றியமையாமையை இலக்கியங்களின் பதிவுகள் வழி அறிய முடிகின்றது.

மேலும் பழந்தமிழர்கள் அகவாழ்விலும், புறவாழ்விலும் நீர் ஊடாடிய பாங்கு குறித்ததான செய்திகளைச் சங்ககாலப் புலவர்களின் செய்யுட்களின் வழியே அறியமுடிகின்றது. நீரில்லாக் காலங்களில் பழந்தமிழர்கள் பாசனத்தொழிலில் மேற்கொண்ட நீரியல் நுட்பக்கூறுகளையும் உணவு உற்பத்தியில் மேம்பட்டுத்

திகழ்ந்த ஆளுமைத்திறன்களையும் நீர்மேலாண்மையில் கண்ட உத்தி முறைகளையும், தொழில்நுட்பக் கூறுகளையும் ஆராய்வதாக இவ்வாய்வு அமையப்பெறுகின்றது.

**ஆய்வுத் தலைப்பு**

***சங்க இலக்கியத்தில் நீரியல் சிந்தனைகள்*** என்னும் இவ்வாய்வின் தலைப்பின்கீழ் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களில் பாடப்பெற்றுள்ள இயற்கை வளங்கள், ஐம்பூதங்களின் இயல்பு போன்றவை குறித்தும் சங்க அகப்புற வாழ்வில் நீரின் ஆளுமைப்பண்புகளும், அன்றாட வாழ்விலும் வேளாண் உற்பத்தி நிலைகளிலும் சங்ககாலத் தமிழர்கள் மேற்கொண்ட நீர்மேலாண்மை மற்றும் தொழில்நுட்பத்திறன்களில் சிறப்புற்றுத் திகழ்ந்த நீரியல் சிந்தனை குறித்தும் ஆராயப்படுகின்றது.

**ஆய்வின் எல்லை**

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு ஆகிய பதினெட்டு நூல்கள் மட்டும் ஆய்வு எல்லையாகக்கொண்டு ஆய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளது.

**ஆய்வுத் தரவுகள்**

சங்க இலக்கிய நூல்கள் ஆய்வின் முதன்மை ஆதாரங்களாகவும் பிற தமிழிலக்கிய நூல்கள், அறிஞர்களின் நூல்கள், இதழியல் செய்திகள், ஆய்வுக்கட்டுரைகள் ஆகியன துணைமை ஆதாரங்களாகவும் அமைகின்றன.

**ஆய்வு நோக்கம்**

சங்ககால மக்களின் நாகரீக வளர்ச்சி நிலைகளிலும், அவர்கள்தம் பண்பாட்டு விழுமியங்களிலும், சமூகக் கட்டமைப்பிலும், வேளாண் உற்பத்தி நிலைகளிலும் நீரினை மேலாண்மை செய்த பாங்கும், தொழில்நுட்பமும் குறித்த நீரியல் நுட்பக் கூறுகளை ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுப் பயன்**

சங்ககாலத் தமிழர்கள் இயற்கையின்மீது கொண்டிருந்த பேரார்வத்தையும் தம் வாழ்வியல் சூழல்களுக்கு இயற்கை வளங்களைப் பயன்படுத்திக்கொண்ட நிலையினையும், அவ்வியற்கை வளங்களுள் நீரினைப் பாடுபொருளாகக் கொண்டு சங்கப் புலவர்கள் பாடிய அகப்புற வாழ்வியல் செய்திகளையும் ஆராய்வதோடு, நீரினை மேலாண்மை செய்து நீர்த்தேக்கத் தொழில்நுட்பக் கருவிகளைக்கொண்டு வேளாண்மையில் மேற்கொண்ட நீரியல் சிந்தனைகளை அறியச்செய்வது இவ்வாய்வின் பயனாக அமைகின்றது.

**ஆய்வு அணுகுமுறை**

சங்க இலக்கியத்தில் நீரியல் சிந்தனைகள் என்னும் இவ்வாய்வில் சங்ககால மக்களின் வாழ்வியல் முறைகளையும், நீரியல் பற்றிய சிந்தனைகளை எடுத்துரைக்கும் விதமாக விளக்கமுறை ஆய்வும் மேற்கொள்வதோடு சங்ககால மன்னர்கள் மேற்கொண்ட நீரியல் ஆளுமைத் திறன்களையும் ஆராயும் விதமாக வரலாற்று முறை அணுகுமுறையையும் தற்கால நீரியல் சிந்தனைகளை ஒப்பிட்டு ஆராயும் விதமாக ஒப்பீட்டு ஆய்வு அணுகுமுறையையும் ஆகிய மூன்று ஆய்வு அணுகுமுறைகளையும் இவ்வாய்வில் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு கருதுகோள்**

பண்டையத் தமிழர்களின் வாழ்வியல் பனுவலாக விளங்கும் சங்க இலக்கியத்தில் இயற்கை வளங்கள் குறித்தும், அக்கால மக்களின் அகப் புறவாழ்வில் நீர் ஊடாடிய பாங்கினையும், கிடைக்கப்பெற்ற நீரினைக்கொண்டு வேளாண்மையில் மேற்கொண்ட நீர்மேலாண்மை உத்திகள் குறித்தும், பாசன வசதிக்காகப் பயன்படுத்திய அறிவுசார் தொழில்நுட்பக் கூறுகள் போன்ற நீரியல்சார் பதிவுகளை எடுத்துக்கூறி, இக்கால நவீன நீர்மேலாண்மை மற்றும் தொழில்நுட்ப அறிவியல் சிந்தனைகளுக்கும்

அடித்தளமாகத் தோற்றுவாயாக சங்ககால நீரியல் உத்திமுறைகளே மேற்கொள்ளப் படுகின்றன என்ற கருதுகோளுடன் இவ்வாய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளன.

**ஆய்வுச் சிக்கல்**

சங்ககாலத் தமிழர்கள் மேற்கொண்ட நீரியல் மேலாண்மைத் திட்டங்களுக்கும், தற்காலத்தில் மேற்கொள்ளப்படும் நீரியல் மேலாண்மைத் திட்டங்களுக்கும் இடையேயுள்ள திட்ட வேறுபாட்டினைக் குறிப்பிடுகையில் சிக்கல் எழுந்தது. தற்காலத்தில் வகுக்கப்பட்டு பின்பற்றப்படும் நவீன கால நீரியல் மேலாண்மைத் தொழில்நுட்பத் திட்டங்களுக்கெல்லாம் தோற்றுவாய் களமாக இருப்பவை சங்கத் தமிழர்களின் நீரியல் திட்டங்களின் எச்சமே என்பதனையும் இவ்வாய்வில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**ஆய்வுக் கோட்பாடு**

கோட்பாடு என்பதை ஒரு கருத்தாக்கம் எனக் கொள்ளலாம். சங்ககாலத் தமிழர்கள் மேற்கொண்ட நீரியல் மேலாண்மை என்பது கிடைக்கும் நீரினைக்கொண்டு எவ்வாறு சேகரிப்பது, பயன்படுத்துவது, நீர்நிலைகளைத் தோற்றுவித்து அதனைப் பிற்காலத் தலைமுறையினருக்கு எவ்வகையில் பாதுகாத்து உரியமுறையில் வழங்குவது போன்றவற்றினைக் நோக்கமாகக்கொண்டு வாழ்ந்த சங்கத் தமிழர்களின் வாழ்வியல் குறித்தச் செய்திகளை ஆராய்வதே இவ்வாய்வின் கோட்பாடாகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியத்தில் நீரியல் சிந்தனைகள் குறித்த இவ்வாய்வேட்டின் பொருண்மையில் இதற்கு முன்பாக பல முனைவர் பட்ட ஆய்வேடுகளும் நூல்களும் பேசுபொருள்கள் ஆகியுள்ளன. குறிப்பாக டாக்டர் மு. வரதராசனார் சங்க இலக்கியத்தினை ஆய்ந்து **சங்க இலக்கியத்தில் இயற்கை** என்னும் பொருண்மையில் முனைவர் பட்டம் பெற்றுள்ளார்.

பின்வரும் ஆய்வுகளும் இவ்வாய்வின் முன்னோடி ஆய்வுகளாகக் கொள்ளத்தக்கவை.

**சங்க இலக்கியங்களில் ஐம்பூதங்கள்**

ஆய்வாளர். தே. ரேவதி, எம் .ஏ., எம். பில்., மார்ச்- 2011

எத்திராஜ் மகளிர் கல்லூரி, சென்னை -08

**சங்க இலக்கியத்தில் நீரும் நீர்மேலாண்மையும்**

ஆய்வாளர். செ. அஜீபா,

தியாகராசர் கல்லூரி (தன்னாட்சி) மதுரை,

அக்டோபர்- 2013.

**சங்க இலக்கியத்தில் நீர்மேலாண்மை**

ஆய்வாளர் மு. பரமேஸ்வரி,

நந்தனம் அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி (தன்னாட்சி) சென்னை -35,

பிப்ரவரி- 2020.

போன்றவை முன்னாய்வுக் களங்களாக அமையப்பெற்றுள்ளன.

**ஆய்வேட்டின் இயல்பகுப்பு**

**முன்னுரை**

இயல் -1 **சங்க இலக்கியத்தில் இயற்கை**

இயல்-2 **சங்க இலக்கிய அகவாழ்வில் நீரியல் சிந்தனைகள்**

இயல் -3 **சங்க இலக்கியப் புறவாழ்வில் நீரியல் சிந்தனைகள்**

இயல் -4 **சங்க இலக்கியத்தில் நீரியல் மேலாண்மையும் தொழில்நுட்பமும்**

**முடிவுரை**

# சங்க இலக்கியத்தில் இயற்கை

இயற்கை என்பது தன்னியல்பாகக் காணப்படும், புறவெளித்தோற்றம் என்று கூறலாம். தன்னியல்பாக வெளிப்பட்டுப் பின் மறையும் பொருட்களும், அவை குறித்தான இயக்கநிலையும் காலவேறுபாட்டுக் கூறுகளும் இயங்கிடமும் போன்ற இவையனைத்தையும் இணைத்து உள்ளடக்கியதே இயற்கை என்கிறோம். மனிதரின் சக்தியின்றித் தானே தோற்றம் பெற்ற பொருள்கள் அனைத்தும் இயற்கை எனப்படும்.

சங்ககாலத்தில் வாழ்ந்த மக்கள் இயற்கையோடு ஒன்றிணைந்த வாழ்வினை நடத்தினர். அவ்வகையில் இயற்கை குறித்த விளக்கங்களையும், இயற்கை சார்ந்த பொருள்கள் பற்றியும், இயற்கையின் இன்றியமையாமை, பயன்பாடு குறித்தும், சங்கப் பாடல்களில் புலவர்கள் இயற்கையைக் குறித்துப் பாடப்பெற்ற செய்திகளைப் பொதுப்படையாகவும் இவ்வியல் ஆராய்வதோடு, ஐம்பூதங்களின் சிறப்புகள் குறித்தும், இயற்கை சார்ந்த பிறபொருள்களின் சிறப்புகளை எடுத்துரைப்பதுமாக இவ்வியல் அமையப்பெறுகின்றது.

**இயற்கை விளக்கம்**

இயற்கை என்ற சொல்லுக்கு லத்தீன் மொழியில் **நேட்சுரா** என்பதாகும். இச்சொல்லின் அடிப்படையில் ஆங்கிலத்தில் தோன்றியதே **நேச்சர்.** நேச்சர் என்பதற்குத் தேவையான பண்புகள், பிறவிப் பண்புகள் என்று பொருள் கொள்ளப்படுகின்றது. பழந்தமிழ் இலக்கியங்களில் பிறவி, பிறப்பு என்றும் பொருள் கொள்ளப்பட்டுள்ளது. நேச்சர் என்ற சொல் பல்வேறு பொருள்களைக் கொடுப்பினும்

நிலவியல் மற்றும் வனவியல் சார்ந்த பொருட்களையும் அவற்றைச் சார்ந்த தாவரங்கள் மற்றும் விலங்குகள் வாழும் இருப்பிடத்தையும் குறிக்க உலகப்பொதுச் சொல்லாக **இயற்கை** எனும் சொல் குறிப்பதாகவும் கருதலாம்.

இயற்கை என்னும் சொல்லிற்கு,

***இலக்கணம், பான்மை, சுபாவம், வழக்கம், நிலைமை, கொள்கை என்று பல பொருள்களை உடையது***[1] எனக் குறிப்பிடுகிறது. ***மனிதனால் உண்டாக்கப்படாமல் தானாகவே உண்டாகும் மழை, காற்று, இடி போன்றவற்றைப் பொதுவாகக் குறிக்கும் சொல் இயற்கை***[2] என விளக்கம் அளிக்கின்றது. இயற்கை என்பது எங்கும் நீக்கமற நிறைந்து விளங்குவதாகும். இயற்கை என்ற சொல்லிற்குப் பலரும் பலவிதமான பொருள்களைக் குறிப்பிட்டுள்ளனர். தொல்காப்பியர் இயற்கை குறித்து இவ்வாறு குறிப்பிடுகின்றார்.

***இயற்கைப் பொருளை இற்றென கிளத்தல்*** [3]

சங்க இலக்கியத்தில் இயற்கை என்னும் சொல் பன்னிரண்டு இடங்களில் எடுத்தாளப்பெற்றுள்ளது. மிகுதியான இயல்பு என்னும் பொருளிலும், ஓரிடத்தில் மட்டும் இயல்பு இயற்கையை நேச்சர் என்ற பொருள் தருமாறு ஆளப்பெற்றுள்ளது. இயற்கையைக் குறித்து அறிஞர்கள் கூறும் கருத்துக்கள் இங்கு நோக்கத்தக்கது.

***மழை, ஆறு, காடு, ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் அனைத்தும் இயற்கை என்பர். மேலும் புயலுக்குத் தண்மையும், நெருப்புக்கு வெம்மையும் இயற்கை என்றும் விளக்கமளிப்பார்*** [4] திரு வி. க.

*உலகம் தோன்றியபோது தானாகத் தோன்றிய பொருள்களே இயற்கை* [5] என்று சா. மல்லிகா குறிப்பிடுகிறார்.

ராம. குருநாதன் அவர்கள் இயற்கை குறித்துக் கூறுகையில் *மனிதனும் இயற்கையும் வேறல்ல என்னும் உணர்வை அளிப்பதுதான் இயற்கை நெறியாகும். நீர் நில இயைபின் பெற்றிபோல் இயற்கையும் மனித இயைபும் இரண்டறக் கலந்து நிற்பன* [6]

எனவே இயற்கை என்பதும் உலக அமைப்பு என்பதும் ஐம்பூதங்களும் மரம், செடி, கொடி போன்றனவும் நீர்வாழ்வன, ஊர்வன, பறப்பன, விலங்குகள் முதலிய உயிரினங்களும், மனிதனும் இயற்கைப் பொருள்களில் அடக்கம் என்பது புலனாகின்றது.

**இயற்கைச் சூழல்**

பண்டைத் தமிழர்களின் வாழ்க்கை என்பது காதலும் வீரமும் கொண்டு இயற்கை அழகு நிரம்பப் பெற்றது அவர்களின் வாழ்விற்கும் இயற்கைக்கும் நெருங்கிய தொடர்புண்டு. தான் வாழ்கின்ற நிலத்தின் இயல்பிற்கேற்றவாறு வாழ்க்கை அமையும் என்கின்ற சிறந்த கொள்கையை உடையவர்கள். இயற்கையோடு இயைந்த எளிய இனிய வாழ்வினை வாழ்ந்தவர்கள் என்பதற்குச் சான்றாக அமைவன சங்க இலக்கியங்களேயாகும்.

இயற்கையின் ஏனைய நிகழ்வுகளிலிருந்து மனிதனின் செயல்பாடுகள் முற்றிலும் மாறுபட்டவையேயாகும். இயற்கை என்ற சொல் நம்மைச்

சுற்றியிருக்கின்ற மனிதனால் உண்டாக்கப்படாத நிலம், நீர், காற்று, வானம், தீ ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது எனக்கொள்ளலாம்.

இதில் அஃறிணை, உயர்திணை உயிரினங்களின் இயக்க நிலைகளும் அடங்கும். அறிவியலின் மிகப்பெரிய பகுதியே இயற்கையை ஆய்வு செய்வதாகும். மனித இனமும் இயற்கையின் ஒரு பகுதியே.

இன்று இவ்வுலகில் நாம் காணும் அனைத்தும் இயற்கையின் படைப்புகளேயாகும். வளர்ந்து வரும் நாகரிக வளர்ச்சிக்கு மத்தியில் இயற்கை வளத்தை மனிதன் அறிவியல் வளர்ச்சி என்ற பெயரில் சிதைத்தாலும் இயற்கையானது தன்னை நாளுக்கு நாள் புதுப்பித்துக்கொண்டே வருகின்றது.

இந்த இயற்கை வளத்தினை மனித இனம் வாழ்வதற்கு மட்டுமல்லாது அருவிகள், மரங்கள், பறவைகள், விலங்குகள் என அனைத்திற்குமான பங்களிப்பாக இயற்கை திகழ்ந்து வருகின்றது. ஆனால் மனித இனமோ தன் சுயவாழ்விற்காக இயற்கைமீது தாக்குதல் நடத்தி வளங்களை அழித்த போதிலும் மனிதனுக்குப் பேரழிவினை எப்போதும் தொடர்ந்து கொடுப்பதில்லை.

இவ்வாறு மனிதன் தன் வளர்ச்சி நிலையினை மட்டும் எண்ணிக்கொண்டு இயற்கையின் நிலையைக் கவனிக்காததன் விளைவே தற்போது புவி வெப்பமயமாதல் உள்ளிட்ட பிரச்சனைகளுக்குக் காரணமாக அமைந்துள்ளது. இருப்பினும் இயற்கை, தன்னை மாற்றியமைத்துக்கொள்ள தவறவில்லை.

**ஐம்பூதங்கள் விளக்கம்**

ஐம்பூதங்களால் உருவானது உலகம் என்பதை அறிவியல் உலகத்திற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே எடுத்துக் கூறியவர்கள் நம் பழந்தமிழர்கள். இதனைத் தொல்காப்பியரும் இவ்வுலகம் ஐம்பூதங்களினால் இயங்குகின்றது என்பதை இந்நூற்பா மூலம் குறிப்பிடுகிறார்.

> ***நிலம் தீ நீர் வளி விசும்போடு ஐந்தும்***
> ***கலந்த மயக்கம் உலகம் ஆதலின்***[7]

தொல்காப்பியர் ஒரு விண்வெளி விஞ்ஞானி போன்று உலகின் தோற்றத்தை ஆராய்ந்துள்ளார். சங்கப் புலவர்களும் தாம் பாடிய பாக்களில் ஐம்பூதங்களின் தோற்றம் குறித்து பாடியுள்ளதனை பின்வரும் பாடல்கள் எடுத்துரைப்பதன் வழி அறியலாம்.

> ***கரு வளர் வானத்து இசையின் தோன்றி,***
> ***உரு அறிவாரா ஒன்றன் ஊழியும்;***
> ***உந்து வளி கிள்ர்ந்த ஊழ் - ஊழ் ஊழியும்;***
> ***செந் தீச்சுடரிய ஊழியும்; பனியடு***
> ***தண் பெயல் தலைஇய ஊழியும்; அவையிற்று***
> ***உள் முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு,***
> ***மீண்டும் பீடு உயர்பு ஈண்டி, அவற்றிற்கும்***
> ***உள்ளீடு ஆகிய இரு நிலத்து ஊழியும்***[8]

என்று கூறப்பட்டுள்ளது. மேற்கூறப்பெற்ற பாடலின்வழி வானிலிருந்து காற்றும் காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் தோன்றிய நிலைகளை எடுத்துரைக்கின்றது. மேலும் கதிரவனிலிருந்து பிரிந்த பூமி நீண்ட காலத்திற்கு

நெருப்புக் கோளமாக இருந்தது என்றும், அதுவே காலப்போக்கில் சிறிது சிறிதாகக் குளிர்ந்து பனிப்படலமாக மாறி, பின் நெடுநாட்களுக்குப் பிறகு நிலம் தோன்றியது என்றும், உலகத்தின் தோற்றம் குறித்த பல அறிவியல் உண்மைகளை விளக்குகின்றது. அறிவியல் தொழில்நுட்பம் வளராத அக்காலத்தில் அண்டம் குறித்த நம் பழந்தமிழரின் சிந்தனை நம்மை வியக்கச் செய்கிறது.

மழைபெய்யும் முறை மழை குறித்த பழந்தமிழர்களின் நீரியல் சிந்தனை பற்றி நன்கு அறிந்திருந்தனர் என்பதை,

*நிறை கடல் முகந்து உராய், நிறைந்து, நீர் துளும்பும் தம்*

*பொறை தவிர்பு அசைவிடப் பொழிந்தன்று,வானம்;* [9]

என்ற பாடலடியில் முகில்கள் கடலின்கண் உள்ள நீரை முகர்ந்துகொண்டு வந்து ஊழின் முடிவின்கண் முழுகுவிக்க முயன்றதுபோல் மழை பெய்தது என்ற கருத்து கூறப்பட்டுள்ளதனைக் கொண்டு அக்காலத் தமிழர்களின் நீரியல் சிந்தனையை அறிய முடிகின்றது.

இந்தப் பிரபஞ்சமானது பஞ்சபூதங்கள் எனப்படும் ஐம்பூதங்களால் அமையப் பெற்றுள்ளது. இவற்றுள் அனைத்து ஜீவராசிகளும் அடங்கும். வானம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய கூட்டுச் சேர்க்கையினால் இவ்வுலகம் நிகழப் பெற்றுள்ளது. இந்தப் பஞ்சசீகக் கரத்தினால்தான் உலகமும் ஏனைய உயிர்களும் தோன்றின. இதனை உணர்ந்துதான் சங்கப் புலவரும் தாம் இயற்றிய பாடலில் உலகின் தோற்றத்தைக் கூறி, சேர மன்னனைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

*மண் திணிந்த நிலனும்,*
*நிலன் ஏந்திய விசும்பும்,*
*விசும்பு தைவரு வளியும்,*
*வளித் தலைஇய தீயும்,*
*தீ முரணிய நீரும், என்றாங்கு*
*ஐம்பெரும் பூதத்து இயற்கை*[10]

மண்ணின் திணிவாக இருக்கும் நிலம், இந்த நிலத்தை ஏந்திக் கொண்டிருக்கும் விசும்பு, இந்த விசும்பைத் தடவிக் கொடுக்கும் காற்று, காற்றில் பற்றி எரியும் தீயோடு மாறுபட்டிருக்கும் நீர், இவை ஐம்பெரும்பூதங்கள். இவற்றின் இயற்கைப் பாங்குகளோடு நீ ஒத்திருக்கிறாய் என்று பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனைப் புலவர் வாழ்த்துகின்றார்.

**வானம்**

உலகின் ஐம்பூதங்களில் ஒன்றாக முதல் பூதமாகப் பெரிதும் போற்றப்படுவது வானமாகும். ஐம்பூதங்களில் வளி, தீ, நீர், நிலம் போன்ற நான்கு பூதங்கள் தோன்றவும், ஐம்பூதங்கள் முழுவதும் நிறைந்து விளங்குவதற்கு வான்வெளியே முதன் காரணமாக இருக்கின்றது. அவ்வகையில் வானவெளியில் தீ முதலான நான்கு பூதங்களின் கூட்டுச்சேர்க்கையினால் உண்டாக்கப்பெற்ற கோள்கள், விண்மீன்கள், தூசிப்படலங்கள் முதலானவை பரவியுள்ளன. அவ்வகையில் ஐம்பூதங்களின் ஆகச் சிறந்த கூட்டுச்சேர்க்கையாக நாம் வாழும் பூமியானது விளங்குகின்றது.

வியன் என்னும் உரிச்சொல்லினின்று தோன்றியதே வானம் என்னும் சொல்லாகும். தொல்காப்பியர் **வியன்** என்னும் சொல்லுக்கு அகலம் என்று பொருள் உணர்த்துகின்றார்.

*வியன் என் கிளவி அகல பொருட்டே*[11]

பரந்த வளியை உணர்த்தும் வான் என்ற சொல் அம் என்னும் விகுதியைப் பெற்று வானம் ஆயிற்று. வானத்தைக் குறிக்கும் மற்றொரு பெயர் **விண்** என்னும் சொல்லையும் தொல்காப்பியர் பயன்படுத்தியுள்ளார்.

*விண்என வரூ உம் காய பெயர்*[12]

என்ற நூற்பாவில் குறிப்பிட்டுள்ளார்.

பூமியின் ஏனைய உயிரினங்களுக்கு மத்தியில் ஆதிக்கம் செய்கின்ற உயிரினமாக வாழ்பவன் மனிதனே ஆவான். அவனின் சிந்தனைத்திறன் காரணமாக பல துறைகளை ஆராய முற்பட்டான். அவ்வகையில் பழங்கால மனிதன் மேற்கொண்ட ஆராய்ச்சிகளுள் வானத்தைப்பற்றிய ஆராய்ச்சியும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். வானியல் என்பது வானவெளியைப் பற்றி ஆய்வு செய்வதாகும். வானியல் ஆராய்ச்சியில் பண்டையத்தமிழர் பழங்காலந்தொட்டு சிறந்து விளங்கியமையை நம் தமிழ் இலக்கியங்களின் வழி அறியலாம். அதே சமயம் வானியல் சார்ந்த நிகழ்வுகளில் அதீத நம்பிக்கையும் கொண்டிருந்தனர்.

சங்க இலக்கியங்களிலும் அதன்பின் தோன்றிய இலக்கியங்களிலும் வானியல் சார்ந்த குறிப்புகள் இடம்பெற்றுள்ளமையே பழங்காலத் தமிழர்களின் வானியல்

நிகழ்வுகளுக்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். குறிப்பாகச் சங்கப்புலவர்கள் வானியல் சார்ந்த கலையில் சிறந்து விளங்கியுள்ளனர். தாம் இயற்றிய பாடல்களில் கோள்கள், அவற்றின் இயக்கம், விண்மீன்கள், அவற்றின் நிலை போன்ற செய்திகளை, தாம் இயற்றிய பாடல்களோடு பதிவிட்டுள்ளனர். அவ்வகையில் சங்ககால மக்கள் தம் வாழ்வியலில் வானியல் சார்ந்த நிகழ்வுகளில் எத்தகைய நம்பிக்கைகளையும், கணிப்புகளையும் அறிந்து வைத்துள்ளனர் என்பதை ஆராயும் விதமாக பின்வரும் செய்திகள் ஆராயப்பெறுகின்றது.

நூற்றுக்கணக்கான அண்டங்களை தம்முள் கொண்டுள்ள வானம் அளவிட முடியாத அளவிற்கு அதிர்ச்சியை உடையதாய் அகன்று பரந்து விளங்குகின்றது.

**வானம் குறித்த தொன்மை**

வானியல் என்று குறிப்பிடப்படுவது பூமியின் வளிமண்டலப் பகுதிக்குத் தொலைவில் உள்ள கோள்கள், விண்மீன்கள், எரிகற்கள் போன்ற வான் சார்ந்த பொருட்களைப் பற்றிய அறிவியலாகும். அறிவியல் துறைகளில் மிகவும் பழமை வாய்ந்த துறையாகப் போற்றப்படுவது வானியல் துறையாகும்.

பழந்தமிழர்களின் வானியல் அறிவு என்பது பருவ காலங்களை அறியவும், நேரத்தைக் கணக்கிடவும் அவற்றின் சுழற்சிக்கால அளவினைக் கணிக்கவும் இடைவிடாது மேற்கொண்டு கணித்ததன் வாயிலாகத் தோன்றியது வானியல் சிந்தனையாகும். இத்தகைய வானிலை சிந்தனை தோன்றிய காலந்தொட்டு அது தொடர்பான சில கோட்பாடுகளும் வகுக்கப்பட்டு பின்பற்றப்பட்டு வருகின்றன.

தொன்மையான நாகரிகமும், பண்பாடும் கொண்ட சமூகங்களில் வானியல் அறிவு வளர்ச்சி பெற்றிருந்தமையைக் காணலாம்.

பண்டைத்தமிழர் கோள்கள், விண்மீன்கள் குறித்த புராணக்கதைகள் வழக்கத்தில் இருந்துள்ளன. இன்றளவும் கோள்கள் மற்றும் விண்மீன்களின் இயக்கத்தை வைத்து நன்மை, தீமைகளை ஆராய்கின்ற நம்பிக்கை பண்டைய தமிழர்களிடம் நிலவி வருவதைக் காணமுடிகிறது. இதுவே பின்னாளில் நம்பிக்கை சார்ந்த சோதிடக் கலையாக உருப்பெற்றுள்ளது. பண்டைய தமிழர்கள் வானியல் துறையில் பழங்காலந்தொட்டு குறிப்பிடத்தக்க அளவிற்கு வளர்ச்சி பெற்றிருந்தனர் என்பதனைப் பின்வரும் அறிஞர்களின் கருத்து வலுச்சேர்ப்பதாக அமையப் பெறுகின்றது.

மேலை நாட்டுப் பேரறிஞரான அரிஸ்டாட்டில், ***வானியல் என்னும் அண்ட வெளியானது யுனிவர்ஸ் (நிலம், நீர், காற்று, நெருப்பு) என்னும் தனிப்பொருட்களின் கட்டமைப்பு என்று விளக்கியுள்ளார்***[13].

இந்த வகையில் ஐம்பூதங்களின் மிகச் சிறந்த கூட்டமைப்பாக நாம் வாழும் பூமி திகழ்கிறது. வானியல் அறிஞர் கோல்புரூக் என்பார், ***இந்தியர்களே வானியல் ஆய்வின் முன்னோடி. இதில் தமிழர்களுக்கும் பெரும் பங்கு உள்ளது***[14] என்று குறிப்பிட்டுள்ளார்.

அகன்று பரந்து காணப்படுகின்ற வான்வெளியில் தற்கால வானியல் அறிஞர்கள் நவீனத் தொழில்நுட்பக் கருவிகளைக்கொண்டு புத்தம் புதிய

நிகழ்வுகளை நாளுக்கு நாள் உணர்த்தியவண்ணம் மேற்கொள்ளப்பட்டு வருவதை காணமுடிகின்றது. எவ்வித அறிவியல் தொழில்நுட்பம் வளராத பண்டைய காலத்தில் வாழ்ந்த சான்றோர்களால் வரையறுக்கப்பட்ட வானியல் கோட்பாடுகள் தற்கால வானியல் அறிஞர்களை வியப்பூட்டும் நிலையில் இருப்பதை உணரமுடிகின்றது. மேலும் வானியல் என்பது பூமியின் வளிமண்டலப் பகுதிக்குத் தொலைவில் இருக்கின்ற எரிகற்கள், விண்மீன்கள், கோள்கள் பற்றிய அறிவியலாக அமையப்பெற்றது.

தற்காலப் பழமை வாய்ந்த துறைகளில் பெரிதும் போற்றப்படுவது வானியல் துறையாகும். வானியலைப் பற்றிய அறிவு என்பது பூமியின் பருவகால மாற்றங்களை உணரவும், அவற்றின் சுழற்சிக்காலநிலையைக் கணிக்கவும், நேரத்தை அறிந்து கொள்ளவும் போன்ற நிகழ்வுகளைத் தொடர்ச்சியாக உற்றுநோக்கியதன் விளைவே இத்தகைய வானியல் பற்றிய அறிவாகக் கருதப்படுகின்றது.

**காற்று**

ஐம்பூதங்களில் (வானம், காற்று, நிலம், நீர், நெருப்பு) காற்று ஒன்றே முதலாவதாக வைத்துச் சிறப்பிக்கப்படுகிறது. ஏனெனில் இக்காற்றிற்கு வடிவம், நிறம், சுவை போன்ற குணங்கள் ஏதுமில்லை. காற்றினைப் புலன்களால் மட்டுமே உணரமுடியும். அறிவியல் அறிஞர்கள் காற்றிற்கு அழுத்த விசை கொண்ட தன்மை இருப்பதினால் அதனைப் பொருளாக ஏற்கின்றனர். ஆனால் நம் பழந்தமிழர்கள்

அறிவியல் தொழில்நுட்பம் வளராத அக்காலத்திலேயே காற்றினைப் பருப்பொருள்களுள் ஒன்றாகச் சேர்த்துள்ளனர்.

*ஒவ்வொரு கன அங்குல அளவு காற்றிலும் சுமார் 49 லட்சம் கோடி மூலக்கூறுகள் உள்ளன*[15]

காற்றின் மூலக்கூறுகளுக்கு இடையே அதிக இடைவெளி மிகுந்திருப்பதால் காட்சிக்குப் புலனாகாதப் பொருளாக இருக்கின்றது. புவியில் நாம் ஒவ்வொருவரும் பல நூறு டன் எடையுள்ள காற்றினைச் சுமந்துகொண்டு வாழ்கின்றோம். வெளியிடத்தே உள்ள காற்றின் அழுத்தமும் அகத்தே இருக்கும் காற்றின் அழுத்தமும் சம அளவினதாக இருப்பதால் நமக்குக் காற்றின் அழுத்தத்தால் பாதிப்பு ஏதும் நிகழ்வதில்லை.

**காற்று விளக்கம்**

பூமியில் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் காற்றினைக் குறித்து அகராதிகளும் கலைக்களஞ்சியமும் விளக்கங்கள் தருவதைக் காணலாம். *புவி மேற்பரப்புக்குச் சார்பான நிலையில் காற்றின் அசைவு*[16] என்று அறிவியல் அகராதி காற்று என்பதற்கான விளக்கம் அளிக்கின்றது.

*உலகிலுள்ள உயிரினங்கள் உயிர் வாழ, சுவாசிக்கும் பூமியைச் சுற்றி நிறைந்திருக்கும் கண்ணுக்குப் புலப்படாத வாயுப் பொருள்*[17] என்று க்ரியாவின் தற்காலத் தமிழகராதி குறிப்பிடுகின்றது.

சுற்றுச்சூழல் களஞ்சிய அகராதி காற்றிற்குத் தரும் விளக்கமானது, *காற்று பூமியைச் சுற்றியுள்ள படலமாகும். பல வழி மக்கள் சேர்ந்த காற்று மண்டலம் பல*

*அடுக்குகளை உடையது. இவை ஒவ்வொன்றும் அடர்த்தி தட்ப வெட்பம் வேதிக்கூறுகள் காற்றின் அசைவு முதலியவற்றில் மாறுபடுகின்றது* [18] என்று குறிப்பிடுகின்றது.

இவ்வுலகினைச் சூழ்ந்திருக்கும் காற்று உயிரினங்களுக்கும் அதன் வாழ்வியல் சூழல்களுக்கும் இன்றியமையாத ஒன்றாக விளங்கி வருவதை மேற்கண்ட கருத்துக்களின்வழி அறியமுடிகின்றது. காற்றுக்குப் பல பெயர்கள் வழங்கப் பட்டிருப்பினும் திவாகர நிகண்டு தரும் பெயர்களான;

*வாதம் கூதிர் கால் வலி கால் வளி*
*ஊதை அனிலம் கோதை நீழல்*
*உள்ளவை மாருதம் மருத்து பவனம்*
*வாடை ஒலியே கூதை உயிர்ப்பே*
*வேற்றலம் கொண்டல் கோடை*[19]

மேற்கூறப்பெற்ற காற்று குறித்த சொற்கள் திவாகர நிகண்டு நூலில் குறிப்பிடப்பெற்றுள்ளமையை அறிய முடிகின்றது.

**காற்று நீராவி**

காற்றில் கலக்கும் பொருட்களில் ஒன்று நீராவியாகும். இந்நீராவியானது வாயு நிலையில் இருக்கும் நீரைக் குறிக்கும். சூரியனின் வெப்ப மிகுதியால் ஆவியாகிச் செல்கின்ற நீர் காற்றிலே கலந்திருக்கும். இத்தகைய அறிவுச் சிந்தனையைப் பழந்தமிழர்களின் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றது.

காற்றிலே கலந்துத் திரிகின்ற நீராவியே மழையாகவும், பனியாகவும் மீண்டும் பூமியை வந்தடைகின்றது என்கின்ற உண்மையைப் பின்வரும் பரிபாடல் எடுத்துரைக்கின்றது.

*நளிர் மலை பூங்கொடி தங்கு புகக்கும்*
*பனிவளர் ஆவியும் போன்ம் மணிமாடத்*
*துண்ணின்று தூய பனிநீ ருடன் கலந்து*
*காறிரி வாக்கும் புகை* [20]

என்னும் பாடலடிகளில் காற்றிலே நீராவி கலந்த செய்தியினை மலைப் பகுதிகளில் வீசுகின்ற காற்றினால் பனித்துளிகள் ஆவியாகிச் செல்லும் என்று குறிப்பிடுதல் வழி அறியமுடிகின்றது.

மேற்கண்ட பாடல் கருத்திற்கேற்ப பின்வரும் அகநானூற்றுப் பாடலும்

*எள்ளற இயற்றிய நிழல்கண் மண்டலத்*
*துள்ளு தாவியிற் பைப்பய நுணிகி*
*மதுகை மாய்தல் வேண்டும்* [21]

என்னும் அகநானூற்றுப் பாடலும் உணர்த்துகின்றது.

காற்றினைக் கண்களால் காண இயலாது. இருப்பினும் அதனதன் தன்மையினைப் புலன்களால் உணரமுடியும். காற்று குளிர்ச்சி, இயக்கம், வெப்பம் ஆகிய மூன்று தன்மைகளைக் கொண்டுள்ளது. இம்மூன்றின் இயக்கமே அதன் முக்கியத் தன்மையாகும். காற்றின் இயக்கத்துக்கேற்ப அதன் வேகமும் விசையும் உண்டாகிறது. பருவகால மாற்றங்களுக்கு உட்பட்டு அதன் குளிர்ச்சியையும் வெப்பத்தையும் ஏற்படுத்துகின்றது. இதனாலேயே குளிர்காலங்களில் வீசும் காற்று

குளிர்ச்சியாகவும் கோடைக்காலங்களில் வீசும் காற்று வெப்பம் மிக்கதாகவும் அமைகின்றது.

காற்றின் இத்தகைய தன்மைகள் குறித்து சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. காற்று ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு இடம்பெறுகின்ற இயல்பினைக் கொண்டுள்ளது. இதனால் அதிலுள்ள மூலக்கூறுகள் மிகுதியான வேகத்துடன் செல்லும் தன்மை கொண்டன. இதனை,

*காற்றின் அழுத்தம் ஓர் இடத்தில் மிகுந்து பிரிதோர் இடத்தில் குறைந்தும் காணப்படுகிறது. மிகுதியான அழுத்தமிக்க காற்று குறைவான அழுத்தம் உள்ள இடத்தை நோக்கிப் பயணிக்கின்றது. இத்தகைய பயணம் பூமி முழுவதும் தொடர்ச்சியாக நிகழ்ந்து கொண்டே இருக்கின்றது. மேலும் தன் வழியில் குறிக்கும் பொருட்களைக் கடந்து செல்லும் தன்மையும் காற்றிற்கு உண்டு. காற்றின் வேகத்திற்கு ஏற்றார்போல் பொருட்களின் அசைவும், அசைவின் அளவுகளும் மாறுபடுகின்றன. இத்தகைய மாறுபட்ட அளவுகளைக் கொண்டு காற்று வன்காற்று, மென்காற்று என இருவகையாக வகைப்படுத்தப்படுகின்றது[22].*

உலகிலுள்ள உயிர்களுக்கும் பொருட்களுக்கும் சேதத்தை விளைவிக்கின்ற காற்றினை வன்காற்று என்றும், எவ்வித சேதத்தையும் ஏற்படுத்தாத காற்றினை மென் காற்று என்றும் குறிப்பிடுவர். குறிப்பிட்ட வட்டாரத்திற்கு உள்ளாக வீசும் வட்டாரக் காற்றினையும் மென்காற்று என்று அழைப்பர்.

**காற்றின் தன்மை**

காற்றின் தன்மை குறித்துச் சங்க இலக்கியங்களில் மிகுதியாகப் பேசப்பட்டுள்ளன. காற்றானது இயங்கிக்கொண்டே இருக்கும் ஆற்றலுடையது என்பதனை, ***ஆறு செல்வளி*** [23] பரிபாடல் குறிக்கிறது. விரைந்து செல்லும் தன்மையுடைய காற்று வெப்ப பாளைய நெற்றுக்களை உதிர்த்துச் சென்றதனை,

*..................வாலிணர்ப் பாலைச்*

*செல்வளி தூக்கலின் இலை தீர்நெற்றம்*

*கல்விழி அருவியின் ஒல்லென ஒலிக்கும்*[24]

மேற்கண்ட பாடலடியில் செல்வளி என்பது காற்றின் தன்மையாகிய இயக்க நகர்வைக் குறிக்கின்றது. மேலும் காற்று ஓரிடம் விட்டு நகர்கின்றபோது அலை அலையாக இடம் பெயர்ந்து நகர்ந்து செல்லும்.

*கரைபாய் வெண்திரை கடுப்பப் பலவுடன்*
*நிரை கால் ஒற்றலின் கல் சேர்பு உதிரும்*
*வரை சேர்மரா அத்து ஊழ் மலர்*[25]

நீரின் அலைகளைப்போன்று அலையலையாக வரிசைப்படி நகர்ந்து வருகின்ற காற்று வெண்கடம்ப மலர்களை மோதி உதிரச் செய்ததனைக் குறிப்பிடுகின்றது. காற்றானது சுழன்று வீசுகின்ற இயல்பினை உடையதாகக் குறுந்தொகை கூறுவதனை,

***அலமரல் அசைவளி*** [26] என்ற பாடல் வழி அறியமுடிகின்றது.

**குளிர் காற்று**

குளிர்காற்று என்பது மழைக்காலம் மற்றும் பனிக்காலங்களில் வீசுகின்றபோது நீர்த்துளிகளை மிகுதியாகத் தன்னகத்தே கொண்டிருக்கும். இதனால் இக்காற்று மிகுந்த குளிர்ச்சி உடையதாக இருக்கும். சங்க இலக்கியங்களில் இக்காற்றினைக் குறித்து,

*பனி மயங்கு அசைவளி* [27]
*சிதர்வரல் அசைவளி* [28]
*தண்துளி அசைவளி* [29]

என்ற பாடல் வரிகளில் அறியலாம். மேலும் இக்குளிர் காற்று அனைத்து உயிரினங்களுக்கும் மிகுந்த துன்பத்தைக் கொடுப்பதாக அமையும். இத்தகையக் குளிர் காற்றினைச் சங்க இலக்கியத்தில் வாடைக்காற்று என்று குறிப்பர்.

**வெப்ப காற்று**

கோடைக்காலத்தில் வெப்ப நிலப்பகுதிகளில் வீசுகின்ற இக்காற்றானது மிகுந்த துன்பத்தைக் கொடுப்பதாக அமையும். சங்க இலக்கியத்தில் பாலை நிலத்தில் வெப்பமிக்கக் காற்று கடுமையாக வீசியதாகப் பின்வரும் பாடல் செய்தி குறிப்பிடுகின்றது.

*வெந்திறற் கடுவளி பொங்காப் போந்தென*
*நெற்று விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்* [30]

மேலும்

*முழங்கழ லசைவளி யெடுப்ப வானத்*
*துருமுப்படு கனலி னிருநிலத் துறைக்கும்* [31]

மிகுந்த வெப்பத்தினால் காற்று விரிவடைந்து இயக்கம் பெறுவதாக மேற்கண்ட பாடல் குறிப்பிடுகின்றது.

**திசை அடிப்படையில் காற்று**

தமிழில் காற்றிற்கு வாடை, தென்றல், கொண்டல், கோடை என்று பலவாறு வழங்கப்பட்டு இருப்பினும் திசையின் அடிப்படையின் காரணமாகவே இவ்வாறு வகைப்படுத்தப்பட்டு இருக்கலாம் என்று திசைக் காற்று குறித்த பெயர்க் காரணத்தை மு.வ. அவர்கள் தன் நூலில்,

***தெற்கு அல்லது தென் என்பதிலிருந்து தென்றல் பிறந்தது; வாடை என்பது தன் பெயரினை வடக்கு அல்லது வட என்பதிலிருந்து பெற்றது; குணக்கு அல்லது குண என்னும் கிழக்குத்திசைப் பெயர் கொண்டதே கொண்டல்; மேலைத்திசையினைக் குறிக்கும் குடக்கு அல்லது குட என்பதை அடியாகக் கொண்டது கோடை[32].***

சங்க இலக்கியத்தில் பயின்று வந்துள்ள நான்கு வகையான திசைக்காற்றுகளாவன;

- வடதிசைக் காற்று - **வாடை**
- தென் திசைக் காற்று - **தென்றல்**
- மேற்கு திசைக் காற்று - **கோடை**
- கிழக்கு திசைக் காற்று - **கொண்டல்**

போன்றவையாகும்.

**வடதிசைக் காற்று**

கார்காலத்தையடுத்து கூதிர்காலத்தில் வீசும் காற்றே வடதிசைக் காற்று; இக்காற்றினைக் குறித்துச் சங்க இலக்கியங்களில் நெடுநல்வாடை மிகுதியாகக் குறிப்பிடுகின்றது. மழையும் பனியும் மிக்க காலத்தில் இக்காற்று வீசுவதனால் அதிக ஈரப்பதத்தைக் கொண்டிருக்கும். இவ்வாறு ஈரப்பதம் மிகுந்த வாடைக்காற்று குளிரையும், நடுக்கத்தினையும் ஏற்படுத்தி அனைத்து உயிர்களுக்கும் துன்பத்தினை வழங்குகின்றது. ஆகையால் இக்காற்றிற்கு வாடை என்றும் உழவை என்றும், ஊதை என்றெல்லாம் அழைக்கப்படுகின்றது. வடதிசையிலிருந்து குளிர்மிகுந்த காற்றினை வீசியதால் வாடை என்று பெயர்பெற்ற காரணத்தை நெடுநல்வாடை குறிப்பிடுகின்றது.

*வடந்தை தண்வளி எறிதொறும்*[33]

வாடைக்காற்றானது கூதிர்காலத்திலும் முன்பனிக் காலத்திலும் வீசியச் செய்தியினை,

*கூதிர் அற்சிரத்து ஊதை தூற்ற*[34]

என்ற பாடல் வரி குறிப்பிடுகின்றது.

முன்பனிக் காலத்தில் வீசுகின்ற வாடைக்காற்று மிக்க பனித்துளிகளோடு மாலை நேரத்தில் வீசும் இயல்பினையுடையது.

*பனிகடி கொண்ட பண்பில் வாடை*
*மருளின் மாலையொடருளின்றி நலிய*[35]

*……………….பையென*
*வடந்தை துவலை தூவ*[36]

*முந்தூ ழாய்மலர் உதிரக் காந்தள்*
*நீடிதழ் நெடுந்துடுப் பொசிய தண்ணென*
*வாடை தூக்கும் வருபனி யற்சிறம்* [37]

மேற்குறிப்பிட்ட பாடல் வரிகளில் முன்பனிக்காலத்தில் வாடைக்காற்று வீசியதனை உணரமுடிகின்றது.

தலைவிக்கு வாடைக்காற்று மழைத்துளியையும் பனித்துளியையும் வீசி துன்பத்தைக் கொடுப்பதோடு வேண்டாத துன்பம் தருகின்ற காற்றாகவும் அமைந்திருந்ததாகப் பின்வரும் பாடலடிகள்,

*புலம்புடு வந்த பொழுதுபோல் கொள் வாடை*[38]

*................ தண்ணென்று*
*இன்னா தெறிதரும் வாடை* [39]

*இன்னா வாடை* [40]

*தண் வரல் அசைஇய பண்பில் வாடை*[41]

என்று குறிப்பிடுகின்றன. புலவர்கள் தலைவியின் பிரிவுத்துயரை எடுத்துரைக்கும் வாடைக்காற்றின் துன்பத்தையும் விளக்குவதாகச் சுட்டப்பெறுவதனைக் காண முடிகின்றது.

**தென்திசைக் காற்று**

தெற்கிலிருந்து வீசும் மென்காற்றே தென்றல் என்று குறிப்பிடப்படுகின்றது. எனினும் சங்க இலக்கியங்களில் தென்றல் பற்றிய குறிப்புகள் குறைவாகவே காணப்படுகின்றது. வேனிற்காலத்தில் வீசும் தென்றல் காற்று குறித்து நெடுநல்வாடை இவ்வாறு குறிப்பிடுகின்றது.

*வான்உற நிவந்த மேனிலை மருங்கின்,*
*வேனில் பள்ளித் தென்வளி தரூஉம்,*
*நேர்வாய்க் கட்டளை* [42]

மேற்கண்ட பாடலடியில் இளவேனிற்காலத்தில் நிலவுகின்ற வெப்ப மிகுதியைத் தணிக்கவே தென்றல் காற்று வீசியதாகவும், இக்காற்று மாளிகையின் உள்ளே வருவதற்கு ஏற்றவகையில் பலகணி பொருத்தப்பட்டிருந்தது என்ற குறிப்பினையும் தருகின்றது.

மேற்குறிப்பிட்ட கருத்திற்கேற்ப மதுரைக்காஞ்சி பாடலும் குறிப்பிடுவதனை,

*மழை ஆடும் மலையின் நிவந்த மாடமொடு,*
*வையை அன்ன வழக்குடை வாயில்*
*வகை பெற எழுந்து வானம் மூழ்கி,*
*சில் காற்று இசைக்கும் பல் புழை நல் இல்*[43]

என்னும் பாடலடிகளில் உயர்ந்த மாடமாளிகையில் தென்றல் காற்று நுழைவதற்கு என்று சாளரங்கள் அமைக்கப்பட்டிருந்த செய்தியினைக் குறிப்பிடுகின்றது. வேனிற் காலத்தின் இரவுப்பொழுதில் தென்றல் காற்று வீசும் இச்செய்தியினை,

*.............அரும்பு முதிர் குரவின*
*தேன்இமிர் நறுஞ்சினைத் தென்றல் போழக்,*
*குயில் குரல் கற்ற வேனிலும் துயில் துறந்து*

*இன்னா கழியும் கங்குல்* [44]

என்ற அகநானூற்று பாடலடிகள் குறிப்பிடுகின்றது.

**கிழக்கு திசைக்காற்று**

கீழ்க்காற்று என்றும் கொண்டல் என்றும் குறிக்கப்பெறும் இக்காற்று கிழக்குத் திசையிலிருந்து வீசுகின்றது. இக்கீழ்க்காற்று குறித்து நற்றிணைப்பாடல் குறிப்பிடுவதனை,

> ***புதுமணல் கானல் புன்னை நுண்தாது,***
> ***கொண்டல் அசைவளி தூக்கு தொறும், குருகின்***
> ***வெண்புறம் மொசிய வார்க்கும், தெண்கடல்***
> ***கண்டல் வேலிய ஊர், அவன்*** [45]

என்பது கடற்கரையின் சோலையிலுள்ள புன்னை மரங்களில் பூக்கள் பூத்துள்ளன. கீழ்க்காற்று வீசுகின்றமையால் அத்தகைய பூக்களில் நின்று நுண்ணிய மகரந்தத் துகள்களை உதிர்க்கிறது. இம்மகரந்தத் துகள்கள் புன்னைமர நிழலில் இருக்கின்ற வெண்ணிறமுடைய குறுகுகளின் முதுகுப்புறத்தில் படிவதாக மேற்கண்ட பாடல் குறிப்பிடுகின்றது.

மாலைப்பொழுதில் வீசிய கீழ்க்காற்றினால் வாடைக்காற்று போன்று துன்பத்தைக் கொடுத்ததாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுவதனை,

> ***.............................. மாலை***
> ***அழிதக கொண்டலொடு கழிபடர்க்***
> ***காமர் நெஞ்சம் கையறுபு***[46]

மேலும்

> ***.............................. பல்வரிப்***
> ***பாம்புபை அவிந்தது போலக் கூம்பிக்***
> ***கொண்டலின் தொலைந்த ஒண் செங்காந்தள்***[47]

கொண்டல் காற்றினால் காந்தள் பூ மலர்ந்த செய்தியினை மேற்சுட்டிய பாடல் வழி அறிய முடிகின்றது.

**மேற்கு திசைக்காற்று**

மேற்குத்திசையிலிருந்து வீசும் காற்று கோடைக்காற்று என்று அழைக்கப்படுகின்றது. இக்காற்றினை மேல் காற்று என்றும் வழங்குவர். வெப்பத் தன்மை குறித்து,

> *......................................., கல்லென*
> *ஞெமைஇலை உதிர்த்த எரிவாய்க் கோடை*
> *நெடுவெண் களரி நீறு முகந்து சுழலக்*
> *கடுவெயில் திருகிய வேனில் வெங்காட்டு* [48]

சூரியனின் வெப்பம் மிகுதியினால் இக்காற்றானது விரிவடைந்து எடை குறைந்து லேசாகி மேலிருந்து வீசும். மேல் எழுந்து வீசும் இவ்வகையான மேற்குத் திசைக்காற்று வேனிற்காலத்தில் பாலைநிலப் பகுதியில் வெப்பத்தன்மை மிக்கதாக வீசும் வேனிற்காலத்தில் வெப்பத்தாக்கத்தினால் காட்டுப்பகுதியில் வீசிய கோடைக் காற்று குறித்து அகநானூற்றுப் பாடல் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

> *காடு கவின் ஒழியக் கடுங்கதிர் தெறுதலின்*
> *நீடு சினை வறியவாக, ஒல்லென*
> *வாடுபல் அகலிலை கோடைக்கு ஒய்யும்*
> *தேக்கு அமல் அடுக்கத்து ஆங்கண்*[49]

என்ற பாடல் விளக்குகின்றது. பரந்து விரிந்த பெரிய காட்டில் சூரியனின் வெப்ப மிகுதியை ஏற்றுக்கொண்ட கோடைக்காற்று சுழன்று வீசியதனை,

*............நனந்தலைப் பெருங்காட்டு,*
*அகல் இரு விசும்பிற்கு ஓடம்போலப்,*
*பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்று*
*உருப்பு அவிர்பு ஊரிய சுழன்றுவரு கோடை* [50]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது.

**பருவக்காற்று**

ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட பருவத்தில் தொடர்ந்து வீசும் காற்று பருவக்காற்று என்று அழைக்கப்படுகிறது. இந்தியாவில் வீசும் பருவக்காற்று, அது வீசும் திசை அடிப்படையில் தென்மேற்கு பருவக்காற்று வடகிழக்குப் பருவக்காற்று என இரண்டாகப் பிரித்துக் கூறப்படுகின்றது.

**தென்மேற்கு பருவக்காற்று**

ஜூன் மாதத்தின் தொடக்கத்தில் இந்தியப் பெருங்கடலிலிருந்து வட இந்தியாவை நோக்கி வீசும் காற்று தென்மேற்கு பருவக்காற்று என்று அழைக்கப்படுகின்றது. தெற்கிலிருந்து வீசும் இக்காற்று புவி சுழற்சியின் காரணமாகத் தென்மேற்காகத் திசைமாறி வீசுவதால் தென்மேற்குப் பருவக்காற்று என்று அழைக்கப்படுகின்றது.

**வடகிழக்குப் பருவக்காற்று**

வடகிழக்குப் பருவக்காற்று அக்டோபர் மற்றும் நவம்பர் மாதங்களில் வீசுகிறது. செப்டம்பர் மாதம் முதல் ஜனவரி மாதம் வரை இந்தியாவின் வெப்பநிலை குளிர்ந்து இருக்கும். வடக்கிலிருந்து வீசும் காற்று பூமியின் சுழற்சியால் வடகிழக்காகத்

திசைமாறி வீசுகிறது. இக்காற்றினால் இந்தியாவின் கிழக்குக் கடற்கரை பகுதிகள் வழியாகச் செல்கின்றன. குறிப்பாகத் தமிழகம் மழையைப் பெறுகின்றது. வடகிழக்குப் பருவக்காற்றால் தமிழகம் மழை பெறுகிறது என்பதை ஆலந்தூர் கிழார் பாடிய,

*இமையத்து ஈண்டி இன்குரல் பயிற்றிக்*

*கொண்டல் மாமழை பொழிந்த*[51]

என்னும் இப்பாடல் உணர்த்துகிறது. மேலும் இப்பாடல் வடக்கு நோக்கி வீசிய காற்று இமயமலையில் தடுக்கப்பெற்று தென்திசையை நோக்கி, திரும்பிக் கீழ்க் காற்றாக வீசி மிக்க மழைப்பொழிவு ஏற்படுத்தியது என்பதை விளக்குகின்றது.

**நிலம்**

ஐம்பூதங்களில், புவியில் இறுதியாகத் தோன்றியது நிலமாகும். சூரியக் குடும்பத்தின் ஏனைய கோள்களிலும் நில அமைப்புகளைக் கொண்டுள்ளன. இருப்பினும் புவியினுடைய நில அமைப்பு சிறந்ததாகத் திகழ்கின்றது. எனவேதான் பிறகோள்களின் நில அமைப்புகளைக் காட்டிலும் மிகச்சிறந்ததாகப் போற்றப் படுகின்றது. பூமியின் மேற்புறமுள்ள கோளங்களைப் பாறைக்கோளம், நீர்க்கோளம், வளிக்கோளம் என மூன்றாகப் பிரிக்கப்படுகின்றது. இவற்றுள் பாறைக் கோளம்தான் நிலமெனக் குறிக்கப்படுகின்றது. இப்பாறைக்கோளமே அனைத்து உயிரினங்களுக்கும் மற்ற உயிரற்ற பொருட்களுக்கும் புவிக்கோளத்தின் நிலவமைப்பாகிய பாறைப் படலமே களமாக அமைகின்றது. பரிணாம வளர்ச்சியில் உலக உயிரினங்கள் பலவாறு பெருகின. அவ்வுயிரினங்களில் மேம்பட்ட உயிரினமாக

விளங்குவது மனித உயிரினமேயாகும். மனிதனின் உற்று நோக்கலின் சிந்தனை காரணமாகவே தன்னைச் சூழ்ந்துள்ள உயிருள்ள மற்றும் உயிரற்றவைகளை உற்று நோக்கி ஆராயத் தலைப்பட்டான். இவ்வுற்று நோக்கலின் விளைவாகவே நாளும் புதிய கண்டுபிடிப்புகளைக் கண்டறியத் தலைப்பட்டான்.

மனிதன் தன்னைத்தானே ஓரிடத்தில் நிலையாகத் தக்கவைத்துக்கொள்ள அவனைத் தூண்டியது நிலம் பற்றிய ஆராய்ச்சியாகும். வேட்டையாடி, நாடோடியாக வாழ்ந்து திரிந்த மனிதன் நிலத்தின் இயல்பை உணர்ந்து ஓரிடத்தில் தனக்கான உணவைப் பெறவேண்டும் என்ற உள்ளுணர்வே நிலத்தினைக்கொண்டு வேளாண்மை செய்யத் தொடங்கினான். அதன் பிறகு நாகரீகம் வளர்ந்தது.

நிலம் என்பது குறித்து கலைக்களஞ்சியம் பின்வருமாறு விளக்கம் தருகின்றது. *பொருளாதாரத்தில் பரந்தப் பொருளில் வழங்குகின்றது. இது வெறும் மண்ணை மட்டும் குறிக்காது, மண், நீர், காற்று, மண்ணில் மண்டிக் கிடக்கும் தாதுப் பொருட்கள், தட்ப வெட்பம் முதலிய இயற்கை வளங்களை எல்லாம் நிலம் என்பதில் அடங்கும்*[52] என்று குறிப்பிடுகின்றது.

நிலவியல் என்பது பற்றிக் கூறுகையில் நிலத்தை அடிப்படையாகக் கொண்டு ஆராயும் துறைக்கு நிலவியல் துறை என்றழைக்கப்படுகின்றது. *நிலவியல்* என்பதைக் குறிக்கும் Geography என்னும் சொல் *நிலத்தின் விளக்கம் என்ற பொருளைத் தரும் கிரேக்கச் சொற்றொடரிலிருந்து பெறப்பட்டதாகும்*[53].

மேற்கூறப்பெற்ற விளக்கங்களில் நிலவியல் துறையில் நிலங்களை மட்டும் ஆராய்வதில்லை. மாறாக நிலம் சார்ந்த பருவநிலைகள், தாவர இனங்கள், உயிரினங்கள் போன்றவையும் ஆராயப்படுகின்றது. இருப்பினும் நிலவியல் என்பவற்றில் பாறைகளும், மண்ணும் அவை தோன்றியதன் தன்மை, நிலத்தின் அமைப்பு, அதன் வளமை போன்றவை குறித்தும் ஆராயப்பெறுகின்றன.

**நிலத்தின் தோற்றம்**

புவி உருவான அமைப்பு குறித்து அறிவியல் அறிஞர்களிடையே ஒரு பொதுவான கருத்தொற்றுமை உள்ளது. அதாவது ஞாயிற்றிடமிருந்து பிரிந்து வந்த கோளமே புவிக்கோளமாகும். புவி தொடக்கக் காலங்களில் இப்போது இருக்கின்ற நிலையில் இல்லை. அது வெப்ப மிக்க தீப்பிழம்பாகவே இருந்துள்ளது. புவி பின்னாளில் குளிர்ந்து நிலமாக உருமாறுவதற்கு பல ஊழிக் காலங்களை எடுத்துக்கொண்டது.

*ஞாலத்தின் ஓயா சுழற்சியின் காரணமாக உயர்ந்த அடர்த்தியுடைய இரும்பு நிக்கல் முதலான கனிமப் பொருள்களின் தனிமங்களாலானது விரல்கள் கோளத்தின் மைய பகுதிகளுக்கும் சென்று இரண்டு மிகக்குறுகிய கோள வடிவம் பெற்றன. ஏறக்குறைய 3,200 கிலோ மீட்டர் விட்டமுள்ள இக்கோளக் கருவைச் சுற்றி அடர்த்தி குறைந்த தனிமங்களை உள்ளடக்கிய அணுத்துகள்கள் இடத்திற்கேற்ப பல்வேறு படலங்களாகத் திரண்டு பல்வேறு வகையான பாறைகளைத் தோற்றுவித்தன. தொடக்கத்தில் வாயுப்பிழம்பாக இருந்த உலகம் குளிர்ந்து, திண்ணிய பாறை பொருட்களால் ஆன மேல் ஓட்டினைக்கொண்ட கோளமாக மாறிவிட்டது[54].*

புவியோட்டின் மேற்புறத்தில் பல்வேறான பாறை அடுக்குகளைக் கொண்டுள்ளது. இம்மேலோட்டின் மீதுதான் பாறைகளும் மண் வகைகளும் காணப்படுகின்றன. இத்தகைய அமைப்பு நிலம் என்று அழைக்கப்படுகின்றது. இதனை மதுரைக்காஞ்சி பின்வரும் பாடலடியில் குறிப்பிடுகின்றது.

*நிலம் அமர்வை*[55]

மேலும் பரந்து விரிந்து விளங்கும் நிலத்தினைச் சங்க இலக்கியப்பாடல் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*இருநிலம்*[56]

*உருகெழு மாநிலம்*[57]

*பெருங்கண் மாநிலம்*[58]

அதுமட்டுமின்றி கடலுக்கடியிலும் நிலப்பரப்பின் மேற்பரப்பு கடல் நீரைத் தாங்கி நிற்கின்றது என்பதனை,

*நீர் நிரந்து ஏற்ற நிலம்தாங்கு அழுவத்து*[59]

என்று பரிபாடல் குறிப்பிடுகின்றது.

நிலப் பாகுபாடு

இவ்வுலகம் முழுவதிலுமுள்ள அனைத்து நிலப்பரப்புகளுமே ஒரேமாதிரியாக அமையப்பெறவில்லை. நாட்டிற்கு நாடு இடத்திற்கு இடம் என வேறுபட்டே அமைந்துள்ளன. வானுயர்ந்த மலைகள், காடுகள், வளம் பெற்ற சமவெளி

பிரதேசங்கள், வறண்ட மணல் பகுதியான பாலைவனங்கள் என அனைத்தும் வேறுபட்டுக் காணப்படுகின்றன. அதேபோல் உலகம் முழுவதிலும் உள்ள கால நிலைகளும் நில அமைப்பு மற்றும் தன்மைகளும் வேறுபட்டுள்ளன. இத்தகையப் போக்கினை நன்கு உணர்ந்தவர்கள் நம் பழந்தமிழர்கள். நிலப்பாகுபாடு முழுவதையும் வரையறை அமைத்துக்கொண்டனர்.

தமிழின் முதல் நூலாகக் கருதப்படும் தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்தில் நிலவியல் சார்ந்த அடிப்படைக் கருத்துக்கள் விதிகளாக வகுக்கப்பெற்று முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என வகுக்கப்பெற்று நிலம் சார்ந்த மக்களின் வாழ்வியல் தன்மைகளைப் பொருளதிகாரத்தின் வழியே குறிப்பிட்டுள்ளார். நான்கு வகையான நிலப்பாகுபாட்டைத் தொல்காப்பியர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய பெருமணல் உலகமும்*
*வருணன் மேய தீம்புனல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்*
*என சொல்லிய முறையால் சொல்லவும் படுமே*[60]

மேற்கூறிய நூற்பாவில் பாலை என்ற தனிநிலம் பற்றி தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. ஆனால் சங்க இலக்கியங்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பவற்றோடு பாலைநிலத்தைப் பற்றியும் குறிப்பிடுகின்றன. குறிஞ்சி நிலமும்

முல்லை நிலமும் வெம்மையால் தற்காலிகமாக வறட்சியுற்றுக் காணப்பெறும் அத்தகைய நிலத்தின் பாறைக் கற்களும் பரல் கற்களும் இறுகிய மண் அமைப்பு கொண்டதான வன்புலமாகக் காணப்படும். அதனாலேயே அந்நிலத் தன்மைகளைப் பாலைவனம் எனத் தொல்காப்பியர் சுட்டுகின்றார்.

*நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலொடு*

*முடிவு நிலை மருங்கின் முன்னிய நெறித்தே*[61]

என்ற நூற்பாவின் வழியே பாலை நிலத்தை நடுவு நிலைத்திணை என்று குறிப்பிடுகின்றார்.

பதினெட்டாம் நூற்றாண்டிற்கு முன்பு வரை நிலம் பற்றிய ஆரம்பகாலச் சிந்தனைகள் அனைத்தும் வேளாண்மையை முதன்மையாகக்கொண்டே இருந்தன. பின்னாளில் நிலத்தைப் பற்றிய விரிவான ஆராய்ச்சி வளரத் தொடங்கியதன் காரணமாக நிலவியல் என்ற தனித்துறையாகத் தோன்றியது. சங்கத் தமிழர்கள் பண்டையகாலந்தொட்டே நிலவியல் பற்றிய புரிதல்களைக் கொண்டிருந்தனர். இதற்குச் சங்க இலக்கியப் பாக்களே சான்று கூறலாம். சங்க இலக்கியங்களில் நிலப் பாகுபாடு, நிலத்தின் தன்மை, பாறைகள், அவற்றின் அமைப்பு, மலைப்பகுதிகள், மண் வகைகள் போன்றவை பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

*நீர்*

இவ்வுலக உயிர்கள் தோன்றுவதற்கு அடிப்படைக் காரணியாக விளங்குவது நீர். உலகின் முதல் உயிர் தோன்றி மற்ற அனைத்து உயிர்களுமே நீரினை

ஆதாரமாகக் கொண்டே உயிர் வாழ்கின்றன. உலக உயிர்களின் உடலமைப்பில் குறிப்பிடத்தக்க அளவினை நீர் பெறுகிறது. அக அமைப்பு மட்டுமின்றி புற அமைப்பிலும் புறச் சூழலிலும் நீர் முக்கியப்பங்கு வகிக்கிறது. இதனால்

*நீரின்றி அமையா யாக்கை*[62]

என்ற புறநானூற்றுப் பாடல்வரி எடுத்துரைப்பதன் வழி நீரின் இன்றியமையாமையை உணரமுடிகின்றது. இக்கருத்திலேயே நற்றிணைப் பாடல்வரியும் வலியுறுத்துவதனை,

*நீரின்றி அமையா உலகம்*[63]

என்றும் திருவள்ளுவரும்

*நீரின்றி அமையாது உலகு*[64]

என்று உலகிற்கு உரைப்பதும் நீரின் மகத்துவத்தினை அறிந்துகொள்வதற்கான சான்றாதாரங்களாகக் கொள்ளமுடிகின்றது.

உலக உயிரினங்களின் வாழ்வியல் சூழலுக்கு அடிப்படைக் காரணியாகத் திகழ்வது நீரேயாகும். ஞாயிற்று குடும்பக் கோள்களில் புவிக்கோளில் மட்டுமே நீர் உள்ளது. புவிக்கோளில் நீர் இருக்கின்றமையாலேயே உயிர்கள் தோன்றி வாழ முடிகின்றது. மற்ற கோள்களில் இத்தகைய நீர்ச்சூழல் இல்லாதிருத்தலால் உயிர்கள் உருவாகப் பெறவில்லை. நீர்த் தேவை புவியில் குன்றும்போது இவ்வுலகிலுள்ள உயிர்களின் பிறப்பும் அழிந்து போகும். எனவே உலகில் அனைத்து உயிர்களுக்கும் நீர் ஒன்றே இன்றியமையாத காரணியாக அமைகின்றது.

உலகில் தோன்றிய ஏனைய உயிரினங்களைக் காட்டிலும் மேம்பட்ட உயிரினமாகத் திகழ்வது மனித இனமே ஆகும். மனிதனின் நாகரிகம் மற்றும்

பண்பாட்டுச் சூழல்களில் முக்கியப்பங்கு வைப்பது நீர். இவ்வுலகின் மிகப் பழமை வாய்ந்த நாகரிகங்கள் அனைத்தும் ஆற்றங்கரை சமவெளிகளிலேயே தோன்றி வளர்ந்தன.

*சிந்து நதிப் படுகையின் சிந்துவெளி நாகரிகம்; டைகிரிஸ், யூ ஃரெட்டிஸ் என்ற இரு நதிகளின் படுகையில் வளர்ந்த சுமேரிய நாகரீகம், ஆப்பிரிக்கக் கண்டத்தின் வட கிழக்குப் பகுதியில் நைல் நதியின் படுகையில் வளர்ந்த எகிப்திய நாகரிகம், இன்றைய ஈராக், ஈரான், துருக்கி, கிரீஸ், ஜோர்டன், இஸ்ரேல், எகிப்து இத்தனை நாடுகளையும் உள்ளடக்கிய பார்சீய பேரரசு ஆண்ட காலத்தில் வளர்ந்த பார்சீய நாகரிகம், ஆசியக் கண்டத்தின் வடகிழக்குப் பகுதியை வளப்படுத்தி வரும் யாங்க்டை, ஹையோங்கோ ஆறுகளின் படுகையில் வளர்ந்த சீன நாகரீகம் என ஆசிய கண்டத்தின் பல்வேறு இடங்களில் நாகரிகப் புதுமைகளும் வேறுபாடுகளும் வளர்ந்திருந்தன*[65].

எனவே நாகரிகங்கள் தோன்றி வளர்ந்தமைக்கு அடிப்படையாக ஆற்றங்கரைச் சமவெளிகளே இருந்துள்ளன என்பதை மேற்கண்ட கூற்றின் வழி அறிய முடிகின்றது.

**புவியில் நீர்**

புவியின் மேற்பரப்பிலுள்ள நீரினைக் குறிப்பிடுகையில் மூன்று பங்கு நீராகவும், ஒரு பங்கு நிலமாகவும் அமைந்துள்ளதாக அறிவியல் அறிஞர்கள் குறிப்பிடுவர்.

*உலகிலுள்ள மொத்த நீரில் 97.3% கடலிலுள்ள உப்பு நீராகவும், மீதமுள்ள 2.7% சதவீதம் பனியாறு பனி, மலை , ஏரி மற்றும் ஆறு குளங்களில்*

*நன்னீராகவும் உள்ளது. இந்த 2.7% விழுக்காட்டை 100 விழுக்காடு எனக் கொண்டு கணக்கிட்டால் 77 விழுக்காடு பனிக்கட்டியாகவும், 22 விழுக்காடு நிலத்தடி நீராகவும் எஞ்சிய 1 விழுக்காடு ஆறு, ஏரி மற்றும் குளங்களிலும் உள்ளது[66].*

பண்டைய தமிழர்கள் நீர்நிலைகளாகிய ஆறு, குளம், ஏரி போன்றவற்றில் கிடைத்த நீரினையும், நீர்நிலைகளற்ற இடங்களில் நிலத்தடி நீரினையும் பயன்படுத்தினர். அது மட்டுமின்றி தாங்கள் பயன்படுத்திய நீர்நிலைகளை எவ்வித அசுத்தமுமின்றிப் பாதுகாத்து பராமரித்து வந்தனர். இன்றைய காலத்தில் பெருகிவரும் மக்கள்தொகையின் தேவையைக் கணக்கில்கொண்டு அவர்களின் நீர்த்தேவையைப் பூர்த்தி செய்வதற்காக, நிலத்தடி நீரினை அதிகளவில் உறிஞ்சப்பட்டு வருகிறது. இதே நிலை நீடிக்குமானால் நிலத்தடி நீர்மட்டம் குறைவதோடு புவி வெப்பமயமாகும். மேலும் துருவப் பகுதிகளில் காணப்படும் பனிக்கட்டிகளும் உருகிக் கடலில் கலக்க நேரிடும். இதனால் நன்னீரின் அளவும் குறைந்து நீரின் தேவை அதிகரிக்கும் சூழல் உருவாகும்.

**பருவ மழை**

ஓராண்டில் குறிப்பிட்ட காலத்திற்குள்ளாகப் பொழியும் மழையினை பருவமழை என்பர். இவை ஆண்டுதோறும் குறித்த பருவத்தில் தமிழகத்திற்கு மழையைக் கொடுத்து மக்களின் வாழ்வினை வளம்பெறச் செய்கின்றது. தமிழகத்தில் தென்மேற்கு பருவமழை, வடகிழக்குப் பருவமழை ஆகிய இரு பருவமழைகளைக் கொடுத்து மக்களின் வாழ்வினை மகிழ்விக்கச் செய்கிறது. புறநானூற்றில் இப்பருவமழை குறித்த குறிப்பு காணப்படுகின்றது.

*காலம் மாரி*[67]

என்ற பாடல்வரியில் பருவ காலமாகிய கார்காலத்தில் பொழியும் மழையைக் குறித்துக் கூறுவதனைக் காணமுடிகின்றது. மேலும் நற்றிணைப்பாடல் ஒன்றில்,

*தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி*[68]

என்னும் வரியில் பருவகாலத்தின் தொடக்கத்தில் பெய்கின்ற மழையைக் குறித்துக் கூறுகின்ற செய்தியினைக் குறிப்பிடுகின்றது.

*வானம் பொழுதோடு சுரப்ப*[69]

என்ற பாடலடியில் பருவ மழையானது பருவம் தப்பாது குறித்த காலத்தில் பொழிந்தமையைத் தெரிவிக்கின்றது.

**தென்மேற்குப் பருவமழை**

தென்மேற்குத் திசையிலிருந்து வீசுகின்ற பருவக்காற்றினை மேற்குத்தொடர்ச்சி மலை தடுப்பதனால் அம்மலைப்பகுதியில் நல்ல மழைப்பொழிவு காணப்படுகின்றது. இதனையே தென்மேற்கு பருவமழை என்று குறிப்பிடுவர். இம்மலை பற்றிய செய்தியினைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*கொண்டல் மாமழை குடக்கேர்பு குழைத்த*
*சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்*[70]

என்னும் பாடலடிகளில் மழை பொழிந்தமையால் சந்தனமரம் செழிப்புற்றது என்று குறிப்பிடப்படுவதால் மேற்குத் தொடர்ச்சிமலை என்பது அறிய முடிகின்றது.

வடகிழக்குப் பருவமழை

வடகிழக்குத் திசையிலிருந்து வீசுகின்ற காற்றினால் வங்கக்கடலில் உருவாகும் காற்றழுத்தத் தாழ்வினால் பெறப்படும் மழையே வடகிழக்குப் பருவமழை. இம்மழைத் தமிழகத்தில் ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் மிகுதியாகப் பொழியும். வட கிழக்குப் பருவமழை பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

*குண கடல் முகந்து குடக்கு ஏர்பு இருளி*
*மண் திணி ஞாலம் விளங்க, கம்மியர்*
*செம்பு சொரி பானையின் மின்னி எவ் வாயும்*
*தன் தொழில் வாய்த்த இன் குரல் எழிலி*
*தென்புல மருங்கில் சென்று அற்றாங்கு*[71]

என்ற பாடலடிகளில் கீழ்த்திசையாகிய கடலிடத்தில் ஒன்று திரண்ட கரிய மேகமானது, உலகம் முழுவதும் சூழ்ந்து நின்று மழையைப் பொழிந்ததாகவும் பின் மேகங்கள் தென்திசை நோக்கி நகர்ந்ததாகவும் மேற்கண்ட பாடல் செய்தி தெரிவிக்கின்றது.

மேற்குறித்த பாடல் கருத்தைப்போன்று கிழக்குத் திசையிலுள்ள கடலடுத்து உருவான மேகங்கள் மேற்குத்திசை நோக்கி நகர்ந்து சென்று மழையைப் பொழிந்ததாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*குண கடல் முகந்து, குடக்கு ஏர்பு இருளி,*
*தண் கார் தலைஇய நிலம் தணி காலை*[72]

கிழக்குத் திசை நோக்கி கடலடுத்து செல்லும் மேகம் மழையைப் பொழிந்த செய்தியினை கலித்தொகை பின்வருமாறு விளக்குகின்றது.

*ஞாலம் வறம் தீரப் பெய்ய, குணக்கு ஏர்பு,*
*காலத்தில் தோன்றிய கொண்மூ* [73].

இத்தகைய நீரின் முக்கியத்துவத்தினை உணர்ந்து, அதனை உரியமுறையில் பயன்படுத்துவதற்கு என்று பல மேலாண்மைத் திட்டங்கள் சங்க காலம்தொடங்கி, இக்காலம் வரையிலும் வரையறுக்கப்பட்டும் வகுக்கப்பட்டும் வருகின்றன. சங்கத் தமிழர்கள் நீரின் இன்றியமையாமையை உணர்ந்து கிடைக்கப்பெற்ற நீரினை எம்முறையில் பயன்படுத்தி, அடுத்தத் தலைமுறைக்கும் பயன்படும் வகையில் மேற்கொண்டனர் என்பது குறித்த பதிவுகளைச் சங்க இலக்கியப் பாடல்களின் வழியே அறிய முடிகின்றது.

*தீ*

இவ்வுலகில் மனித வாழ்க்கை நிகழ்வுகளில் நெருப்பு இன்றியமையாத நிலையைத் தருகிறது. நெருப்பு மனிதனின் கட்டுப்பாடுகளுக்கு உள்ளாக இருக்கும் வரை பயனளிப்பதாகவும், அதுவே கட்டுப்பாட்டை மீறும்பொழுது மிகுதியான துயரத்தைத் தருவதாகவும் அமைகின்றது.

ஆதிமனிதன் தீயை இயற்கையின் மூலமே பெற்றான். காடுகளில் இயல்பாக ஏற்படும் காட்டுத் தீ வானிலிருந்து விழுகின்ற இடி, மின்னல் இவற்றின் மூலமாகப் பாதிப்புக்கு உள்ளாகின்றன. மரங்கள்மீது விழுகின்ற நெருப்பைப் பயன்படுத்தினான். அதன்பின்னர் தானாகவே தீயை உண்டாக்கக் கற்றுக் கொண்டான். எளிதில் தீப்பற்றும் காதுகளைக்கொண்ட கற்களில் உராய்ந்து அதில் ஏற்பட்ட

தீப்பொறியைக்கொண்டு நெருப்பினை உண்டாக்கினான். மரத்துண்டுகளைக் கொண்டு தீயை உண்டாக்கினான். தீயைக் குறிக்கத் தமிழில் பல சொற்கள் உள்ளன. அவற்றினைத் திவாகர நிகண்டு பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*அழல், அங்காரகன், அங்கி கனலி,*
*எரிதழல், தபனன், பாகவன், தீ, அனல்,*
*செஞ்சுடர், பகவன், ஞெகிழி, உதாசனன்*
*உதவகன், தனஞ்சயன், வசு, எழுநா, அரி*
*தென்கீழ்த் திசையோன் ,வன்னி, தேயு, என்று*
*இன்னவை பிறவும் நெருப்பின் பெயரே* [74]

என்று அதில் கூறப்பட்டுள்ளது.

சுற்றுச்சூழல் களஞ்சிய அகராதி தீ என்பதற்கு *தீ ஒரு முக்கியச் சூழ்நிலைக் காரணியாகும்*[75] என்று விளக்கம் தருகிறது.

அறிவியல் களஞ்சியம்,

*ஆற்றலை ஒளி, வெப்பம் ஆகியவற்றின் வடிவில் வெளியிட்டு காற்றிலுள்ள ஆக்சிஜன் அணுக்களுக்கும் எரிபொருளில் உள்ள கார்பன் மற்றும் ஹைட்ரஜன் அணுக்களுக்கும் இடையே தொடர்ந்து விரைவாக நடைபெறும் ஒரு வேதி வினையின் புற வடிவம் தீ [Fire] எனப்படும்*[76] என்று விளக்கம் அளித்துள்ளது.

பழந்தமிழர் குழியாக உள்ள மரக்கட்டையில் மற்றொரு சிறிய மரத்துண்டைக் கொண்டு கடைந்து தீயை உண்டாக்கினர்.

*நொய்ம்மர விறகின் ஞெ கிழி மாட்டிப்*
*பனிசேண் நீங்க இனிதுடன் துஞ்சி* [77]

என்னும் பாடலடிகள் மரத்துண்டுகளைக்கொண்டு தீயை உண்டாக்கிய செயலைக் குறிக்கின்றன. இப்பாடலில் நொய்மரம் என்பது காழ்முற்றாத இளமைத் தன்மையுடைய மரத்தைக் குறிக்கிறது. இளமையான மரத்துண்டுகள் எளிதில் தீப்பற்றும் தன்மையுடையதால் இவ்வகையான மரங்களைப் பயன்படுத்தி தீயை உண்டாக்கி அதனைப் பயன்படுத்தியுள்ளனர். நெருப்பை உருவாக்க பயன்படும் மரத்துண்டு '**தீக்கடைகோல்**' என்று சங்க இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளது.

**புவியும் ஞாயிறும்**

ஞாயிற்றின் பண்புகள் புவியின் சூழலியலில் பேராதிக்கம் செலுத்துகின்றன. ஞாயிற்றிடமிருந்து வருகின்ற ஒளி உயிரினங்கள் பிற பொருட்களைக் காண்பதற்கும் எளிமையாக இடம் விட்டு இடம் பெயர்ந்து செல்லவும் பயன்படுகின்றது. இந்த ஒளியிலிருந்தே தாவரங்கள் தமக்குத் தேவையான உணவைத் தயாரித்துக் கொள்கின்றன. ஒளியின் வழியாகப் பரவும் வெப்பத்திலிருந்து உயிரினங்கள் தமக்குத் தேவைப்படும் வெப்பத்தைப் பெறுகின்றன. உயிரினங்கள் வெப்பத்தை ஏற்பதால் உடல் உறைந்து விடாமல் பாதுகாக்கப்படுகிறது.

**ஞாயிற்றின் தன்மை**

சூரியனின் உள்பகுதியில் வெப்பமானது புறப்பரப்பில் காணப்படும் என்கின்ற அறிவியல் சிந்தனையை,

*வான் மூழ்கிய வயங்கொளி நெடுஞ்சுடர்*

*கதிர் காய்ந்து எழுந்து அகங் கனலி ஞாயிறு* [78]

இப்பாடலில் உள்ள **நெடுஞ்சுடர் கதிர் காய்ந்து அகங்கனலி ஞாயிறு** என்பது ஞாயிற்றின் மையப்பகுதியில் உருவாக்கப்படும் வெப்பம் அதன் மேற்பரப்பில் கொழுந்துவிட்டு எரியும் தீயாக வெளிப்படும் என்று பொருள்படுகிறது.

ஞாயிறு இடைவிடாது மிகையான வெப்பத்தை உமிழ்ந்து கொண்டிருக்கும் இவ்வுண்மையை,

*காய்சினந் தவிராது கடலுள் பெழுதரும்*
*ஞாயிறு*[79]

என்னும் அடிகள் சுட்டுகின்றன. ஞாயிற்றின் ஆற்றலாகிய ஒளியும் வெப்பமும் உயிரினங்களுக்கு மட்டுமின்றி உலகின் புறச்சூழல்களுக்கும் இன்றியமையாததாக அமைகிறது.

**இடியும் மின்னலும்**

உலகிற்கு இயற்கையளித்த மிகப்பெரிய வரப்பிரசாதம் மழையாகும். மழையானது கடல்நீர் ஆவியாகி மழைமேகமாக உருவெடுக்கின்றது. மழை மேகங்களின் வழியே இடியும், மின்னலும் உருவெடுக்கின்றது. இருப்பினும் அவை மிகுந்த வெப்ப ஒளி ஆற்றல் உடையவை. வெளிப்படுகின்ற விசையின் அளவைப் பொறுத்து நிகழ்வு அமையப்பெறுகின்றது.

*வளிமண்டலம் கொந்தளிப்பாக உள்ளபோது மின்சக்தி கொண்ட மேகங்களிலிருந்து திடீரென ஏற்படும் வலிமையான மின்பாய்ச்சலின் காரணமாகத் தோன்றும் பேரொளி மின்னல் என்றும் இதன் விளைவாக உண்டாகும் பேரொலி;*

*இடி என்றும் வழங்கப்படும். மின்னலின்போது மின்சாரம் கொண்ட மேகங்கள் இடையே நிலவும் மின்னழுத்தம் 25 கோடி வோல்ட் அளவிற்கும் மின்னோட்டம் 80 ஆயிரம் ஆம்பியர் அளவிற்கும் இருக்கும். ஆனால் மின்சாரம் பாயும் நேரம் சுமார் 10 மைக்ரோ நொடி அளவே இருக்கும். எனவே மின்னலின் [ இடியின்] ஆற்றல் சுமார் 55 கிலோ வாட் மணி அளவு இருக்கும். ஆக மின்னலின் [இடியின்] ஆற்றல் குறைவு. எனினும் அது நிகழும் காலம் மிக மிகக் குறைவாக இருப்பதால் பேராபத்து விளைகிறது* [80].

மின்னல் ஒளியுடன் அவற்றின் ஓசையான இடியும் உண்டாகும் .

*நனையுறும் உரனும் நாம நள்ளிருள்*
*வரையக நாடன்* [81]

என்னும் அடிகள் இதனைச் சுட்டுகின்றன.

மின்னல் கிளை வடிவுடனும் தட்டை வடிவுடனும் தோன்றும். கிளைவடிவில் தோன்றிய மின்னலைப் பற்றி புறநானூறு,

*...................கிளையர வெறியும்*
*அருநரை யுருமிற் பொருநரை பெறா அச்*
*செருமான் பஞ்சவ ரேறே நீயே*[82].

என்று குறிக்கிறது. ஆற்றல் மிக்க இடி உயிரினங்களின் மீது விழும்போது அவை உயிரிழக்க நேருகின்றன.

**கோள்கள்**

கோள் என்னும் சொல் 'கொள்' என்னும் சொல்லை அடியாகக்கொண்டு பிறந்தது. **கோள் என்பது கொள்ளுதல், வளைதல் என்று பொருள் குறிக்கும்**[83]. இக்கோள் என்னும் பெயர்ச்சொல் தனக்கென ஒரு நீள் வட்டப்பாதையை வகுத்துக் கொண்டு வளைந்து சுற்றித் திரிகின்ற வானத்தின் பொருட்களுக்கு என்றே அமைந்த காரணப்பெயராகக் கருதப்படுகின்றது.

**பழந்தமிழர் குறிப்பிடும் கோள்கள்**

பண்டைத்தமிழர் வானியல் அறிஞராகத் திகழ்ந்து விளங்கினர். அவர்கள் குறிப்பிடும் ஒன்பது கோள்களாவன - ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது போன்றவற்றைக் கோள்களாக குறிப்பிட்டுள்ளனர். இவற்றில் ஞாயிற்றையும் திங்களையும் கோள்களாகக் கருதியமைக்கு காரணம் பழங்காலத்தில் நிலைகொண்டிருந்த புவி மையக் கொள்கையே காரணம் எனலாம்.

வானின் பொருட்கள் அனைத்தும் பூமியை மையமாகக் கொண்டே சுற்றி வருகின்றன என்று கருதினர். ஆனால் உண்மையில் கோள்கள் அனைத்திற்கும் ஞாயிறே மையமாக விளங்குகின்றது என்கின்ற உண்மை பதினாறாம் நூற்றாண்டுக்குப் பின்னரே எடுத்துரைக்கப்பட்டது.

அதனால் அதற்கு முன்பு வரை, பூமி மையக்கொள்கையை நிலை கொண்டிருந்ததாக உணர்ந்திருந்தனர். பின்னர் இருபதாம் நூற்றாண்டில் வானியல் அறிஞர்கள் சூரியக் குடும்பத்தில் பூமி முதல் ஒன்பது கோள்கள் உள்ளன என்று கண்டறிந்து குறிப்பிட்டனர். அதனைத் தொடர்ந்து நடைபெற்ற ஆய்வின் முடிவாக

ஒன்பதாவது கோளாக இருந்த ப்ளூட்டோ என்பது கோள் அல்ல என்று மறுத்து அதனைக் குறுகிய குறுங்கோளாக இணைத்துக்கொண்டனர்.

**வெள்ளி**

மேலை நாட்டவர் வீனஸ் என்கின்ற பெயரால் குறிப்பிடப்படும், வெள்ளி எனும் கோள் சூரியனிடமிருந்து ஒளிர்கின்ற இரண்டாவது கோளாகும். இக்கோள் பூமிக்கும் புதனுக்கும் நடுவில் அமையப்பெற்றுள்ளது. சூரியக் குடும்பத்திலுள்ள ஏனைய கோள்களில் மிகுதியான வெப்பமும் ஒளியும் கொண்டதாக உள்ளது வெள்ளிக் கோளேயாகும்.

***இந்தக் கோள் வளி மண்டலத்தின் மேல் பகுதியில் காணப்படும் கந்தக அமில மேகக்கூட்டங்கள் அதிகளவில் சூரிய ஒளியைப் பிரதிபலிப்பதனாலேயே இந்தக் கோள் இவ்வளவு ஒளியுடன் திகழ்கிறது[84].***

விடியல் வேளையில் ஒளிரும் வெள்ளிக் கோளினைச் சங்க இலக்கியங்கள் **வைகல் மீன்** (மதுரைக்.108) **வைகுறுமீன்** (பெரும். 318, நற். 48:4) என்று குறிப்பிடுகின்றது.

**திங்கள்**

சூரியனுக்கு அடுத்தபடியாகப் பூமிக்கு மிகுதியான ஒளியை வழங்குவது திங்கள் கோளேயாகும். இது பூமியின் துணைக்கோளாகக் கருதப்படுகின்றது. ஞாயிற்றிடமிருந்து பெறுகின்ற மிகுதியான வெப்பத்தினை ஏற்று பூமிக்குக் குளிர்ந்த ஒளியையே திங்கள் கோளானது தருகின்றது. பூமிக்கு அருகிலேயே இக்கோள்

அமையப்பெற்றுள்ளதால், ஞாயிற்றைகாட்டிலும் மற்றக் கோள்களைக் காட்டிலும் அதிக ஒளியை உடையதாகக் காட்சித் தருகின்றது.

தாய்க்கோளான புவியின் ஈர்ப்பாற்றலுக்கு உட்பட்ட திங்கள், புவியை 27.33 நாட்களுக்கு ஒருமுறை முழுமையாகச் சுற்றி முடிக்கிறது. இதே கால அளவிலேயே தன்னைத்தானே ஒருமுறை சுற்றிக் கொள்கிறது. திங்களின் புவியை மையமாகக் கொண்ட சுழற்சி மற்றும் தற்சுழற்சி ஆகியவற்றினால் புவியில் உள்ளவர்களால் திங்களின் ஒரு பக்கத்தையே காணமுடிகிறது.

நிலவின் மற்றொரு பக்கம் கண்ணுக்கு அகப்படாமல் மறைவாகவே இருக்கின்றது. இதனாலேயே அமாவாசை, பௌர்ணமி, வளர்பிறை, தேய்பிறை போன்ற மாற்றங்கள் நிகழ்வது போன்ற அமைப்பு பூமியில் உள்ளவர்களால் காணமுடிகின்றது. நிலவின் தேய்வும் வளர்ச்சியும் தொடர்ந்து நிகழ்ந்தவண்ணம் இருக்கின்றது. இதனால் பழங்கால மக்கள் காலத்தைக் கணிப்பதற்கு நிலவினைத் துணையாகக் கொண்டனர். ஆகையால்தான் நிலவு தோன்றி வளர்ந்து முழுவதுமான நிலையில் பின் அது மறையும் கால அளவினையும் கொண்டு மாதம் என்று அழைத்தனர். நிலவு நாளுக்கு நாள் ஒவ்வொரு நிலையில் கலையாக வளர்ந்து முழுமை பெற்றதும், பின் நாளுக்கு நாள் குறைந்து தேய்வு பெற்றதுமாகிய நிலையை முழுவதுமாக மறைந்துவிடுகிறது.

**நிலவு**

ஒவ்வொரு கலையாக வளர்ந்து முழுமை பெற்றது போலவே ஒவ்வொரு கலையாகத் தேய்ந்து முழுமையாக மறைந்துவிடுகின்றது. இவ்வாறு வளர்வதும் தேய்வதுமான காட்சியினைப் புறநானூறு மிக அழகாகக் கூறுகின்றது.

*தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்*

*மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்*

*அறியா தோரையும் அறியக் காட்டித்*

*திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து'' 85*

என்று குறிப்பிடுகின்றது. பூமியின் பார்வையில் நிலவு மறைவுற்று விளங்குகின்ற நாளினை அமாவாசை என்றழைக்கப்படுகின்றது. பெரும்பாணாற்றுப்படையில்,

*...............சிறு கோட்டுக்*

*குழவித் திங்கள்* [86]

என்றும்

*இலங்கு நிலவின் இளம்பிறை* [87]

என்று ஐங்குறுநூறும் கூறுவதைக் காணமுடிகின்றது.

**சந்திர கிரகணம்**

ஒரே நேர்க்கோட்டில் செல்லும் சூரியன், பூமி, சந்திரன் ஆகிய மூன்று கோள்களுள் பூமியின் நிழலானது நிலவின்மீது பட்டு நிலவின் ஒளியை மறைத்து விடுகின்றது. இந்த மறைப்பு நிலையையே **சந்திரகிரகணம்** என்றழைக்கப்படுகின்றது.

ஆனால் பிற்காலப் புராணங்களில் நிலவினைப் பாம்பு விழுங்குவதால் சந்திர கிரகணம் நிகழ்வு நடக்கின்றது என கதையமைத்துக் கொண்டனர்.

இன்றளவும் இந்த நம்பிக்கையே நிலவி வருகின்றது. சங்க இலக்கியப் பாடல்களிலும் கிரகண மறைப்பு பற்றிக் குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது .

*பாம்பூர் மதியின் நுதலொளி கரப்பவும்* [88]

***வையகம் புலம்ப வளைஇ ய பாம்பின்***[89]

***வையெயிற் றுய்ந்த மதியின்***[90]

போன்ற பாடலடிகள் சந்திர மறைப்புப் பற்றிய பழமையைக் குறிப்பிடுகின்றன.

**கடல்**

இந்நில உலகமானது பெரும்பகுதி கடலால் சூழப்பட்டதாகும். கடலின் உள்ளே பலவகையான இயற்கை வளங்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. சங்க இலக்கியத்தில் கடலினைக் குறிக்க முந்நீர், பவ்வம், ஆழி, அழுவம் என்ற பல பெயர்கள் வழங்கப்பட்டுள்ளன.

கடல் என்ற சொல்லுக்கு ***சமுத்திரம், மிகுதி போறேன், சதய நட்சத்திரம்*** [91] என்று பல பொருள்களை மதுரைத் தமிழ்ப் பேரகராதி வழங்குகின்றது.

பிங்கல நிகண்டு கடலுக்கு வழங்கும் பெயர்களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகின்றது.

*அம்பரம், ஆர்கலி, அளக்கர், தோயம், அம்புராசி, மகராலயம், பரவை, சலதி, பௌவம், மகோநதி , சலநதி , வீரை, வேலாலயம், நீர், வெள்ளம், வாரி, வேலை, வாருணம், புணரி, சிந்து, முந்நீர், தொன்னீர், நரலை, சக்கரம், உந்தி, சலராசி, உப்பு, சாகரம், சமுத்திரம், நேமி, நதிபதி, பாராவாரம், ஓதம், பயோநதி, வாரிதி, வாரணம், வலயம், சுத்தி, சுழி, பெருநீர், அலை, உவா, சிந்துவாரம், ஓதம், அரி, குரவை, அழுவம், தெண்டிரை, கார்கோள்[92].*

இவ்வாறு பல பெயர்களைக் குறிப்பிடுகின்றன. இத்தகைய கடல் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் சங்கப் புலவர்களால் பாடப்பெற்றுள்ளது. அள்ள அள்ள குறையாத நீரினை உடைய கடலானது, வெள்ளிய அறைகளைக் கொண்டது என்ற பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

*அளப்பரு மையின் இருவிசும்(பு) அனையை*

*கொளக்குறை படாமையின் முந்நீர் அனையை[93]*

சங்க இலக்கியத்தில் நெய்தல் திணையில்தான் கடலைப் பற்றிய, கடற்கரை பற்றிய செய்திகள் அதிகமாகக் காணப்படுகின்றன. வடதிசை தவிர்த்த மற்றைய மூன்று திசைகளும் கடலால் சூழப்பட்டது. தமிழர்கள் கடற்பயணத்தில் பண்டை காலந்தொட்டே மிக்க தேர்ச்சி பெற்றிருந்தனர்.

**சங்க இலக்கியத்தில் காணலாகும் ஆறுகள்**

புவியின் மேற்பரப்பில் மழையினால் உண்டாகும் அளவுக்கு அதிகமான நீர்வரத்து, நிலத்தடி நீர் மற்றும் நீர்க்கசிவு பனிப்பாறை பனிப்பிரதேசங்களில் இருந்து

உருவாகி வரும் நீர் போன்றவற்றிலிருந்து ஆறுக்கு நீரானது கிடைக்கின்றது. தமிழக ஆறுகள் பருவமழை பொழியும் காலங்களில் வெள்ளநீரால் நிறைந்து ஓடும். கான்யாறுகள், ஓடைகள், சிற்றாறுகள் ஆகியன பலவும் ஒருங்கிணைந்த சங்கமமாக ஆறுகள் உருவாகின்றன.

ஆறு என்னும் நீர்வழி அமைப்பானது நீர்வரத்து மற்றும் நீர் வெளிப்படும் அளவு ஆகியவற்றைப் பொறுத்தே ஆறானது நிலைத்து நிற்கும். இல்லையெனில் இல்லாமல் போகும். புவியின் முக்கிய நிலப்பரப்புகளை உருவாக்குவதில் ஆறுகள் முக்கியப்பங்கு வகிக்கின்றன. தமிழகத்தில் பாயும் ஆறுகள் மேற்கில் தோன்றி கிழக்காக ஓடி வங்கக் கடலில் கலக்கின்றன.

மழையற்ற வறட்சி கொண்ட காலங்களில் ஆற்றின் நீரோட்டத்தின் அளவு குறைந்தும் கரைகள் சுருங்கியும் காட்சியளிக்கும். சங்க இலக்கியங்களில் பெருகி வரும் ஆற்றின் வெள்ளத்தைக்கண்டு மக்கள் மகிழ்ந்து கொண்டாடிய நிகழ்வினைப் புலவர்கள் தம்பாடல்களில் காட்சிப்படுத்தியுள்ளனர். இன்றளவும் தமிழக ஆற்றுப் பகுதிகளில் வெள்ளப்பெருக்கின் வரைவைக்கண்டு மலர்கள் தூவி வரவேற்பதைக் காணலாம்.

சங்க இலக்கியங்களில் இடம்பெற்ற ஆறுகளாக, அயிரி யாரு, காவிரியாறு, குமரியாறு, வாணியாறு, பெண்ணையாறு, சேயாறு, சிலம்பாறு, பேரியாறு, சுருளியாறு, பஃறுளியாறு போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன.

**அயிரியாறு**

அயிரி ஆற்றினது செய்தியை அகநானூற்று பாடல்வழி அறியமுடிகின்றது.

*கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப் பெடை*

*அயிரியாற்று அடைகரை வயிரின் நரலும்*[94]

என்ற பாடலில் ஆற்றங்கரையில் சுற்றியிருக்கும் பெண்மயில் ஒன்று நின்று ஆடியதாகக் குறிப்பிடுகின்றது.

மற்றொரு பாடலில் தோள் வலிமையுடைய வடுகன் இனத்தின் தலைவனாகிய எருமை என்பவனது நாட்டில் ஆறு காட்சிப்படுத்தப்பட்டுள்ளதனை,

*நேரா வன் தோள் வடுகர் பெரு மகன்,*

*பேர் இசை எருமை நல் நாட்டு உள்ளதை*

*அயிரி யாறு இறந்தனர்ஆயினும், மயர் இறந்து*[95]

மேற்கண்ட பாடல் தெரிவிக்கின்றது.

**அரிசிலாறு**

சங்க இலக்கியப் பாக்களில் இப்பாடல் ஒன்று மட்டுமே அரிசிலாறு ஆற்றைப் பற்றிக் கூறுகின்றது.

*ஏந்து கோட்டு யானை இசை வெங் கிள்ளி*

*வம்பு அணி உயர் கொடி அம்பர் சூழ்ந்த*

*அரிசில் அம் தண் அறல்*[96]

என்ற பாடல் வரியில் அம்பர் என்னும் நகரில் பாய்ந்த ஆறு அரிசிலாறு என்றும் இப்பகுதியைச் சோழமன்னனான கிள்ளிவளவனின் ஆட்சிக்குட்பட்டு இருந்ததாகப் பாடல் வழி அறியமுடிகின்றது.

**பஃறுளி ஆறு**

முத்தமிழ்க்காப்பியமான சிலப்பதிகாரத்தின் வழியே, பஃறுளியாறு பற்றிய செய்தியையும் அவ்வாறானது கடலால் விழுங்கப்பட்டதையும் அறியமுடிகின்றது. இவ்வாறானது பழந்தமிழகத்தின் தென்பகுதியில் பாய்ந்த ஆறாகக் கூறப்படுகின்றது. பஃறுளி ஆறு கடலில் கலக்கும் இடத்தில் பாண்டிய மன்னன் விழா எடுத்துக் கொண்டாடியதை,

*முந்நீர் விழவின், நெடியோன்*
*நல் நீர்ப் பஃறுளி மணலினும் பலவே*[97]

பாண்டியன் பல்யாகச் சாலை முதுகுடுமிப் பெருவழுதி பஃறுளி ஆற்றில் முந்நீர் விழா எடுத்துக் கொண்டாடினான் என்று குறிப்பிடுகின்றது.

**சேயாறு**

சேயாற்றின் சிறப்பினை ஆற்றுப்படை நூல்களில் ஒன்றான கூத்தராற்றுப்படை எனும் மலைப்படுகடாம் பாடலின் வழி அறிய முடிகின்றது.

*நெடுவரை இழி தரு நீத்தஞ் சால் அருவிக்*
*கடுவரல் கலுழிக் கட்கின் சேயாற்று*
*வடுவாழ் எக்கர் மணலினும் பலவே*[98]

எனும் பாடலில் நன்னனைப் பாடிப்பரிசில் பெற்று வரும் கூத்தர்கள் நெடுந்தொலைவு ஆற்றங்கரையின் வழியாக வந்தனர் என்று குறிப்பிடுகின்றது.

மேலும் இன்றைய சேலம் மாவட்டம் சேர்வராயன்மலையில் பிறக்கும் சேயாறு பின் பாலாற்றில் கலக்கிறது என்றும் கூறப்படுகின்றது. இதனை, ஆ. மு. பரமசிவானந்தம் தம் நூலில்,

*சேயாறு சேலம் மாவட்டத்தின்சேர்வராயன் மலையில் பிறக்கிறது என்றும், பின்னர் அது செங்கற்பட்டு மாவட்டம் முக்கூடலில் உள்ள பாலாற்றில் கலக்கிறது*[99] என்று குறிப்பிட்டுள்ளார்.

**சிலம்பாறு**

சங்க இலக்கியங்களுள் பரிபாடல் என்ற நூலில் மட்டுமே இவ்வாற்றைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. வேறு எந்த நூல்களிலும் இவற்றைப் பற்றிய செய்திகள் காணப்படவில்லை. திருமாலிருஞ்சோலையில் உள்ள மலையில் இவ்வாறானது தோன்றுகின்றது என்பதனை,

*அலங்கும் அருவி ஆர்த்து இமிழ்பு இழிய,*
*சிலம்பாறு அணிந்த, சீர் கெழு திருவின்*
*சோலையொடு தொடர் மொழி மாலிருங்குன்றம்*[100]

எனும் பாடலின் வழி அறிய முடிகின்றது.

**வாணியாறு**

வாணியாறு பற்றிய செய்தியினைப் பதிற்றுப்பத்துப் பாடலில் இடம்பெற்றுள்ள,

*கழை நிலை பெறா அக்குட்டத் தாயினும்*

*புனல் பாய் மகளி ராட வொழிந்த*

*பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்*

*சாந்து வருவானி நீரினும்*

*தீந் து தண் சாயலன் மன்ற தானே[101].*

இந்த ஆறானது, ஓடக்கோல் கொண்டு நிலைபெற முடியாத அளவிற்கு ஆழம் உடையதாகவும், தெளிந்த நீரினைக் கொண்டதாகவும் விளங்கிற்று என்றும் குறிப்பிடுகின்றது. மேலும் இவ்வாறானது இளஞ்சேரல் இரும்பொறையின் ஆட்சிக்கு உட்பட்ட நில எல்லைக்குள் பாய்ந்தோடும்.

வாணியாறு நீலகிரியில் தோன்றி, சந்தனமரம் செறிந்த காட்டு வழியாக வருதலின் சாந்து வருவாணி என்றார். அதன் நீர்மிக்கத் தட்பம் உடையது என்பதும் அது காவிரியோடு கலக்குமிடத்தில் இக்காலத்தும் இனிது காணலாம். நீலகிரி மலைப் பகுதியில் தோன்றும் வாணியாறு இறுதியில் காவிரி ஆற்றுடன் கலக்கிறது.

பேரியாறு

சேரநாட்டுப் பகுதியில் பாய்கின்ற ஏனைய ஆறுகளில் ஒன்றாகப் பேரியாறு திகழ்கின்றது. பேரியாற்றின் சிறப்பினைப் பற்றி பதிற்றுப்பத்து என்னும் நூலின் வழி காணமுடிகின்றது.

*அருவியாற்ற பெருவறற் காலையும்*

*அருஞ் செலற் பேராற் றிருங் கரை யுடைத்து[102].*

என்னும் பாடலடிகள் வறண்ட காலத்திலும் நீர்வற்றாமல் பாய்ந்த ஆறாகப் பேரியாறு விளங்கியதாகச் சுட்டுகின்றது.

மேலும், இவ்வாற்றைப் பேராறு என்றும் இப்பாடல் குறிப்பிடுகின்றது. இப்பேரியாறு இன்று எவ்விடத்தில் தோன்றி எங்குக் கலக்கின்றது என்ற செய்தியினைக் குறிப்பிடுகையில்,

*மேற்குத் தொடர்ச்சி மலையில் தோன்றி, அரபிக் கடலில் கலக்கும் குறிப்பிடத்தக்க ஆறுகளில் பேரியாறும் ஒன்றாகும். இப்பேரியாறு ஏலமலையைச் சேர்ந்த சிவகிரியில் தோன்றி, வடமேற்கு ஓடி பயனின்றி 'பாரூர்' என்ற இடத்தில் அரபிக்கடலில் கலக்கிறது*[103]*.* மேலும்

*அருவிகள் நீர் குறைந்தாலும் பேரியாறு வற்றுவதில்லை*[104]

என்று குறிப்பிடுவதிலிருந்து பேரியாற்றின் வளமையையும் சிறப்பையும் உணர முடிகின்றது.

**பெண்ணையாறு**

பெண்ணையாற்றினைத் தென்பெண்ணை ஆறு என்றும் வழங்குவர். வட தமிழ்நாட்டில் பாய்கின்ற ஆறுகளில் ஒன்றாகப் பெண்ணையாறு திகழ்கின்றது.

*நண்ணாத் தெவ்வர் தாங்கும்*
*பெண்ணையம் படைப்பை நாடுகிழ வோயே*[105]

பெண்ணையாற்றினைப் பற்றிய செய்திகளைச் சங்க இலக்கிய நூல்களாகிய அகநானூறு மற்றும் புறநானூற்றின் வழியே அறியமுடிகின்றது. மலையமான்

திருமுடிக்காரியின் ஆட்சிக்குட்பட்ட கொடுங்கால் என்னும் ஊரின் இடத்தே பெண்ணையாறு பாய்ந்ததை,

*நெடுந் தேர்க் காரி கொடுங்கால் முன்துறை,*

*பெண்ணை அம் பேரியாற்று நுண் அறல் கடுக்கும்*[106]

என்று அம்மூவனார் தம் பாடலடிகளில் குறிப்பிடுகின்றார். பெண்ணை ஆற்றினைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

*தென்பெண்ணை ஆறு என்றும் வழங்குவர். தென்பெண்ணை பாயும் இடமாகக் குறிக்கப்பெறும் கொடுங்கால் என்னும் ஊர் மலையமானுக்குச் சொந்தமான தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள கொடுங்கோலூர் என்பதே. மேலும் வட பெண்ணை ஆறு நில வரைப்படத்தின் மூலம் நோக்குகிறபோது வேங்கட மலைக்கு வடக்கே உள்ளது தெரியவரும். தமிழகத்தின் எல்லைக்குட்பட்ட வடவெல்லையின் கண் ஆண்டவன் மலையமான் என்பதால், தென்பெண்ணையே சங்க இலக்கியம் சுட்டும் பெண்ணையாறு எனக் கொள்ளல் வேண்டும்*[107]*.* இந்தப் பெண்ணையாறு இன்று கடலூரில் உள்ள கடலில் கலக்கின்றது.

குமரியாறு

கடற்கோளால் அழிந்துவிட்ட மிகவும் பழமை வாய்ந்த ஆறு குமரியாறு. மிகவும் பழமை வாய்ந்த குமரிக்கண்டம் என்னும் நிலப்பரப்பு கடலால் கொள்ளப்படுவதற்கு முன்னமே இவற்றைப் பற்றிய பாடல்கள் சங்கப் புலவர்கள் பாடியிருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக, காரிகிழார் பாடிய புறப்பாடலில் குமரி ஆற்றைப்பற்றி,

*வடாஅது பனி படு நெடு வரை வடக்கும்,*

*தெனாஅது உரு கெழு குமரியின் தெற்கும்,*

*குணாஅது கரை பொரு தொடு கடற் குணக்கும்,*

*குடாஅது தொன்று முதிர் பௌவத்தின் குடக்கும்,*[108]

என்னும் பாடலடிகளில் வடக்குப்பகுதியில் பனி நிறைந்த இமயமலையும் தெற்குப் பகுதியில் குமரியும் கிழக்கு மற்றும் மேற்குத் திசையில் உள்ள கடலால் சூழப்பட்டுள்ள இந்திய நாட்டின் எல்லையைக் குறிப்பிடுவதும் இப்பாடலில் சூட்டப்பட்டுள்ள குமரி என்பது குமரிக்காற்றைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். மேலும்,

*குமரிஅம் பெருந் துறை அயிரை மாந்தி,*

*வடமலைப் பெயர்குவைஆயின்,*[109]

என்று கோப்பெருஞ்சோழனைப் பாடிய பிசிராந்தையார் குமரியாற்றைப் பற்றியும் பாடியுள்ளமை அறியமுடிகின்றது.

**பொருநை ஆறு**

சேரர்களின் வஞ்சி மாநகரில் பாய்ந்த ஆறாகச் சங்க இலக்கியப் பாடல்கள் தெரிவிக்கின்றது. அகநானூறு, புறநானூறு என்ற இவ்விரு இலக்கியங்களில் இவற்றைப் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. இப்பொருநை ஆற்றை **ஆண் பொருநை** என்றும் **தண்பொருநை** என்றும் இரண்டாகப் பிரிக்கின்றன. இப்பொருநை ஆறு தமிழ்நாட்டு நகரங்களில் பாய்ந்ததாகக் குறிப்புகள் ஏதும் சங்க இலக்கியப் பாடல்களில் காணப்பெறவில்லை. புறநானூற்றுப் பாடலொன்றில் பொருநை ஆறு வஞ்சி மாநகரின் மதிலை ஒட்டிப் பாய்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

*புல் இலை வஞ்சிப் புறமதில் அலைக்கும்*

*கல்லென் பொருநை மணலினும்*[110]

எனப் பாடியுள்ளமையை அறியமுடிகின்றது.

**வைகையாறு**

சங்க இலக்கியப் பாடல்களில் வைகை ஆற்றைப் பற்றிய சிறப்புகள் இடம் பெறுகின்றன. காவிரியாற்றினையடுத்து மிக்க வளமை பொருந்திய நதியாக வைகையாறு விளங்குகின்றது. ஏலகிரியில் தோன்றி தென்மாவட்டங்களில் பாய்கின்ற வையை ஆறானது, இறுதியில் வங்கக்கடலில் கலக்கிறது. எட்டுத்தொகையில் பரிபாடலின் எட்டுப் பாடல்கள் வைகை ஆற்றின் பெருமையையும், வளத்தினையும் வெள்ளநீர்ப் பெருக்கத்தினையும் பற்றி சுட்டுகின்றது.

பெருக்கெடுத்து வரும் வைகை ஆற்றில் வெள்ள நீரினை அறிந்த மதுரை மாநகர மக்கள் வைகை ஆற்றை வரவேற்று மகிழ்ந்து கொண்டாடிய சிறப்பினைப் பரிபாடல் விளக்குகின்றது.

*கவிழ்ந்த புனலின் கயம் தண் கழுநீர்*

*அவிழ்ந்த மலர் மீதுற்றென ஒருசார்;*

*மாதர் மடநல்லார், மணலின் எழுதிய* [111]

என்ற பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன.

நீளும் வைகையாற்றின் அழகினைக் கூறுகையில், தாது நிறைந்த பூக்களைத் தன்னோடு வையை வெள்ள நீராகக்கொண்டு அழகினை இப்பாடல் காட்சிப்

படுத்துகின்றது. பெருக்கெடுத்து வரும் வைகை ஆற்றின் வெள்ள நீரை அகநானுறு கூறுகையில்,

*தாதுசூழ் கோங்கின் பூமலர் தாஅய்க்*

*கோதையி னொழுகும் விரிநீர் நல்வரல்*

*அவிரறல் வையைத் துறைதுறை தோறும்*[112]

*..............................................*

*மழையாடு மலையி னிவந்த மாடமொடு .*

*வையை யன்ன வழக்குடை வாயில்*[113].

என்று குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது.

*தென்னிந்தியாவின் தமிழகத்தில் பாயும் ஆறுகளில் ஒன்று வைகை நதி. மேற்கு தொடர்ச்சி மலைகளிலுள்ள பெரியார் பீடபூமியில் தோன்றி வட கிழக்காகப் பாய்ந்து வடக்கே பழனி குன்றுகளும் தெற்கே வருஷநாடு குன்றுகளும் அரண் செய்யப்பட்டுள்ள கம்பம் பள்ளத்தாக்கை அடைகிறது. பின்னர் தென் கிழக்காகத் திரும்பி மதுரை மாநகர் வழியாகப் பாய்ந்து இராமநாதபுரம் மாவட்டத்தில் வங்காள விரிகுடாவில் பாக்கு நீரணையில் கலக்கிறது*[114]

மேலும் *வைகை ஆற்றின் நீளம் 258 கிலோ மீட்டர். பாசனப்பரப்பு 7031 சதுர மீட்டர். பொதுவாக மழைக்காலத்தில் குறிப்பாக வடகிழக்குப் பருவமழைக் காலங்களில் மட்டும் இவ்வாற்றில் நீர்ப்பெருக்கு ஏற்படும். பிற்காலங்களில் பொதுவாகவே வறண்டே காணப்படும்*[115]

இவ்வாறு வையை ஆற்றின் சிறப்பினைச் சங்ககாலந்தொட்டு பிற்கால இலக்கியங்கள் வரையிலும் வையை நதியின் சிறப்பினையும் வளமையினையும் உணரமுடிகின்றது.

**காவிரியாறு**

காவிரியாற்றில் தமிழகம் பெற்ற நீர்வளமும் நிலவளமும் குறித்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க இலக்கியங்களில் புலவர்கள் பாடிய பாடல்வழி அறியமுடிகின்றது. காவிரியின் பெருமை என்பது இக்கால இலக்கியங்கள் வரை விரிவாகப் பேசப்பட்டு வருகின்றன. புறநானூறு பாடிய ஆவூர் மூலங்கிழார் சோழநாட்டினைக் காவிரியாறு வளப்படுத்திய செய்தியினைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

*..............குடா அது*
*பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற்*
*பூவிரி புதுநீர் காவிரி புரக்கும்*
*தண்புனற் படைப்பை எம்மூர்*[116]

இப்பாடல் வழி மேற்குத் திசையில் குடகில் பிறக்கும் காவிரியானது, பெருக்கெடுத்து ஓடி வந்து சோழநாட்டினை வளப்படுத்தியதாகக் குறிப்பிடுகின்றார்.

அதுமட்டுமின்றி சோழர்களின் கடல் துறைமுகமாகத் திகழ்ந்த பூம்புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினத்தில் காவிரியாறு கடலோடு கலக்கும் காட்சியினைப் பின்வருமாறு சிறப்பிக்கின்றார்.

*மாமலை அணைத்த கொண்மூப் போலவும்*

*தாய்முலை தழுவிய குழவி போலவும்*

*தேறுநீர்ப் புணரியொடு யாறுதலை மணக்கும்*[117]

என்னும் பாடலடியில் தாயினுடைய குழந்தையைத் தழுவிய முலையைப்போல காவிரியானது பூம்புகார் கடலினூடே சென்றடைந்தது என்று புலவர் குறிப்பிடுகிறார். மேலும் காவிரியாறு செல்லும் பாதையினை,

*காவிக்கோடு தோய் மலிற்நிறைக் கழையழி நீத்தம்*[118]

என்னும் பாடலடிகள் மலையில் தோன்றி கடலில் கலக்கும் காவிரி வெள்ளமாக ஓடியது. பின் தான் மோதும் இரு கரைகளையும் தகர்த்துச் செல்கின்ற பேராறாக காவிரி கடந்து சென்றது என்று காட்சிப்படுத்தப்படுகிறது.

காவிரி தமிழகத்தின் மிகப்பெரிய ஆறு. இது கர்நாடக மாநிலத்தில் குடகு மலையில் பிரம்மகிரியில் உற்பத்தியாகிறது. மைசூர் பீடபூமியைக் கடந்து சிவ சமுத்திரம் நீர்வீழ்ச்சிக்குச் சற்றுக் கீழே தமிழகத்திற்குள் நுழைகிறது. சுமார் 260 கிலோமீட்டர் நீளமுடைய சேலம், கோயம்புத்தூர், கரூர், திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்கள் வழியாகப் பாய்ந்து காவிரிப்பூம்பட்டினத்தில் வங்காள விரிகுடாவில் கலக்கிறது. பவானி, நொய்யல் மற்றும் அமராவதி இதன் கிளை நதிகளாகும். வடகிழக்குப் பருவமழையால் மழைபெறும் பல்வேறு சிறு நதிகள் மற்றும் ஓடைகள் இதனுள் கலக்கின்றன.

*கர்நாடக மாநிலத்திலுள்ள மேற்குத் தொடர்ச்சி மலையிலுள்ள குடகு மாவட்டத்தைச் சேர்ந்த தலைக்காவேரி என்ற இடத்தில் 44 ஆயிரம் அடி உயரத்தில் தோன்றுகிறது என்றும், இதன் நீளம் 800 கிலோ மீட்டர் என்று குறிக்கப்படுகிறது. மேலும் கர்நாடகாவில் காவிரியின் நீளம் 320 கிலோ மீட்டர் என்றும், தமிழ்நாட்டில் காவிரியின் நீளம் 416 கிலோ மீட்டர் எனவும் கர்நாடகத் தமிழக எல்லையில் காவிரியின் நீளம் அறுபத்தி நான்கு கிலோ மீட்டர் ஆகும்*[119] என்று கூறுகின்றார். திருச்சிராப்பள்ளிக்குப் பதினான்கு கிலோ மீட்டர் முன்பாகவே இது இரண்டாகப் பிரிகிறது. இதன் வடக்குப் பிரிவு கொள்ளிடம் ஆறு என்று அழைக்கப்படுகிறது. தமிழகத்தின் உயிர்நாடியாகத் திகழும் காவிரியாறு வெள்ளம் பெருக்கெடுத்து சோழநாட்டில் பாய்ந்து அந்நாட்டை வளம்பெறச் செய்தமையால் சோழநாடு சோறுடைத்து என்று போற்றப்பட்டது. காவிரியாற்றில் வெள்ளம் பெருகி நாட்டை வளப்படுத்திய செய்தியினை இலக்கியங்கள் பலவாறாகப் புகழ்ந்துரைக்கின்றன.

குடகுமலையில் பிறந்த காவிரியாறு கீழைக் கடலில் கலப்பதை மலைபடுகடாம் குறிப்பிடுவதை அறியலாம். காவிரியாறு, என்றும் வற்றாது நீர் பெருக்கெடுத்து ஓடி வளம் கொழிக்கச் செய்யும் வளமான ஆறு என்பதை,

*சோழ மண்டலத்தின் நீர் வளம் மற்றும் நீர் மேலாண்மை திறம் பற்றியறிய காவிரியின் சிறப்புக் கூறுகளை ஆராய்வது முக்கியமானதாகும். காவிரியின் பெருமையை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க இலக்கிய நூல்கள் தொடங்கி பிற்கால இலக்கியங்கள் வரை விரிவாகப் பேசுகின்றன*[120]*.*

காவிரியாற்றின் சிறப்பினைச் சங்ககாலந்தொட்டு பிற்காலம் வரையிலான வரலாற்றினை எடுத்தியம்பக்கூடிய பெருமையையுடையது காவிரி. காவிரியாறு நீர் பெருகி வேகத்துடன் ஆர்ப்பரித்து பெருகி வருவதையும் அவற்றிலேயே சுழல்கள் நிறைந்திருந்தன என்பதனை அகநானூறு,

*கடும் புனல் மலிந்த காவிரி பேரியாற்று*

*நெடுஞ் சுழி நீத்தம்*[121]

என்று காட்சிப்படுத்துகிறது.

மேலும் காவிரி ஆறு நீர்ப் பெருகி வருவதை மற்றொரு பாடலில்,

*புதுவது வந்த காவிரிக்*

*கோடு தோய் மலிர்நிறை, ஆடியோரே*[122]

என்று குறிப்பிடுகின்றது. காவிரியாற்றுப் பகுதிகளில் பாயும் நீரினைக்கொண்டு அப்பகுதியில் வளமான விளைநிலங்கள் விளைச்சல் பெற்றன என்பதை சங்கப் பாடல்கள் பல தெரிவிக்கின்றன. அவ்வாறு காவிரியாறு பாய்வதனால் தித்தன் நாட்டில் அதிக நெல் விளைந்தது.

*இழை அணி பணைத் தோள், ஐயை தந்தை,*

*மழை வளம் தரூஉம் மா வண் தித்தன்,*

*பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண்*

*கழை நிலை பெறாஅக் காவிரி நீத்தம்*[123]

என்ற அடிகள் குறிப்பிடுகின்றது.

மேலும் காவிரியாறானது மண் துகள்களை விரட்டி வந்து தாக்கியது. காவிரி ஆறானது வேகமாக விரைந்துவரும் வேளையில் மண்துகள்களைத் திரட்டிக் கொண்டு வந்ததாகக் குறிப்பிடுகின்றது. காவிரியாறு சோழநாட்டினுள் வண்டல் மண்ணைப் படியச் செய்ததாக அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுவதை,

*கலம் பெயக் கவிழ்ந்த கழல் தொடித் தடக்கை,*
*வலம் படு வென்றி வாய் வாள், சோழர்*
*இலங்கு நீர்க் காவிரி இழிபுனல் வரித்த*
*அறல் என நெறிந்த கூந்தல்[124].*

ஆறுகள் மூப்பு நிலையில் உள்ளாகும்போது வண்டல் மண்ணைப் படியச் செய்யும். அவ்வாறே சோழநாட்டில் காவிரியாறு வரிவரியாக வண்டல் மண்ணைப் படித்துச் சென்றதாகவும், இது அவரின் மூப்பு நிலையை உணர்த்துவதாகவும் உள்ளது எனக் குறிப்பிடுகின்றது.

மேற்கூறிய சங்கப் பாடல்கள் வழியேயும் பிற்கால நூலாசிரியர்கள் குறிப்பிடும் கருத்துகள் வாயிலாகவும் தமிழகத்துச் சோழநாட்டினை வளப்படுத்திய காவிரியாற்றின் மாட்சிமையினையும் வரலாற்றினையும் நன்கு அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

- இயற்கை என்ற சொல் நம்மைச் சுற்றியிருக்கின்ற மனிதனால் உண்டாக்கப்படாத நிலம், நீர், காற்று, வானம், தீ ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது எனக்கொள்ளலாம். மனித இனம் வாழ்வதற்கு மட்டுமல்லாது அருவிகள், மரங்கள், பறவைகள், விலங்குகள் என அனைத்திற்குமான பங்களிப்பாக இயற்கை திகழ்ந்து வருகின்றது என்பதை அறியமுடிகின்றது.
- அறிவியல் தொழில்நுட்பம் வளராத அக்காலத்தில் அண்டம் குறித்த நம் பழந்தமிழரின் சிந்தனை நம்மை வியக்கச்செய்கிறது.
- பழங்கால மனிதன் மேற்கொண்ட ஆராய்ச்சிகளுள் வானத்தைப் பற்றிய ஆராய்ச்சியும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். வானியல் ஆராய்ச்சியில் பண்டையத் தமிழர் பழங்காலந்தொட்டு சிறந்து விளங்கியமையை நம் இலக்கியங்களின் வழி உணரமுடிகின்றது.
- வானிலிருந்து காற்றும் காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் தோன்றிய நிலைகளை எடுத்துரைக்கின்றது.
- உலக உயிரினங்களின் வாழ்வியல் சூழலுக்கு அடிப்படைக் காரணியாகத் திகழ்வது நீரே. ஞாயிற்றுக் குடும்பக் கோள்களில் புவிக்கோளில் மட்டுமே நீர் உள்ளது.

- புவிக்கோளில் நீர் இருக்கின்றமையாலேயே உயிர்கள் தோன்றி வாழ முடிகின்றது. மற்ற கோள்களில் இத்தகைய நீர்ச்சூழல் இல்லாதிருத்தலால் உயிர்கள் உருவாகப் பெறவில்லை என்பதை அறியமுடிகின்றது.
- ஆதிமனிதன் தீயை இயற்கையின் மூலமே பெற்றான். காடுகளில் இயல்பாக ஏற்படும் காட்டுத்தீ வானிலிருந்து விழுகின்ற இடி, மின்னல் இவற்றின் மூலமாக பாதிப்புக்குள்ளாகின்றன என்கின்ற அறிவியல் செய்தியினைக் காண முடிகின்றது. ஐம்பூதங்களில் இறுதியாகத் தோன்றியது நிலமாகும். சூரியக் குடும்பத்தின் ஏனைய கோள்களிலும் நில அமைப்புகளைக் கொண்டுள்ளன. இருப்பினும் புவியினுடைய நில அமைப்பு சிறந்ததாகக் கருதப்படுவதைனை அறியமுடிகின்றது.
- உலகிற்கு இயற்கையளித்த மிகப்பெரிய வரப்பிரசாதம் மழையாகும். மழையானது கடல் நீர் ஆவியாகி, மழை மேகமாக உருவெடுக்கின்றது. மழை மேகங்களின் வழியே இடியும், மின்னலும் உருவெடுக்கின்றது என்ற செய்தியினைப் பெறமுடிகின்றது.
- சங்கத்தமிழர்கள் வானியல் சார்ந்த கலையில் சிறந்து விளங்கியுள்ளனர் என்பதனை சங்கப்பாடலின் ஊடே, கோள்கள், அவற்றின் இயக்கம், விண்மீன்கள், அவற்றின் நிலை போன்ற செய்திகளையும் சூரிய குடும்பத்தில் உள்ள ஏனைய கோள்களில் மிகுதியான வெப்பமும் ஒளியும் கொண்டதாக உள்ளது வெள்ளிக்கோளே என்பன போன்ற செய்திகள் பதிவு செய்யப்பட்டுள்ளதனைக் காணமுடிகின்றது.

- சங்க இலக்கியத்தில் நெய்தல் திணையில்தான் கடலைப்பற்றி கடற்கரை பற்றியச் செய்திகள் அதிகமாகக் காணப்படுகின்றன.
- சங்க இலக்கியப் பாடல்களின் வாயிலாக அயிரியாறு, அரிசிலாறு, பஃறுளியாறு, பேரியாறு, பொருநை ஆறு, சிலம்பாறு, குமரியாறு, வாணி ஆறு, வைகையாறு, காவிரியாறு போன்ற ஆறுகளைப் பற்றியச் செய்திகளையும் மேற்கண்ட ஆய்வுக் கருத்துக்களின்வழி பெறமுடிகின்றது.

# அடிக்குறிப்புகள்

1. கழக அகராதி, ப. 114
2. கிரியாவின் தற்கால தமிழகராதி, ப. 142
3. தொல்.சொல். கிளவி. நூற்.19
4. திரு .வி. கல்யாண சுந்தரனார், முருகன் அல்லது அழகு, ப. 13
5. சா.மல்லிகா, கண்ணதாசனின் திரை இசைப்பாடல்களில் இயற்கை, (ஆய்வேடு) ப. 3
6. இராம. குருநாதன், குறிஞ்சி வளம், ப. 77
7. தொல். பொருள். மரபி. நூற். 635
8. பரி. பா. 2: 5 -12
9. பரி :பா. 6: 1 - 2
10. புறம். பா. 2
11. தொல். எழுத்து . நூற். 306
12. தொல். சொல். நூற். 358
13. பூ. மு. அன்புசிவா, தமிழிலக்கியத்தில் வானியல் சிந்தனைகள் (இலக்கியமும் அறிவியலும்) ப. 354
14. பெ.துரைசாமி, தமிழரின் வானியல் கோட்பாடுகள், ப.12
15. கு .இராஜாராம் (மொ.ஆ.), காற்று வெளியினிலே, ப. 8
16. அ .கி. மூர்த்தி, அறிவியல் அகராதி, ப. 40

17. எஸ். ராமகிருஷ்ணன், கிரியாவின் தற்கால தமிழகராதி ப. 410
18. சுற்றுச்சூழல் களஞ்சிய அகராதி, (தொகுதி ஒன்று) ப. 40
19. சா.வே. சுப்பிரமணியன், தோ. அ. திவாகர நிகண்டு தமிழ் நிகண்டுகள் (தொகுதி ஒன்று) நூ. 38
20. பரி; பாடல் 10 :123 -125
21. அகம் , பா. 71 :13-15
22. கு. ராசாராம், காற்று வெளியினிலே, ப: 8
23. பரி. பா. 8: 98
24. நற். பா. 107 : 3 - 5
25. அகம். பா. 199: 1 - 3
26. குறுந். பா. 195: 5
27. அகம். பா. 162: 8
28. முல்லைப். அடி - 52
29. அகம். பா. 298: 6
30. குறுந். பா. 39 :1 -2
31. ஐங்குறு. பா. 320 : 2 - 3
32. மு. வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப: 399
33. நெடு. அடி - 173
34. அகம். பா. 183:13
35. மேலது. பாடல் - 235: 15 - 16

36. நற். பா. 152: 5 - 6

37. அகம். பா. 78 : 8 -10

38. மேலது. பா. 13: 21

39. குறுந். பா. 110 : 6 -7

40. ஐங்குறு. பாடல் – 236 : 3

41. அகம். பா. 58:12

42. நெடு. அடி - 60 -62

43. மதுரைக். அடி - 355 -358

44. அகம். பா. 237 :3 - 6

45. நற். பா. 74: 7 -10

46. அகம். பா. 40: 6 - 8

47. குறுந். பா. 185: 4 - 6

48. அகம். பா. 353: 7 - 10

49. மேலது. பா. 143: 2 - 5

50. மேலது. பா. 101 : 11 - 14

51. புறம்; பா;34: 21 - 22

52. கலைக். களஞ். தொகுதி – 6, ப. 473.

53. மு.தங்கராசு, சங்க இலக்கியத்தில் நிலவியல், ப.5

54. தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர், தமிழ்நாட்டு வரலாற்று - தொல். பழங்காலம் ப. 2

55. மதுரைக். அடி - 470

56. ஐங்குறு. பா. 320 : 3

57. கலித். பா.106 :18

58. புறம். பா. 363 :1

59. பரி. பா. 18 : 3

60. தொல். பொருள். அகத். நூ. 5

61. தொல். பொருள். அகத். நூ. 11

62. புறம். பா. 18 :18

63. நற். பா. 171 : 6

64. குறள். எண். 20

65. ஆ.மோகன கிருஷ்ணன், அறிவியல் தொழில்நுட்ப நூல்வரிசை, நீர் இயல், (தொகுதி - 1) ப. 5

66. நி. கிரேட்டர், நீர் நிர்வாகம், ப.1

67. புறம். பா. 287 : 3

68. நற். பா. 362 ; 3

69. பதிற்றுப், பா. 81 ; 2 - 5

70. நற். பா. 140 ; 1 - 2

71. மேலது. பா. 153 ; 1 - 5

72. மேலது. பா. 346 ;1 - 2

73. கலித். பா. 82 ; 1 - 2

74. சா.வே. சுப்பிரமணியன், திவாகர நிகண்டு, தமிழ் நிகண்டுகள் (தொகுதி -1) நூ. 45

75. சுற்றுச்சூழல் களஞ்சிய அகராதி தொகுதி – 1, பக்கம் - 448

76. அறிவியல் களஞ்சியம், தொகுதி -12, ப. 196

77. மலை. அடி - 446 -447

78. நற். பா. 163: 9 -10

79. புறம். பா. 59 : 4 - 6

80. அறிவியல் களஞ்சியம், தொகுதி - 3, ப. 759

81. நற். பா. 112: 5 - 6

82. புறம். பா. 58 : 6 - 8

83. பெ.துரைசாமி, தமிழரின் வானியல் கோட்பாடுகள், ப.56

84. பா. ஐயம்பெருமாள், தமிழக வானியல் சிந்தனைகள், ப. 67

85. புறம். பா. 27: 11 - 14

86. பெரும்பாண், அடி - 11

87. ஐங்குறு. பா. 443: 2

88. கலித். பா. 104: 37

89. நற். பா. 337 : 6 -7

90. நற். பா. 128 : 2

91. மதுரைத் தமிழ் பேரகராதி, ப. 466

92. பிங்கல நிகண்டு மூலமும் உரையும், ப: 101

93. பதிற்றுப். பா. 90 :15 -16

94. அகம். பா. 177 : 10 - 11

95. மேலது. பா. 253 : 18 - 20

96. நற். பா. 141 : 9 - 11

97. புறம். பா. 9 :10 -11

98. மலை. பா. 554 - 556

99. பரமசிவானந்தம், மலைவாழ் மக்களின் மாண்பு, ப. 37

100. பரி. பா. 15 : 21 - 23

101. பதிற்றுப், பா. 86 : 9 -13

102. பதிற்றுப். பா. 88 : 25

103. அ.கு. பாலசுந்தரனார், திராவிடநாடு, முதல் பாகம், ப. 38

104. அவ்வை. துரைசாமிப் பிள்ளை, உரை, பக். 197-198

105. புறம். பா.126 : 22 - 23

106. அகம். பா. 35 : 15 - 16

107. மு. தங்கராசு, சங்க இலக்கியத்தில் நிலவியல், ப. 123

108. புறம். பா. 6 :1 - 4

109. மேலது. பா. 67 : 6 - 7

110. மேலது. பா. 387 : 33 - 34

111. பரி. பா. 7 : 23 - 25

112. பரி. பா. 338 - 340

113. பரி. பா. 355 - 356

114. தமிழக நீர் ஆதாரமும் நிலத்தடி நீரும், ப. 69

115. மேலது. ப. 69

116. புறம். பா. 166 : 26 - 29

117. பட்டி. பா. அடி- 95 - 97

118. புறம். பா. 178

119. தமிழக நீர் ஆதாரமும் நிலத்தடிநீரும், ப. 47

120. முனைவர் மணிமாறன், தமிழரின் நீர்மேலாண்மை, ப. 28

121. அகம். பா. 62 : 9 - 10

122. மேலது. பா. 166 : 14 - 15

123. மேலது. பா. 6 : 3 - 6

124. மேலது. பா. 213 : 20 - 23

# சங்கஇலக்கிய அகவாழ்வில் நீரியல் சிந்தனைகள்

## முன்னுரை

உலகநிலையில் பொதுவாக வைத்துக் கூறவேண்டுமெனில் காதல் ஒழுக்கம் என்பது புணர்தல், பிரிதல் என்ற இருநிலைப்பட்டதுதான் எனினும் பண்டைய தமிழர்களின் அகவாழ்வு என்பது மற்ற இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள காதல் ஒழுக்கங்களிலிருந்து சற்று வேறுபட்ட சிறப்பினைக் கொண்டது. எவ்வாறெனில் ஒத்த அன்பு கொண்ட தலைவன், தலைவியின் அன்பின் உள்ளம் சார்ந்த காதல் நிலைகளை, பிரிவாற்றாமையின் நிலையை விளக்கி விரித்துரைப்பதே தமிழ் இலக்கியங்களின் சிறப்பு.

மனித உள்ளத்தில் இயல்பாக எழுகின்ற காதல் தொடர்பான உணர்ச்சிகள், அது குறித்தான நிகழ்வுகள் என அனைத்தையும் அகம் என்றே குறிப்பிடுவர். இத்தகைய உணர்வு கொண்ட அக எண்ணங்கள் ஆணும் பெண்ணும் தன் மனதளவிலேயே அனுபவித்து உணரக்கூடிய இன்ப உணர்வினைப் பிறரிடம் எடுத்துரைக்க முடியாத தன்மை கொண்டதாக இருப்பவற்றை அகம் என்ற சொல்லால் குறிப்பிடப் படுகின்றது.

அகம் சார்ந்த பாடல்கள் என்பது ஒத்த அன்புடைய இருவரின் உள்ள உணர்வுகள் சார்ந்தவைகளாகவே புலவர்கள் பாடப்பெற்றிருப்பதை அனைத்துப் பாடல்களிலும் காணமுடிகின்றது. அவ்வகையில் சங்க இலக்கியப் பாடல்களில் அகம் சார்ந்த வாழ்வில் நீர் பெறும் பங்கு குறித்தும் அக இலக்கியங்களில் பன்னிரண்டு நீர்நிலைகளைப் பற்றியும் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். அவை கடல், அருவி, சுனை, பொய்கை, நீரற்ற சுனை, கயம், குளம், கேணி, கான்யாறு, மூலிகைநீர், கங்கை ஆறு,

நீர் ஊழல், முன்னீர் என்பனவாகும். இவற்றில் கடல், அருவி, சுனை, பொய்கை, கான்யாறு போன்ற நீர்நிலைகள் அதிகளவில் குறிக்கப்பெற்றுள்ளன.

தலைவன் தலைவியின் அகவாழ்வில் நீர்பெறும் ஆளுமை, களவு, கற்பு என்கின்ற நிலையில் களவு வாழ்விலும், கற்பு வாழ்விலும் தலைவன் தலைவி சந்திப்பதற்குக் குறியிடமாக நீர்த்துறை அமையும் பாங்கு, ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்ளும் இயற்கை நிகழ்வாக நீர்த்துறை அமையும் விதம், பகற்குறி, இரவுக்குறி ஆகிய இருநிலைகளில் சந்திப்பிற்கு துரிதமாக நீர்த்துறை அமையப்பெற்று பாடப்பெற்றுள்ளமை காணமுடிகின்றது. நீர்சார்ந்த நிகழ்வுகளோடு சங்கப் பாடல்கள் வழியே எடுத்துரைப்பதாக இவ்வாய்வு அமைகின்றது.

**அகப்பாடல்கள் ஓர் - அறிமுகம்**

பாட்டும் தொகையும் என்று வழங்கப்பெறும் சங்க இலக்கியத்தில் மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 2381. அவற்றுள் அகத்திணை சார்ந்த பாடல்கள் 1862. சங்கப் பாடல்களைப் பாடிய புலவர்கள் 473 . இவற்றுள் அகம் சார்ந்த பாடல்களைப் பாடிய புலவர்கள் 378 பேர்களாவர். இந்த எண்ணிக்கையை ஆராயும்போது புறப்பாடல்களைப் பாடிய புலவர்களைக் காட்டிலும் மும்மடங்கு அகத்திணை பாடியவர்கள் இருப்பதை நோக்கும்போது சங்ககாலப் புலவர்கள் அகத்திணை சார்ந்த பாடல்களைப் பாடுவதில் எவ்வளவு பேரார்வம் கொண்டிருந்தனர் என்பதை உணரமுடிகின்றது.

அதுமட்டுமின்றி அகம் பாடுவதே சிறந்த புலமையென எண்ணம் கொண்டிருந்ததையும் ஆராயமுடிகின்றது. சங்க அகத்திணைப் பாடல்களைப்

படிக்கின்ற பொழுது ஒவ்வொரு பாடலிலும் இருபாலரின் உள்ளங்களை உணர முடிகின்றது. அகப்பாடல்களில் காதல் தலைமை உடைய தலைவன் தலைவியைப் பற்றி பாங்கன், ஊரார், கண்டோர், அறிவர் போன்றோர் மனதில் எழும் செய்திகளும் உணரமுடிகின்றது.

சங்க அகப்பாடல்களை நுணுகி ஆராய்ந்தோமானால் அக்கால மக்களின் உள்ளங்களின் வெவ்வேறு உளநிலைகள் நமக்குத் தெரிய வருதோடு உளவியல் அறிவுநுட்பத்துடன் ஆராய்ந்தால் இன்னும் பல அரிய செய்திகள் நமக்குத் தெரியவரும்.

**அக பாடல்களின்- வரையறை**

சங்கப் பாடல்களை அகம் என்றும் புறம் என்றும் இரு வகையினதாகப் பிரிப்பதற்கு அடிப்படையான காரணத்தை ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றபொழுது மரபுரீதியான கருத்தினை முன் வைக்கின்றனர். அதுதான் பெயர் குறிப்பிடாத மரபாகும். அதனடிப்படையில் சங்க அகப்பாடல்களாக 1862 பாடல்கள் குறிப்பிடப்படுகின்றன.

> *மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்*
> *சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்* [1]

மேற்கண்ட நூற்பாவின் பொருள் யாதெனில் மக்களின் அகவாழ்வைப்பற்றி விவரிக்கின்றபொழுது அங்கு ஆண், பெண் என்ற இருபாலரின் பெயரினைச் சுட்டக் கூடாது என வலியுறுத்தப்படுகின்றது. அவ்வாறு பெயர் குறிக்கப்பட்டிருப்பின் அகப்பாடல்களில் தம்மன உணர்வினைப் பொருத்திப் பார்க்க இயலாத நிலை

ஏற்படும். இதனைக் கருத்தில்கொண்டு அக்காலப் புலவர்கள் பெயர் சுட்டாத மரபினைக் கையாண்டு இருக்கலாம் என்பதை உணரமுடிகின்றது.

எல்லா அகப்பாடல்களும் கூற்றுகளாகப் பாடப்பெற்றிருப்பதை இதன் பொருட்டு எனலாம். அக்கால புலவன் தான் கூற வந்த செய்தியினை நேரிடையாகக் கூறாது தலைவன், தலைவி, தோழி, செவிலி, பரத்தை, நற்றாய், பாங்கன், பாணன், விறலி, கண்டோர், கேட்டோர், வாயில்கள் எனப் பாத்திரங்களின் ஊடே எடுத்து உரைத்திருப்பதனைக் காணலாம்.

**அகம் - விளக்கம்**

அகம் என்பதற்கு இலக்கண ஆய்வாளர்கள் கொடுக்கின்ற விளக்கத்தை நோக்குகின்றபொழுது தலைவன், தலைவி என்ற இரு பாலரின் உறவு நிலைக்கு முக்கியத்துவம் கொடுத்துக் கூறியிருப்பதனை அறியமுடிகின்றது. தமிழரின் வாழ்வியலுக்கும் இலக்கணம் வகுத்த பெருமைகொண்ட தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்திற்கு உரை விளக்கம் எழுதிய இளம்பூரணர் அகம் என்ற சொல்லை விளக்குகின்ற பொழுது அதனைப் **போக நுகர்ச்சி** என்றே குறிப்பிடுகின்றார்.

> ***அகப்பொருளாவது போக நுகர்ச்சி;***
>
> ***ஆதலான் அதன் ஆய பயன்***
>
> ***தானே அறிதலின் அகம்*** [2]

மேற்கண்ட நூற்பாவின் பொருள் யாதெனில் போக நுகர்ச்சி என்பது ஆண், பெண் என்ற இருவரின் உறவின் அடிப்படையில் ஏற்படுகின்ற இன்ப நுகர்ச்சியைக் குறிப்பதாகும் என்று பொருள் விளக்கம் அளிக்கின்றார். இதே கருத்தினைப் பின்னர் வந்த நச்சினார்க்கினியரும் குறிப்பிடுவதனை,

*ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்கு புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார், எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகுபெயராம். இதனை ஒழிந்ததன, ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லோருக்குந் துய்த்துணரப்படுத்தலானும் இவை இவ்வாறிருந்ததெனப் பிறருக்குக் கூறப்படுதலானும் அவை புறமெனவே படும்*[3].

மேற்கண்ட நச்சினார்க்கினியரின் உரைவரிகளில் அகத்தைக் குறிப்பிடுகையில் ஆண், பெண் என்ற இரு பாலினத்தாரின் புணர்ச்சிக் காலத்தில் தோன்றுகின்ற பேரின்பத்தை அகமென்றும் அந்நிகழ்வினை இருவரும் தங்கள் உள்ளத்தில் எண்ணி இன்புறுகின்ற நிகழ்வினையே அகம் என்று குறிப்பிடுகின்றார். தமிழின் முதல் உரை நூலாகக் கருதப்படும் இறையனார் அகப்பொருள் உரையில் அகத்தைக் குறித்த செய்தி பின்வருமாறு குறிப்பிடப்படுகின்றது.

*அகம் என்பது உள்ளத்தின்கண் நிகழ்வது; வெளிக்கு தோன்றாது, அது பல்வகையை ஆயினும் உணர்வுவயின் அறிவதன்றி இவ்வாறென வெளிக்கு*

*எடுத்துரைத்தல் இயலாதது, அது மனத்தாலறியும் மாண்புடையது. அதுவே, காதலுணர்வு, பருவம் வாய்ந்த ஆடவர், பெண்டிர் அகத்தே பூத்து மலரும் பொற்புடையது, இதனை அகம் என்றார் ஆன்றோர்[4].*

மேற்கண்ட உரையின்வழி அகம் என்பது காதல் உணர்வினைக் குறிப்பதாகத் தெளிவுபடுத்துகின்றது. மேலும் பருவம் எய்திய ஆண், பெண் இருவரும் தன் மனத்தகத்தில் ஏற்படும் காதல் உணர்வினை அவ்வுணர்வு உணர்ந்தவர்களாலேயே உய்த்துணரமுடியும் என்றும்; அவ்வுணர்வினை மாற்றாருக்கு எடுத்துரைக்க இயலாது என்று குறிப்பிடுவதனையும் அறியமுடிகின்றது. தலைவன் தலைவி இருவருக்குமிடையே ஏற்படும் காதல் உணர்வினையே அகம் என்று ஆன்றோர் குறிப்பிடுவர்.

இதற்குப் பின்னால் எழுந்த இலக்கண விளக்கம் என்னும் நூலில் அகம் குறித்து கூறப்படுவதற்கு இன்பம் என்று பொருள் தருவதைப் பின்வரும் மேற்கோள் குறிப்பிடுகின்றது.

*அகமெனப் படுவது வகையொடு மூன்றனுள்*
*இன்பமென்னும் மியல் பிற்றாகி*
*அகத்து நிக ழொக்க மாதல் வேண்டும்* [5]

அகம் எனப்படுவது இன்பத்தை முதன்மையானதாகக் கொண்டுள்ளதனை மேற்கண்ட இலக்கண விளக்கச் செய்திவழி அறியமுடிகின்றது. காதல் உணர்வுடையவர் அவர்தாம் மனதில் எழுகின்ற இன்ப உணர்ச்சியையும் அது

தொடர்பான ஒழுக்கத்தையும் குறிப்பதே அகம் என்று குறிப்பிடுவதனையும் உணர முடிகின்றது.

**தொல்காப்பியர் கூறும் திணைப்பாகுபாடு**

தொல்காப்பியர் அகத்திணையியலைக் கூறும்போது, ஆணும் பெண்ணும் அன்போடு ஒன்றுபட்டுக் கூடிவாழும் காதல் வாழ்வே அகவாழ்வாகும். அகத்திணை ஏழு வகைப்படும் என்கிறார்.

*கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்*
*முற்படக் கிளந்த எழுதிணை என்ப* [6]

இவற்றில் கைக்கிளை என்பது ஒருதலைக் காதல். ஆண், பெண் இருவருள் ஒருவரிடம் மட்டும் காதல் உணர்வு தோன்றுகிறது. பெருந்திணை என்பதும் பொருந்தாக் காமம். இவ்விரு திணைகளும் தொல்காப்பியர் காலத் தமிழர்களால் அவ்வளவாகப் பாராட்டப்படவில்லை.

சங்ககாலத் தமிழர்கள் இயற்கையின் சூழல்களுக்கு ஏற்பவே தங்கள் வாழும் நிலப்பகுதியை வகுத்துக் கொண்டனர். அவ்வகையில் மலை சார்ந்த பகுதியைக் குறிஞ்சி என்றும், காடு சார்ந்த பகுதியை முல்லை என்றும், வளம்மிக்க வயல் சார்ந்த பகுதியை மருதம் என்றும், ஆரவாரமிக்க கடற்கரை பகுதியை நெய்தல் நிலம் என்றும் பிரித்துக் கொண்டனர். இயற்கை சீற்றத்தால் பருவகால மாற்றத்தால் வளம் இழந்த குறிஞ்சியும் முல்லையும் பாலைநிலம் எனச் சூட்டினர். இத்தகைய ஐந்திணைகளுக்கும் தக்க இடங்களும் அதற்கான காலங்களும் முதற்பொருள் என்று குறித்துக் கொண்டனர்.

தொல்காப்பியர் அவற்றிற்குரிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றை விளக்கியுரைக்கின்றார்.

*முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே*
*நுவலும் காலை முறை சிறந்தனவே*
*பாடலுள் பயின்றவை நாடும் காலை*[7]

**முதற்பொருள்**

முதற்பொருள் என்பது உலகம் தோன்றிய காலம் முதல் இருக்கும் நிலமும் பொழுதும் ஆகும்.

*முதல் எனப்படுவது நிலம்பொழுது இரண்டின்*
*இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே*[8]

என்று தொல்காப்பிய நூற்பா கூறும். நிலத்தைப் பற்றிக் கூறும்போது நிலத்தோடு தொடர்புடைய தெய்வங்களையும் இணைத்துக் கூறுகின்றார்.

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே*[9]

என்றுரைக்கின்றார் தொல்காப்பியர்.

பாலைத்திணை என்பது பாலைவனப்பகுதியாகும். இதற்கான தெய்வத்தைத் தொல்காப்பியர் கூறவில்லை.

*அவற்றுள்,*
*நடுவண் ஐந்திணை நடுவணது ஒழிய*
*படுதிரை வையம் பாத்திய பண்பே*[10]

தமிழ்நாட்டில் பாலைநிலம் இல்லாதது ஒரு காரணமாக இருக்கலாம். பாலை நிலம் எவ்வாறு உருவாகிறது என்பதைக் காலத்தால் சற்று பிற்பட்ட சிலப்பதிகாரம்தான் சொல்கிறது. முல்லை, குறிஞ்சி ஆகிய நிலங்கள் நீண்ட காலம் மழைபொழியாமல் காய்ந்துபோய் இருப்பின் அது பாலைநிலமாக மாறும் என்பதை,

*முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து*
*நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்*
*பாலை என்பதோர் படிவம் கொள்ளும்*[11]

என்று கூறுகிறது. இப்பாலைநிலத்திற்குக் கடவுள் கொற்றவை எனத் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய இளம்பூரணர் கூறுகிறார்.

**கருப்பொருள்**

ஒவ்வொரு நிலப்பகுதியின் சூழ்நிலை காரணியைத் தீர்மானிக்கும் பொருட்கள் கருப்பொருட்கள் என்று குறிப்பிட்டனர்.

*தெய்வம் உணாவே மாமரம் புள் பறை*
*செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ*
*அவ்வகைப் பிறவும் கரு என மொழிப*[12]

**உரிப்பொருள்**

திணை என்றால் ஒழுக்கம் என்று பொருள்படும். அகமாவது ஓர் ஆணும், ஒரு பெண்ணும் தமக்குள்ளே கண்டு, காதல்கொண்டு ஒன்றுபடுதல்; சில காரணங்களால்

பிரிதல்; பிரிந்து தனித்திருத்தல்; அத்தனிமைக்கு இரங்குதல்; சில நேரங்களில் பிணக்கு கொள்ளுதல் என ஐந்து வகை அன்பு உரிப்பொருளைக் கொண்டுள்ளது.

*புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்*
*ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை*
*தேரும் காலை திணைக்கு உரிப்பொருளே*[13]

இவற்றைக் கூடல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பர். இவை குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் எனவும் குறிப்பிடப்படுகின்றன.

**குறிஞ்சித்திணை**

அன்புடைய இருவர் நல்வினையால் எதிர்ப்பட்டு, காதல் கொள்வது. இது நல்வினைப் பயனால் தன்னியல்பில் நிகழும் புணர்ச்சியாதலின் இயற்கைப் புணர்ச்சி எனவும், தெய்வப் புணர்ச்சி எனவும் படும். முன்னுறு புணர்ச்சி எனவும் இது வழங்கப்படும். குறிஞ்சித்திணையில் பல புலவர்கள் பல பாடல்களைப் பாடியுள்ளனர். ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை ஆகிய எட்டுத்தொகை நூல்களில் பல பாடல்கள் குறிஞ்சித்திணையில் பாடப் பெற்றுள்ளன. குறிஞ்சிப்பாட்டு என்ற பத்துப்பாட்டு நூல் குறிஞ்சித்திணையை மிக விரிவாக விளக்கிச் சிறப்பு சேர்க்கின்றது.

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலம் என்று அழைக்கப்படுகின்றது. மேலும் இவ்விடத்திற்கு இப்பெயர் மலையில் வாழும் ஒரு செடியின் பூவினால் வந்தது எனலாம். மலையில் பல செடிகள் இருப்பினும் ஒரு சிறந்த செடியின் பூவான குறிஞ்சிமலரின் பெயராலே இப்பெயர் வழங்கப்பட்டது. இது குறித்து பி.எல். சாமி அவர்கள் கூறும் கூற்று நோக்கத்தக்கன.

*கடல் மட்டத்திற்கு மேல் 6000 அடிகளுக்கு மேற்பட்டுள்ள இடத்தில் இயற்கையில் காணக்குடிய செடி குறிஞ்சிச் செடியாகும். பிற செடிகளுக்கு அத்தகைய வரையறை இச்செடிகளுக்கு இருப்பதுபோல் கிடையாது. 6000 அடிக்கு மேற்பட்ட நிலம் மலையும் மலை சார்ந்த இடத்தையும் இச்செடியின் பெயரால் அழைத்தனர். இதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அது இச்செடியின் பூவின் தன்மையாகும். இச்செடியின் பூ 9 ஆண்டுகளுக்கு ஒருமுறை தோன்றி பன்னிரண்டு ஆண்டுகள் வரை தொடர்ந்து காணப்படுகின்றன இயற்கையில் இத்தகைய வியப்பிற்குரிய பூவேறன்னையில் மலையினும் மலைசார்ந்த இடத்திலும் காணப்படும். இந்தப் பூவின் பெயராலேயே இந்த இடத்தைக் குறிஞ்சியென அழைத்தனர்*[14].

முதற்பொருள்

முதற்பொருள் எனச் சொல்லப்படுவது நிலமும், பொழுதும். அக நிகழ்வுகள், பேச்சுகள் நிகழும் இடங்களையும், காலத்தையும் குறிப்பது.

- **முதற்பொருள் –** நிலம்
- **குறிஞ்சித்திணைக்கு உரிய நிலம் –** மலையும் மலை சார்ந்த நிலம்
- **பெரும்பொழுது –** கூதிர்காலம் (குளிர்காலம், முன்பனிக்காலம்) - ஐப்பசி, கார்த்திகை மாதங்களைக் குறிக்கும் என்பர்.
- **சிறுபொழுது –** யாமம். இரவு பத்து மணி முதல் அதிகாலை இரண்டு மணி வரை உள்ள பொழுதாகும்.

**கருப்பொருள்கள்**

**குறிஞ்சித்திணைக்குரிய கருப்பொருள்கள்**

- **தெய்வம் -** முருகன்
- **மக்கள் –** சிலம்பன், வெற்பன், குறவன், குறத்தி
- **பறவை –** மயில், கிளி
- **விலங்கு –** புலி, கரடி, பன்றி, யானை
- **ஊர் –** சிறுகுடி
- **நீர் –** சுனை, அருவி
- **பூ –** குறிஞ்சி, காந்தள், வேங்கை
- **மரம் –** சந்தனம், அகில், தேக்கு, அசோகம்
- **உணவு –** தினை, மலைநெல், கிழங்கு
- **பறை –** வெறியாட்டுப்பறை, தொண்டகப்பறை
- **பண் –** குறிஞ்சிப்பண்
- **யாழ் –** குறிஞ்சியாழ்
- **தொழில் –** தேனெடுத்தல், தினைப்புனம் காத்தல், கிழங்கெடுத்தல்

**உரிப்பொருள்**

குறிஞ்சித்திணைக்குரிய உரிப்பொருள் - புணர்தலும், புணர்தல் தொடர்பான ஒழுக்கமும். புணர்தல் என்பது கூடுதல், சேருதல் என்று பொருள்படும். அதாவது,

தலைவனும் தலைவியும் பிறர் அறியாமல் கூடி மகிழ்தல். புணர்தல் என்பது கூடல் என்ற சொல்லாலும் குறிக்கப்படும்.

அறத்தொடு நிற்றல், வரைவு கடாதல், இற்செறிப்பு, இரவுக்குறி, குறிஞ்சியைப் போற்றல், குறி கேட்டல், தினைப்புனம் காத்தல் முதலியன குறிஞ்சித் திணைக்குச் சிறப்பு சேர்க்கும் நிகழ்வுகள்.

**முல்லைத்திணை**

காதலன் பொருளீட்டுவதற்கோ, போர்க்களத்திற்கோ, கல்வி கற்பதற்கோ, தூதுவனாகவோ சென்ற நேரத்தில் பிரிந்திருக்கும் சூழலில் காதலி காத்திருப்பது முல்லைத்திணை.

முதற்பொருள்

- **முல்லைத்திணையின் நிலம் –** காடும் காடு சார்ந்த இடமும்
- **பெரும்பொழுது –** கார்காலம் (மழைக்காலம்)
- **சிறுபொழுது –** மாலை

**முல்லைத்திணைக்குரிய கருப்பொருள்**

- **தெய்வம் –** திருமால்
- **மக்களுள் உயர்ந்தோர் –** குறும்பொறை நாடன், கிழத்தி

  **உயர்ந்தோர் அல்லாதோர் –** ஆயர் – ஆய்ச்சியர், இடையர் – இடைச்சியர்
- **பறவை –** கானக்கோழி

- **விலங்கு –** முயல், மான்
- **ஊர் –** பாடி, சேரி
- **நீர் –** காட்டாறு
- **பூ –** முல்லை, தோன்றி
- **மரம் –** கொன்றை, குருந்து, காயா
- **உணவு –** வரகு, சாமை
- **பறை –** ஏறுகோட்பறை
- **யாழ் –** முல்லையாழ்
- **பண் –** சாதாரிப்பண்
- **தொழில் –** சாமை, வரகு விதைத்தல், ஆநிரை மேய்த்தல்

**உரிப்பொருள்**

முல்லைத்திணைக்குரிய உரிப்பொருள் - இருத்தலும், இருத்தல் நிமித்தமும். போர் அல்லது பொருள் ஈட்டும் வினை முடிக்கச் சென்ற தலைவன், திரும்பி வரும் வரை தலைவி பிரிவைத் தாங்கிக்கொண்டு இருப்பாள். இதனையே இருத்தல் அல்லது ஆற்றியிருத்தல் என்பர். முல்லைத்திணையில் அமைந்த முல்லைப்பாட்டைப் பாடிய புலவர் காவிரிப்பூம்பட்டினத்து பொன்வணிகனார் மகனார் நப்பூதனார் ஆவார். கலித்தொகையிலுள்ள முல்லைக்கலி பாடல்களைப் பாடியவர் சோழன் நல்லுருத்திரன்.

ஐங்குறுநூற்றில் முல்லைத்திணை பற்றிய நூறு பாடல்களைப் பாடியவர் பேயனார் என்னும் புலவர். ஏனைய அகத்திணை நூல்களிலுள்ள முல்லைத்திணை பாடல்களைப் பல்வேறு புலவர்கள் பாடியுள்ளனர்.

**மருதத்திணை**

தலைவனுக்கும், தலைவிக்கும் இடையே பல்வேறு காரணங்களால் பிணக்குகள் வரலாம். இதனை ஊடல் என்று கூறுவர். இந்த ஊடலைக் குறிக்கும் திணை மருதத் திணை எனப்படும்.

**முதற்பொருள்**

- **மருதத்திணைக்குரிய நிலம் –** வயலும் வயல் சார்ந்த பகுதியும்
- **பெரும்பொழுது –** ஆறு காலங்களுமே
- **சிறுபொழுது -** வைகறை

**கருப்பொருள்**

- **தெய்வம் –** இந்திரன்
- **மக்கள் –** ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி,உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர்
- **பறவை –** நாரை, நீர்க்கோழி, அன்னம், குருகு
- **விலங்கு –** எருமை, நீர்நாய்
- **ஊர் –** பேரூர், மூதூர்
- **நீர் –** ஆறு, மனைக்கிணறு, பொய்கை

- **பூ –** தாமரை, குவளை, கழுநீர்ப்பூ
- **மரம் –** மருதம், காஞ்சி, வஞ்சி
- **உணவு -** செந்நெல், வெண்ணெல்
- **பறை –** மணமுழா, நெல்லரிகிணை
- **பண் -** மருதப்பண்
- **யாழ் –** மருதயாழ்
- **தொழில் -** நெல்லரிதல், கடாவிடுதல், குளத்திலும் ஆற்றிலும் ,புனலாடல்

**உரிப்பொருள்**

ஊடலும், ஊடல் தொடர்பான நிகழ்வுகளும் மருதத்திணைக்குரிய உரிப்பொருள். கணவன் மனைவிக்குமிடையே ஏற்படும் சிறு கோபத்தைத்தான் ஊடல் என்பர். ஊடல் என்பதைப் புலவி என்றும் கூறுவர். மருதத்தலைவன் பொருட்பெண்டிர் என்று அழைக்கப்படும் பரத்தையரை நாடிச் செல்வான். பின் தன் வீட்டிற்கு அவன் வரும்போது தலைவி அவன்மீது ஊடல் கொள்வாள். இத்தகு ஊடல், தொடர்பான நிகழ்ச்சிகள் அனைத்தும் மருதத்திணைப் பாடல்களில் இடம்பெறும்.

***ஐவகை நிலங்களிலும் மருதமே உயர்வாகக் கருதப்படுகிறது. உலகத்தில் புகழ்பெற்ற பழைய நாகரீகங்கள் அனைத்தும் ஆற்றுப்பாய்ச்சல் நிறைந்த மருதநிலத்தில்தான் தோன்றின என்பது வரலாறு கூறும் உண்மையாகும்***[15] என மா. இராசமாணிக்கனார் கூறுகிறார். பரத்தை ஒழுக்கம், அது தொடர்பான வாயில் மறுத்தல், புதுப்புனல் ஆடல், ஊடல் தணிவித்தல் போன்றவையும் பிள்ளைத்தாலி

அணிதல் போன்ற சமூக நிகழ்ச்சிகளும் மருதத்திணை பாடல்களில் காணக் கிடைக்கின்றன.

ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை ஆகிய அகநூல்களில் பல பாடல்கள் மருதத்திணையில் பாடப்பெற்றுள்ளன. மருதனிள நாகனார், ஓரம்போகியார் ஆகிய இருபுலவர்களும் மருதம் பாடுவதில் வல்லவர்கள். ஐங்குறுநூற்றில் மருதப்பாடல்களை ஓரம்போகியார் பாடியுள்ளார். கலித்தொகையில் மருதக்கலி பாடல்களை மருதனிள நாகனார் பாடியுள்ளார். ஐங்குறுநூற்றில் நூறு பாடல்கள், கலித்தொகையில் முப்பத்தைந்து பாடல்கள், அகநானூற்றில் நாற்பது பாடல்கள் மருதத்திணைப் பாடல்களாகும்

**நெய்தல்திணை**

கடலில் மீன் பிடிக்கச் சென்றோலோ, பிற காரணங்களாலோ தலைவன் பிரிந்து சென்று, திரும்பி வர இயலாத சூழலில் தலைவி அவனுக்காகக் கவலைப்பட்டு இரங்கி நிற்றலை நெய்தல் திணை என்பர்.

**முதற்பொருள்**

- **நெய்தல் திணைக்குரிய நிலம் –** கடலும், கடல் சார்ந்த பகுதி
- **பெரும்பொழுது –** ஆறு பெரும்பொழுதுகளும் நெய்தல் திணைக்கு உரியன. மருதத்தைப் போலவே நெய்தலுக்கும் ஆண்டு முழுவதும் உரிய காலமாகும்.

1) **இளவேனிற்காலம்** (சித்திரை, வைகாசி)

2) **முதுவேனிற்காலம்** (ஆனி, ஆடி)

3) **கார்காலம்** (ஆவணி, புரட்டாசி)

4) **குளிர்காலம்** (ஐப்பசி, கார்த்திகை)

5) **முன்பனிக்காலம்** (மார்கழி, தை)

6) **பின்பனிக்காலம்** (மாசி, பங்குனி)

இவை ஆறும் நெய்தலின் பெரும்பொழுது ஆகும்.

- **சிறுபொழுது -** எற்பாடு

(எற்பாடு என்றால் சூரியன் மறையும் நேரம் அல்லது ஒளி மறையும் நேரம்)

**கருப்பொருள்**

- **தெய்வம் –** வருணன்
- **மக்கள் –** துறைவன், சேர்ப்பன், பரத்தி, பரதவர், பரத்தியர்,நுளைச்சி, நுளையர், நுளைச்சியர், அளவர்
- **பறவை –** நீர்க்காக்கை, அன்னம்
- **விலங்கு –** சுறா, முதலை
- **ஊர் –** பட்டினம், பாக்கம்
- **நீர் –** மணற்கேணி
- **பூ –** நெய்தல், தாழை
- **மரம் –** புன்னை, தாழை
- **உணவு –** மீனும், உப்பும் விற்றலால் வரும் பொருள்.

- **பறை –** மீன்கோட்பறை
- **பண் –** செவ்வழிப்பண்
- **யாழ் –** விளரியாழ்
- **தொழில் -** உப்பு விற்றல், மீன் பிடித்தல்

**உரிப்பொருள்**

நெய்தல்திணைக்குரிய உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் தொடர்பான நிகழ்வுகளும்.

இரங்கல் என்றால் வருந்துதல் என்று பொருள். கடலுள் மீன்பிடிக்கச் சென்ற தலைவனை நினைத்து, காற்றும் மழையும் தொடர்வதால் அவனுக்கு ஏற்படும் துன்பத்தை நினைத்து, கரையிலுள்ள தலைவி வருந்திக் கொண்டிருப்பாள். தலைவன் தலைவியை மணந்துகொள்ள காலம் நீட்டித்தல், தலைவியைக் காண வராதிருத்தல் போன்றவையும் தலைவியின் இரங்கலுக்குக் காரணங்கள் ஆகும். இத்தகைய வருத்தம் தொடர்பான செய்திகளே நெய்தல் திணையின் உரிப்பொருள் ஆகும்.

வரைவு கடாதல் (மணம் செய்துகொள்ளுமாறு வேண்டுதல்), வரைவு நீட்டித்தல், பகற்குறி, இரவுக்குறி போன்ற அகவாழ்க்கை நிகழ்வுகள் குறிஞ்சியில் உள்ளதுபோல் நெய்தலிலும் உண்டு. அகநிகழ்வு அல்லாத, நெய்தலுக்கே சிறப்பாக உரிய சில நிகழ்வுகளையும் காணமுடிகின்றது. அவற்றுள் சிற்றில் கட்டி விளையாடல், கூடல் இழைத்தல், மீன் உணக்கல், மீன்கறி ஆக்கல், இயற்கையையும் உறவாக

நினைத்தல், மடலேறுதல் போன்றவை குறிக்கத்தக்கன. இவை அகவாழ்க்கை நிகழ்வுகளோடு இணைத்துச் சொல்லப்படுகின்றன.

**பாலைத்திணை**

முல்லை, குறிஞ்சி ஆகிய நிலங்கள் மழையின்றி வறண்டு தம் வளமான இயல்பு குறையும்போது அவை பாலைநிலம் எனப்படும். பொருள் ஈட்டத் தலைவன் பிரியக் கருதுதல், அதனைத் தோழி வாயிலாகத் தெரிவித்தல், தலைவி வருந்திப் பிரிவுக்கு உடன்படாமை, தோழி தலைவனைப் பிரியாதிருக்கச் செய்தல், பின் தலைவன் பிரிதல், பாலைநிலக் கொடுமைகளை நினைத்துத் தலைவி அஞ்சுதல், தோழி தேற்றுதல், பிரிந்திருக்கும் இடத்திலிருந்துகொண்டு தலைவன் வருந்துதல் போன்ற நிகழ்வுகளையும் கூற்றுகளையும் பாலைத்திணை பாடல்களில் காணலாம். தலைவி தலைவனோடு பிறர் அறியாமல் உடன்போக்கில் சென்றுவிட, தலைவியின் பிரிவால் தாய் வருந்துவதும் பாலைத்திணையில் கூறப்படும்.

**முதற்பொருள்**

**பாலைக்குரிய நிலம் -** சுரமும் சுரம் சார்ந்தஇடம்

சுரம் என்பது வறண்ட, பயனற்ற வெயில் கொளுத்தும் காட்டுப் பகுதியைக் குறிக்கும். பாலை எனத் தனி ஒரு நிலப்பகுப்பு இல்லை. வறட்சியின் காரணமாகவே பாலைநிலம் தோன்றுகிறது. பாலைநிலம் என்பது முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்த நிலமாகும்.

*முதுவேனில் காலத்தில் தமக்குரிய நீர்வளத்தில் குறைந்து மக்கள் நிலைத்து வாழ வசதியற்ற மிக்கவெப்பத்தையுடைய அக்கால நிலப்பகுதி பாலை எனப்பெயர் பெறும்*[16] என்று பாலைநிலத்திற்கான காரணத்தை மா. இராசமாணிக்கனார் கூறியுள்ளார்.

- **பெரும்பொழுது –** இளவேனிற்காலமும், முதுவேனிற்காலமும்
- **சிறுபொழுது-** நண்பகல்

**கருப்பொருள்**

- **தெய்வம் –** கொற்றவை (காளி)
- **மக்கள் –** விடலை, காளை, எயிற்றி, எயினர்,எயிற்றியர், மறவர், மறத்தியர்
- **பறவை –** கழுகு, பருந்து
- **விலங்கு –** செந்நாய், இளைத்த யானை, புலி
- **ஊர் –** குறும்பு
- **நீர் –** வற்றிய கிணறு
- **பூ –** பாதிரி, மரா, குரா
- **மரம் -** இருப்பை, ஓமை, பாலை
- **உணவு –** வழிப்பறி செய்த பொருள்கள், வளமானபகுதிகளில் சென்று கொள்ளை அடித்த பொருள்கள்
- **பறை –** போர்ப்பறை, ஊரெறி பறை
- **யாழ் –** பாலையாழ்
- **பண் –** பாலை (பஞ்சுரம்)
- **தொழில் -** வழிப்பறி செய்தல்

**உரிப்பொருள்**

பாலைத்திணைக்குரிய உரிப்பொருள் பிரிதலும் பிரிதல் தொடர்பான நிகழ்வுகள். பாலைத்திணைக்குரிய சில அகவாழ்க்கை நிகழ்வுகள் குறிக்கப்படுவன.

- உடன்போக்கு, நற்றாய் வருந்துதல், செவிலி மகளைத் தேடிச் செல்லல், செலவு அழுங்குவித்தல், தலைவியை ஆற்றுவித்தல்

பாலைத்திணைக்குரிய புறவாழ்க்கை நிகழ்வுகள் குறிக்கப்படுவன.

- கொள்ளையடித்தல், அறம் பாராட்டல், பாலைத்திணைக்குரிய இயல்புகள் ஆகும்.

**களவு வாழ்க்கை**

காதல் வாழ்க்கையைக் கூறும் அகத்திணையின் இரு பகுதிகளாகக் களவும், கற்பும் அமையும். ஒருவனும் ஒருத்தியும் தமக்குள்ளே கண்டு காதல்கொள்ளும் ஒழுக்கம் களவு என்று வழங்கப்படும். அகப்பொருள் பற்றிய இலக்கியங்களில் களவுதான் மிகுதியாகப் பேசப்படும்.

களவாவது, பிறர் நன்கு அறியாதபடி மறைவாக நிகழும் ஒழுக்கம். இயற்கையாகவே ஒத்த இளமை முதலிய ஒத்த தன்மைகளையுடைய ஒருவனும், ஒருத்தியும் ஓரிடத்தில் எதிர்ப்பட்டு அன்புகொண்டு காதலில் திளைப்பர். அக்காதலர் ஊரறிய மணவினை நிகழும் களவு நெறியில் இருப்பர். களவு நெறியைக் குற்றமாகப் பெற்றோர் எண்ணினாலும் சமூகம் குற்றமாகக் கருதவில்லை.

தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், புறத்திணை யியலையடுத்து, களவியல் என்ற இயல் வருகின்றது. இக்களவியல் அகத்திணைகளில் ஒருதலைக் காதலாகிய கைக்கிளை, பொருந்தாக் காதலாகிய பெருந்திணை ஆகியவற்றை நீக்கி, அன்பின் ஐந்திணைகளை மட்டும் கூறுகின்றது.

**கற்பு வாழ்க்கை**

களவு இன்பம் நீண்ட நாட்கள் தொடர முடியாது. களவிற்குப் பல்வேறு இடையூறுகள் உண்டு. அவை அம்பல், அலர் என இருவகைப்படும். அம்பல் என்பது பிறர் அறியாமல் இருவர் தமக்குள் தலைவன், தலைவியின் காதல் செய்தியைப் பரிமாறிக் கொள்வதாகும். அலர் என்பது பலரும் அறிய, காதல் செய்தியைப் பரிமாறிக்கொள்வது. இது விரிந்த மலரின் நறுமணத்தோடு ஒப்புமைப்படுத்தப்படும். ஊரில் அலர் தூற்றத் தொடங்கி விடுவார்கள். அலர் என்றால் ஊரில் உள்ள மக்கள் இந்தத் தலைவன் தலைவி காதல் பற்றி ஆங்காங்கே பேசத் தலைப்படுதல் ஆகும்.

இத்தகு சூழல் வரும்போது காதல் வெளிப்பட்டு, பெற்றோரின் செவிகளுக்குச் செய்தி எட்டிவிடுவதும் உண்டு. பெற்றோரில் சிலர் இக்காதலை ஏற்றுக்கொண்டு திருமண ஏற்பாட்டைச் செய்வர்.

களவில் ஈடுபட்ட இளைஞர் சிலர், அக்களவு வெளிப்பட்ட பின் நான் இவளை அறிந்ததில்லை என்று பேசியும், காதல் மணம் கொண்டவளைக் கைவிட்டும் வந்தனர். இப்பழக்கம் பலரிடம் பரவாதிருப்பதற்காகக் களவு வெளிப்பட்ட பின் பலர் அறியத் திருமணம் நடத்தும் வழக்கம் வந்ததாகத் தொல்காப்பியர் கூறுவார்.

*பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்*

*ஐயர் யாத்தனர் கரணம் என்ப*[17]

என்று விளக்கியுரைப்பார்.

திருமணம் முடிந்த பின்னர் முதன் முதலில் தலைவன், தலைவியைக் கண்ணுற்ற நேரம், தலைவன்பால் உண்டான பெருமையும் உரனும், தலைவியிடம் உண்டான அச்சமும் நாணும், மடனும் நீங்கி இருவரின் நெஞ்சமும் அன்பு வயப்பட்டுக் கூடுவர். பெற்றோரே காதலை அறிந்து, திருமணத்தை முடிக்காமல் பெண்ணையோ, ஆணையோ காதல் நிலையில் இருந்து பிரிக்க நினைத்தால், இருவரும் சேர்ந்து யாருமறியாமல் ஊரைவிட்டு வெளியூர் சென்று விடுதலும் உண்டு. இதற்கு உடன்போக்கு என்று பெயர்.

**நீர்த் துறை குறியிடமாதல் (இருவகைக் குறிகள்)**

தலைமக்களின் காதல் வாழ்க்கையில் இருவரும் சந்தித்துக்கொள்ளும் இடத்தினைக் குறியிடம் என்று கூறுவர். தலைவியைத் தோழி குறிப்பிட்ட ஓரிடத்தில் இருக்கச்செய்து, பின்னர் தலைவனிடம் சென்று தலைவி தலைவனுக்காகக் காத்திருக்கும் இடத்தைக் குறிப்பிடுவாள். தலைவன் அவ்விடம் சென்று தலைவியுடன் கூடி மகிழ்வான். இக்கூட்டம் பகலில் நிகழ்ந்தால் **பகற்குறி** என்றும், இரவில் நிகழ்ந்தால் **இரவுக்குறி** என்றும் அழைக்கப்பெறும்.

**பகல்குறி**

பகற்குறி மக்கள் நடமாட்டம் அதிகமில்லாத பகுதிகளில் நிகழ்ந்துள்ளது. திணைப்புனம், நீர்த்துறை ஆகிய இடங்கள் பகற்குறிக்குரிய இடங்களாக அமைந்து உள்ளன. தலைவியின் கூந்தலின் அழுக்கினைப் போக்கிக் தேய்த்துக் குளிப்பதற்காக **எருமண்** என்னும் மண் கொண்டு வருவதற்காக நாங்கள் காட்டாற்று பக்கம் போகிறோம். ஊருக்குப் பக்கத்திலுள்ள, நேற்று பகலில் சந்தித்த பொய்கைக்கு அருகிலுள்ள இடத்திற்கு தலைவியைச் சந்திக்க வருமாறு தலைவனை அழைக்கின்றாள் தோழி.

*ஊர்க்கும் அணித்தே பொய்கை பொய்கைக்குச்*
*சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே*
*இரைதேர் வெண்குரு கல்லதியாவதும்*
*துன்னல் போகின்றாற் பொழிலேயாமெம்*
*கூழைக் கெருமண் கொணர்கஞ்சேறும்*
*ஆண்டும் வருகுவள் பெரும்பேதையே*[18]

அங்கு இரை தேடுவதற்காக வரும் குருகு என்ற பறவை இனத்தை தவிர வேறு யாரும் வர மாட்டார்கள் என்று கூறுவதன் வழி பகல் நேரத்தில் கூடுவதற்கு பொய்கை என்ற நீர்நிலை குறியீடாக இருந்துள்ளதை உணரமுடிகின்றது.

தலைவன் தலைவியைச் சந்திக்கப் பகல் நேரத்தில் வருகிறான். அவ்வாறு வரும் தலைவனைத் தோழி இவ்விடத்தில் இச்சந்திப்பு வேண்டாம். வேறு இடத்தில் சென்று சந்தியுங்கள் என்று குறிப்பினால் தோழி உணர்த்துகின்றாள்.

*கோழிலை வாழைக் கோள் முதிர் பெருங்குலை*
*ஊழுறு தீம் கனி, உண்ணுநர்த் தடுத்த*

*சாரற் பலவின் சுளையொடு, ஊழ்*

*பாறை நெடுஞ் சுனை, விளைந்த தேறல்*

*அறியாது உண்ட கடுவன் அயலது*

*கறி வளர் சாந்தம் ஏறல்செல்லாது,*

*நறு வீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்*

*குறியா இன்பம், எளிதின், நின் மலைப்*

*பல்வேறு விலங்கும், எய்தும் நாட!* [19]

ஆழமான சுனைநீரில் ஊறும். 'தேறல்' என்னும் கள்ளாக விளையும். அங்கு மேயும் கடுவன் என்னும் ஆண்குரங்கு அறியாமல் அதனை உண்ணும். மயக்கம் ஏறும். மிளகுக்கொடி படர்ந்திருக்கும் சந்தன மரத்தில் ஏற முடியாமல் தள்ளாடும். அதனால் அப்பகுதியில் நீ வரவேண்டாம் என்று குறிப்பினால் உணர்த்துகின்றாள்.

தலைவன் பகலில் வந்து சந்தித்துச் செல்வது எனக்கு மகிழ்ச்சியளிப்பதாக இருப்பினும் ஊர் மக்கள் அம்பல் பேசுகின்றனர். நான் யாது செய்வேன்? என்று தலைவனிடம் தலைவி புலம்புவதாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*பெருந்திரை முழக்கமொடு இயக்கு அவிந்திருந்த*
*கொண்டல் இரவின் இருங் கடல் மடுத்த*
*கொழு மீன் கொள்பவர் இருள் நீங்கு ஒண் சுடர்*
*ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை,*
*ஆடு இயல் யானை அணி முகத்து அசைத்த*
*ஓடை ஒண் சுடர் ஒப்பத் தோன்றும்*[20]

இப்பாடல் அடியில் தலைவி தன் அச்சத்தை உணர்த்துகின்றாள். அதாவது இரவு வேளையில் ஓர் வேந்தனின் பாசறையில் இருக்கும் யானை அசைந்தாடும்போது அதன் நெற்றியில் வெற்றியானது எவ்வாறு காட்சியளிக்கும் எனின், ஓடை மின்னுவது போல் காட்சியளிக்கும். அப்படிப்பட்ட அச்சத்தைக் கொண்டவளாக ஊர் மக்கள்

பேசும் அம்பளுக்கு ஆளாகின்றேன் என்று தலைவன் பகலில் வந்து சந்தித்துச் செல்வதை கூறுகின்றாள்.

**இரவுக்குறி**

இரவுக்குறி இருநிலைகளில் அமையும். தலைவியின் இல்லத்திலோ அல்லது இல்லத்திற்கு அருகாமையிலோ அமையும். கொடுமையான வழியில் தனியாக வருகின்றோம் என்று அச்சம் கொள்ளாது இரவு நேரத்தில் தலைவன் வெற்றிவேல் ஏந்திக்கொண்டு வருகிறான் என்று தலைவி கூறுகின்றாள்.

*மாரி நின்ற ஆர் இருள் நடு நாள்,*
*அருவி அடுக்கத்து, ஒரு வேல் ஏந்தி,*
*மின்னு வசி விளக்கத்து வருமெனின்,*
*என்னோ தோழி! நம் இன் உயிர் நிலையே* [21]

நள்ளிரவில் மிகுதியாகக் குறிஞ்சி நிலத்தில் மழை பொழிகின்றது. அதனால் மிகுந்த ஒளியோடு அருவி மலையகத்தில் விழுகின்றது அத்தகைய இரவுப்பொழுதில் வேலை, கையில் கொண்டு மின்னல் வெளிச்சத்தின் துணைகொண்டு தலைவன் வருகின்றார் என்றாள். தோழியே! என் உயிரின் நிலைமை என்னவாகும் என்று தலைவி தோழியிடம் கூறுகின்றாள்.

மற்றொரு பாடலில் இரவுப்பொழுதில் தலைவன் ஆபத்தான ஆற்று வழிகளைக் கடந்து வருவதனை அறிந்து தலைவியானவள் வருந்திக் கூறும் செய்தியை,

*இருள் கிழிப்பதுபோல் மின்னி, வானம்*
*துளி தலைக்கொண்ட நளி பெயல் நடுநாள்,*
*மின்மினி மொய்த்த முரவு வாய்ப் புற்றம்*

*பொன் எறி பிதிரின் சுடர வாங்கி,*
*குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை*
*இரும்பு செய்கொல் எனத் தோன்றும் ஆங்கண்*[22]

துணியைக் கிழிப்பது போல வானம் இருளைக் கிழித்து மழை பொழிகின்றது. உடல் நடுங்கும்படியான நள்ளிரவுப்பொழுதில் தலைவன் வரும்வழி மிகவும் கொடியது. தலைவன் கடக்கும் வழியானது முதலைகள் கொண்ட ஆறாகும். அவற்றில் அலகினைச் செலுத்துவதற்கு மூங்கில் கொம்பினை ஊன்ற முடியாத அளவிற்கு ஆற்றில் வெள்ளம் பெருகி வருகிறது. அத்தகைய கொடுமையான வழியில் தனியாக வருகின்றோம் என்று அச்சம் கொள்ளாது இரவு நேரத்தில் தலைவன் வெற்றிவேல் ஏந்திக்கொண்டு வருகிறான் என்று தலைவி கூறுகின்றாள்.

யாரும் கடந்து செல்லமுடியாத பாம்புகள் மிகுந்திருக்கும் மலைப்பகுதியில் ஆற்றினைக் கடந்து இரவுப்பொழுதில் தலைவன் தன்னைச் சந்திக்க வந்திருப்பதை எண்ணி அச்சம் கொள்கிறாள் தலைவி.

*பாம்புடை விடர பனி நீர் இட்டுத் துறைத்*
*தேம் கலந்து ஒழுக, யாறு நிறைந்தனவே,*
*வெண் கோட்டு யானை பொருத புண் கூர்ந்து,*
*பைங் கண் வல்லியம் கல் அளைச் செறிய,*
*முருக்கு அரும்பு அன்ன வள் உகிர் வயப் பிணவு*[23]

மேற்கூறப்பட்ட பாடலின் செய்தியானது பாம்புகள் மிகுதியாக இருப்பது அளவுகடந்து பெருக்கெடுத்து ஓடும் ஆற்றில் நீ நடந்து வரும் வழியில் வெண்ணிற கொம்புகளைக்கொண்ட ஆண் யானையோடு போரிட்ட ஆண் புலியானது தன்

குகையில் பதுங்கியிருக்கும். அப்படிப்பட்ட மலைகளைக் கடந்து யாரும் செல்வதில்லை இவர் வந்திருக்கிறார் என்று தலைவி கூறுகின்றாள்.

தலைவியின் இரவுக்குறியைத் தவிர்த்து தலைவன் திருமணத்தை முற்றுவிக்க வேண்டும் என்கின்ற அமைப்பில் தோழியானவள் செயல்படுவதனை புலவர் குழந்தை அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்.

*அறிவு சார்ந்த அக்காலப் பெண்ணுலகிற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறாள் தோழி* [24]*.* தலைவியின் களவினைத் தானாகவே அறிந்து பிறருக்கு அறிவிக்க எண்ணித் தலைவன் தலைவியரது களவு, கற்பாக மலர்ந்து நலம் பயக்குகின்ற வகையில் தலைவியிடம் கூற்று நிகழ்த்துவதால் அவரது அறிவும் அறச்செயலும் நன்கு புலனாகின்றது.

குரங்குக் கூட்டம் மிகுதியாக இருக்கும் மலைப்பகுதியில் மழை பொழியும் நள்ளிரவுப் பொழுதில் தலைவன் தலைவியைச் சந்திக்க வரும் நிலையினை எண்ணித் தலைவி இவ்வாறு வருத்தமுற்றுக் கூறுகிறாள்.

> *கரு விரல் மந்திச் செம் முகப் பெருங்கிளை*
> *பெருவரை அடுக்கத்து அருவி ஆடி,*
> *ஓங்கு கழை ஊசல் தூங்கி, வேங்கை*
> *வெற்பு அணி நறுவீ கற்சுனை உறைப்ப,*
> *கலையொடு திளைக்கும் வரைஅக நாடன்*[25]

செந்நிற மந்திக் குரங்குகள் தன் கூட்டத்தோடு அருவியில் நீராடும். பின்னர் வேங்கை மலர் கொட்டிக்கிடக்கும் கல்வித் துறையிலும் ஆண் குரங்குகள் கூடிக் கிடக்கும். அத்தகைய வழியைக் கடந்து தலைவன் வருகிறான் என்றும்

. தலைவியைக் காண இரவுப்பொழுதில் வரும் தலைவனை இப்பொழுது வரவேண்டாம். பகலில் வந்தால் இவளைப் பெறலாம் என்று தோழியானவள் குறிப்பிடுவதாக இன்னொரு பாடல் கூறுகின்றது.

*வயங்கு வெயில் ஞெமியப் பாஅய், மின்னு வசிபு,*
*மயங்கு துளி பொழிந்த பானாட் கங்குல்,*
*ஆராக் காமம் அடூஉ நின்று அலைப்ப,*
*இறு வரை வீழ்நரின் நடுங்கி, தெறுவர*[26]

தலைவனே! நீ இரவுப்பொழுதில் வருவாய் ஆனால் தலைவியின் நிலையினைக் கூறுகின்றேன். கேட்பாயாக! இன்று தலைவியின் அளவு கடந்த காமம் இரவில் பொழியும் மழையால் அதிகரிக்கின்றது. அதனால் அவள் உடல் நடுங்குகிறது. எனவே நீ இரவுப்பொழுதில் வராது பகலில் வந்து சந்தித்துச் செல் என்று தோழி கூறுகின்றாள். இவ்வாறு தோழி கூறுவதற்கும் காரணம் உண்டு. ஏனெனில் களவு காலத்து தலைவியை ஒழுக்கம் உடையவராகப் பாதுகாக்கின்ற தன்மை தோழிக்கு மிகுந்திருப்பதைப் பாடல்வழி அறியமுடிகின்றது.

நா. சுப்பு ரெட்டியார் அவர்கள் *தலைவன் தலைவியர் இடையே அரும்பும் காதல் மலர்ந்து காய்த்து கனிதலுக்குத் தோழி உறுதுணையாகிறாள்*[27] என்று குறிப்பிடுகின்றார்.

மற்றொரு பாடலில் இரவுப்பொழுதில் தலைவனை வரவேண்டாம் என்று தோழியானவள் வேண்டிக் கேட்டுக்கொள்கின்றாள். மிகுதியான மழைபொழியும் நள்ளிரவுப்பொழுதில் நீ வருவதை எண்ணித் தலைவி மிகுந்த துயரம் கொள்கிறாள் என்று தோழி கூறுவதனை,

*அரவு எறி உருமோடு ஒன்றிக்கால் வீழ்த்து*
*உரவு மழை பொழிந்த பானாட்கங்குல்,*
*தனியை வந்த ஆறு நினைந்து, அல்கலும்,*
*பனியொடு கலுழும் இவள் கண்ணே; அதனால்*[28]

இடியின் தாக்கத்தால் படமெடுத்து ஆடும் பாம்பு இறந்துவிடும். கொடிய மலைப்பாதையில் மிகுதியாக மழைபொழியும் நள்ளிரவில் நீ தனியே வருவதை எண்ணித் தலைவி கண்ணீர் வடிக்கிறாள். ஆகவே நீ இரவில் வராது பகலில் வந்து சந்தித்துச் செல்க என்று தோழி குறிப்பிடுகின்றாள்.

மற்றொரு பாடலில் தலைவியின் இருண்ட கூந்தல் மெத்தையில் உறங்கி இன்பம் துய்க்க வேண்டுமாயின் இரவில் வராது பகலில் வந்து சந்தித்துச் செல்லவேண்டும் என்று தலைவனிடம் தோழி கூறுகிறாள்

*நெடுமலை அடுக்கம் கண் கெட மின்னி,*
*படுமழை பொழிந்த பானாட் கங்குல்,*
*குஞ்சரம் நடுங்கத் தாக்கி, கொடு வரிச்*
*செங்கண் இரும்புலி குழுமும் சாரல்*
*வாரல் வாழியர், ஐய! நேர் இறை*[29]

தலைவனே! மலையகத்தில் அளவுகடந்து மழை பொழியும் நள்ளிரவில் புலிகள் முழங்கும் மலைச்சாரலில் நீ வருகின்றாய். ஆர்ப்பரித்து முழங்குகின்ற பல அருவிகளை உடைய மலையின் பக்கத்தில் இருண்ட காட்டில், கண்ணைப் பறிக்கும்படி மின்னி, மலையடுக்கத்தில் பெருமழை பொழியும் நள்ளிரவில் வருகிறாய். புலி யானையைத் தாக்கிக்கொண்டு குழுமி முழங்கும் மலைச்சாரலில் வருகிறாய். இந்த இரவு நேரத்தில்

நீ வரவேண்டாம். நாளை பகலில் வந்தாலும் இவளைப் பெறலாம் – என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள்.

*படுமழை பொழிந்த பாறை மருங்கில்*

*சிரல்வாய் உற்ற தளவின், பரல் அவல்,*

*கான் கெழு நாடற் படர்ந்தோர்க்குக்*

*கண்ணும் படுமோ? என்றிசின், யாணை*[30]

இரவுக்குறியில் தலைவனின் வருகைக்காகக் காத்திருக்கும் தலைவி, மிக்க மழைபொழிந்த கருப்பரையின் அருகில் பூத்த அரும்புகளையுடைய முல்லையும் பரற்கற்கள் நிரம்பிய பள்ளங்களுடன் விளங்கிய காடு சூழ்ந்த நாடனை எண்ணித் தனக்குக் கண்ணுறக்கமும் வருமோ என்று புலம்புவதனை பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன.

**அகப்பாடலில் தலைவன் பெறும் இடம்**

அகத்திணை மாந்தருள் தலைவனுக்கென தனிச்சிறப்பிடம் உண்டு. அவன் கல்வி, அறிவு, ஒழுக்கங்களில் மேம்பட்டவனாகவும், வழிவரும் உயர்ந்த குடியில் பிறந்தவனாகவும், செல்வ வளம் மிக்கவனாகவும் சுட்டப் பெறுகிறான்.

*பெருமையும் உரனும் ஆடுவோம் மேன*[31]

என்ற நூற்பாவில் தொல்காப்பியம் தலைவனின் பண்பினைச் சுட்டுவதற்கு, *அறிவும், ஆற்றலும், புகழும், கொடையும், ஆராய்தலும், பண்பும், அன்பும், பழி பாவம்*

***அஞ்சுதலும், கடைப்பிடியும், நிறையும் கலங்காது துணிதலும்***[32] என்பனவற்றைத் தலைவனின் இயல்புகளாக நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளார்.

தலைவன் என்ற சொல்லுக்கு பொருளுரைக்கும் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதி பின்வருமாறு குறிப்பிடுகின்றது. ***முதல்வன், அரசன், கணவன், குரு மோட்டோன் சிறந்தோன், கடவுள், அகப்பொருட் கிழவன், கதாநாயகன்***[33] எனப் பல பொருள்களைக் குறிப்பிடுகின்றது.

கழகத் தமிழ் அகராதி ***அண்ணன், அரசன், குரு, புருடன், மூத்தோன், எப்பொருட்கும் இறைவன்***[34] என்று பொருள் உரைக்கின்றது.

**தலைவனின் மலை, நீர்வளத்தைப் புகழ்ந்துரைத்தல்**

தலைவனின் உயர்ந்த பண்பினைக் குறித்துத் தன் தோழியிடம் கூறுமிடத்து, அவன் நாட்டு மலையிலுள்ள நீரோடு தொடர்புபடுத்திக் குறிப்பிடுவதைக் கலித்தொகை பாடலொன்று பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*காணிய வா வாழி, தோழி! வரைத் தாழ்பு*
*வாள் நிறம் கொண்ட அருவித்தே, நம் அருளா*
*நாணிலி நாட்டு மலை*[35]

தலைவனின் மலையிலுள்ள நீர்நிலை ஆகிய அருவி நீர் விழுகின்ற நீரின் தெளிவை உடையவன் நம் தலைவன் என்று பாராட்டுகின்றாள். மேலும்

*வலிமிகு வெகுளியான் வாள் உற்ற மன்னரை*
*நயன் நாடி நட்பு ஆக்கும் வினைவர் போல், மறிதரும்*
*அயம் இழி அருவிய அணி மலை நல்நாட!*[36]

தலைவனின் மலைவளத்தைக் குறிப்பிடுகையில் வலிமைமிக்க மன்னவன் வெகுண்டெழுந்துத் தாக்கும்போது, அவனது வீரத்தின் சினத்தைக் கண்டு, நட்பை நாடி அரவணைத்துக் கொள்ளும் ஆற்றல் மிக்கவன் நம் தலைவன். வளமான ஊற்றுநீர் பாயும் அருவி கொண்ட மலைநாட்டுத் தலைவன் ஆவான் என்று புகழ்ந்துரைப்பதை அறியமுடிகின்றது.

தலைவன்மீது மிகுந்த காதலை உடையவளாகத் திகழும் தலைவி தலைவனுக்கும் தனக்குமான அன்பின் திறத்தைத் தன் தோழியிடம் இவ்வாறு உரைக்கின்றாள்.

*நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*

*நீரினும் ஆரளவின்றே சாரல்*[37]

தலைவனுக்கும் எனக்குமான நட்பு என்பது இந்த பூமியைக் காட்டிலும் பெரியது, வானைக் காட்டிலும் உயர்ந்தது, கடலைக் காட்டிலும் அளவிடற்கரிய ஆழம் மிக்கது என்று தன் காதலைத் தோழியிடம் ஒப்பிட்டுக்காட்டி தங்கள் அன்பின் திறத்தை வெளிப்படுத்துவதைக் காணமுடிகின்றது.

மற்றொரு பாடலில் தலைவன் என்னை விரைவில் திருமணம் செய்து கொள்வான் என்ற நம்பிக்கை எனக்கு உள்ளது. இதை அறியாதவர்கள்தான் பலவாறு பேசுவார்கள் என்று தோழியிடம் குறிப்பிடுகிறாள்.

*பலவும் கூறுக வஃதறியாதோரே*
*அருவி தந்த நாட்குர லெருவை*
*கயனாடி யானை கவளமாந்தும்*
*மலைகெழு நாடன் கேண்மை*
*தலை போகாமை நற்கறிந்த னென்யானே*[38]

தலைவனும் நானும் விதிவசத்தால் சந்தித்துக் காதல் கொண்டோம். எங்கள் காதல் என்றும் அழியாது. குளத்தை நாடிச் செல்லும் யானை, எவ்வித முயற்சியும் இன்றி அருவியால் விளைந்த புதிய கொத்தாக இருக்கும் கொறுக்காந்தட்டையை, ஆழமான நீர்நிலையை ஆராய்கின்ற யானை, கவளமாக உண்ணும். அதுபோல எங்கள் சந்திப்பு நிகழ்வு அமைந்தது. தலைவன் நாட்டு கலங்கிய கூவல் நீரானது நம் வீட்டுத் தோட்டத்தில் தேனோடு கலந்திட்ட பாலைக்காட்டிலும் மிக இனிமையாக இருந்ததாகத் தன் தோழியிடம் கூறுகிறாள்.

*அன்னாய் வாழி வேண்டன்னை நம்படப்பை*

*தேன் மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு*

*உவரை கூவற்கீழ*

*மானுண்டு எஞ்சிய கலிழிநீரே……*[39]

தோழியே! நான் அவருடன் மலைநாட்டுக்குச் செல்லும் வழியில் எனக்கேற்பட்ட தாகத்தினைப் போக்குவதற்காக நீரினை உண்ண விரும்பினேன். ஆனால் அங்கு கூவல் என்னும் குழியில் இருந்த களங்கமற்ற தெளிவற்ற நீரே காணப்பட்டது. அந்நீரினையும் மானானது உண்டு சென்றது. இருப்பினும் தாக மிகுதியால் அந்நீரைப் பருகினேன். அது நம் வீட்டுத் தோட்டத்தில் தேனோடு கலந்திட்ட பாலைக்காட்டிலும் மிக இனிமையாக இருந்தது என்று கூறுவதால் அக்காலத்தில் கூவல் என்னும் நீர்நிலை இருந்தது என்றும் அந்நீரினை அக மாந்தர்கள் உண்டனர் என்பதும் இப்பாடல் வழி அறியமுடிகின்றது.

தலைவனின் மலைநாட்டு அருவியின் வளத்தினைத் தலைவி சிறப்பிக்கின்றாள்.

*சிறுபுறம் கடுக்கும் பெருங் கை வேழம்*

*வெறிகொள் சாபத்து எறி கணை வெரீஇ,*

*அழுந்து பட விடரகத்து இயம்பும்*

*எழுந்து வீழ் அருவிய மலை கிழவோனே?* [40]

கானவன் முதுகுபோல் கையைக் கொண்ட யானை, கானவன் வில்லிலிருந்து விரைந்து பாயும் அம்புக்குப் பயந்து ஓடி ஆழமான மலைப்பிளவில், அங்கு முழங்கும் அருவியுடன் சேர்ந்து முழங்கும் மலைக்கு உரிமை பூண்டவன் என்று தலைவனின் மலைநாட்டு அருவியின் வளத்தினைத் தலைவி புகழ்ந்துரைப்பதனைக் காண முடிகின்றது.

வாழைமரம் மிகுந்த மலைச்சோலையில் வீற்றிருக்கும் என் தலைவனின் மலைநாட்டில் நீர் பருகவரும் ஆண் யானையின் வீரச்சிறப்பினைத் தலைவி தோழியிடம் பின்வருமாறு கூறுகிறாள்.

*முளை வளர் முதல மூங்கில் முருக்கி,*

*கிளையொடு மேய்ந்த கேழ் கிளர் யானை,*

*நீர் நசை மருங்கின் நிறம் பார்த்து ஒடுங்கிய,*

*பொரு முரண் உழுவை தொலைச்சி, கூர்நுனைக்*

*குருதிச் செங்கோட்டு அழி துளி கழாஅ*[41]

மேற்கூறிய பாடலில் கருமை நிறமான ஆண் யானையானது தண்ணீர் இருக்கும் இடத்தைத் தேடி, நீர் பருக வருமிடத்து புலி குத்திக்கொன்ற நிலையில் குருதி படிந்த தன் கொம்புகளை, மலைநாட்டில் பொழிகின்ற மழைநீரில்

கழுவிவிட்டு, புலியை அடக்கிய செருக்கோடு தன் பெண் யானை இருக்கும் இடத்திற்குச் செல்லும். அத்தகைய மலைநாட்டிற்குரிய தலைவன் அவன் என்று குறிப்பிடுவதன்வழி அருவி நீர்வளத்தினை உணரமுடிகின்றது.

தலைவன் நாட்டில் பெருமழை பொழிந்து இருண்டு கிடந்த நிலையைத் தலைவி பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

*கண மழை பொழிந்த கான்படி இரவில்,*
*தினைமேய் யானை இனன் இரிந்து ஓட,*
*கல் உயர் கழுதில் சேணோன் எறிந்த*
*வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென*[42]

மிகுதியான மழை பொழிந்தது காரணமாகவே இருளாக இருந்தது. அத்தகைய நள்ளிரவில் காவல் காக்கும் சேணோன் கவணின் வீசிய கல்லில் அடிபட்ட தினைப்புனத்தை மேய்ந்த யானைகளானது தன் இனத்துடன் ஓடும். அத்தகைய நாட்டிற்கு உரியவன் நம் தலைவன் என்றும்,

களவு காலத்தில் தலைவனின் பிரிவினால் ஏங்கிய தலைவியிடம் தலைவன் நாட்டு மலையனின்று ஓடிவரும் அருவியைக் காண்பித்துத் தோழி தலைவியை மகிழ்வித்ததனை,

*............................. அவர்நாட்டுப்*
*பூசலாயம் புகன்றிழி அருவியின்*
*மண்ணுறு மணியின் தோன்றும்*
*தண்ணறுந் துறுகல் ஓங்கிய மலையே*[43]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு தலைவியின் மகிழ்ச்சிக்கு அருவி காரணமாவதை அறிய முடிகின்றது.

தலைவியின் காதல் மிகுதி களவுக் காலத்தில் தலைவி தன்னை, தான் விரும்புபவர் தொடர்புடைய பொருள்களைக் கண்டவழி உவத்தலும் நுகர்தலும் பாராட்டுதலும் காதலரின் இயல்பாம். அதுபோலவே தன் காதலன் நாட்டு மலையிலிருந்து விழுந்தோடிய ஆற்று வெள்ளத்தில் அடித்து வரப்பட்ட வேருடன் இருந்த முழு காந்தள் கிழங்கினைக் கண்ட தலைவி, அதனைத் தன் மார்பில் அணைத்து அன்பு பாராட்டியதோடு அச்செடியினைத் தன் இல்லத்தில் நட்டு வைக்கின்றாள்.

இத்தகைய செயலினை அன்பு மிகுதிய வெளிப்பாட்டினைக் ஐங்குறுநூறு பாடல் எடுத்துரைக்கின்றது.

*அம்ம வாழி தோழி அன்னைக்*
*குயர்நிலை உலகமுஞ் சிறிதால் அவர்மலை*
*மாலைப் பெய்த மணங்கமழ் உந்தியொடு*
*காலை வந்த காந்தள் முழுமுதல்*
*மெல்லிலை குழைய முயங்கலும்*
*இல்லுய்த்து நடுதலுங் கடியா தோளே*[44]

என்ற பாடலால் அறியமுடிகின்றது. தலைவி தலைவன் மேல் கொண்ட காதலின் மிகுதியை வெளிப்படுத்துவதனைக் காணமுடிகின்றது.

**தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறல்**

கடல்வாழ் மீன்கள் உறங்கும் நள்ளிரவில் தலைவி என்னைத் தழுவியது எத்தகைய இன்பம் எனில், காவிரியாற்றில் ஆழம்மிக்க சுழியில் குளிப்பதுபோல் நடுக்கத்துடன் நடுக்கம் தீருவதுபோல, அவள் என் நெஞ்சில் நேற்று அடைந்துகொண்டாள் எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதனை,

*ஒளிறுவன இழிதரும் உயர்ந்து தோன்று அருவி,*

*நேர்கொள் நெடுவரைக் கவாஅன்*

*சூரர மகளிரின் பெறற்கு அரியோளே*[45]

தலைவன் முன்பு தலைவியின் இடத்து நடந்த செயலை எண்ணித் தன் நெஞ்சிற்கு அகமகிழ்ந்து கூறுகிறான்.

மற்றொரு பாடலில் தலைவி தன்னுடன் வருவதாகக் கூறியதைக் கேட்டு தலைவன் மகிழ்ச்சியில் திளைப்பதனைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*கடும்புனல் மலிந்த காவிரி பேரியாற்று*

*நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல*

*நடுங்கு அஞர் தீர முயங்கி, நெருநல்*

*ஆகம் அடைதந்தோளே வென்வேற்*[46]

நெஞ்சமே! ஒலிக்கின்ற அருவியினையுடைய அம்மலையில் வீசும் மனம் போல ஒரு செய்தி வந்துள்ளது. யாதெனில், தலைவி என்னுடன் வருவதாகக் கூறிவிட்டாள். ஆகையால் நான் மகிழ்ச்சியில் திளைக்கின்றேன் என்று தலைவன் குறிப்பிடுவதனை அறிய முடிகின்றது.

அன்றொரு நாள் தலைவியைத் தழுவியது எண்ணித் தலைவன் தன்னைத் தானே கேட்டுக் கொள்வதாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*குணகடல் முகந்து, குடக்கு ஏர்பு இருளி,*

*தண் கார் தலைஇய நிலம் தணி காலை,*

*அரசு பகை நுவலும் அருமுனை இயவின்*[47]

கீழைக் கடலில் நீரை முகந்துகொண்டு மேற்கு நோக்கி நகர்ந்து, இருண்டு மழைபொழிந்து நிலம் குளிர்ச்சி அடைந்திருக்கும். அவ்வேளையில் யாருமில்லாத காலத்தில் பாழ்பட்டுக் கிடந்த ஊர் மன்றத்தே, அன்றொரு நாள் தலைவியைத் தழுவியதை நினைத்து எண்ணுவது என்பது உன்னைப் பார்த்து நீயே சிரிப்பது போல் இல்லையா? என்று தலைவன் தன்னை, தன்னோடு கேட்டுக்கொள்வதாக மேற்கண்ட பாடல் செய்தி இடம்பெறுவதனை உணரமுடிகின்றது.

தலைவன் தான் கடக்க இருக்கும் நீரற்ற மலைப்பாதையில் துன்பம் தரத்தக்க காட்டு வழியிலே கடந்து செல்வதற்கான மனவலிமை, உடல் வலிமை தன்னிடம் இருப்பினும் தலைவியின் நினைவுதான் நெஞ்சில் இருக்கின்றது என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்ற பாடல் கருத்தை பின்வரும் பாடல் உணர்த்துகின்றது.

*தண்ணிய கமழும் தாழ் இருங்கூந்தல்*

*தடமென் பணைத்தோள் மட நல்லோள்வயின்*

*பிரியச் சூழ்ந்தனை ஆயின் அரியது ஒன்று*

*எய்தினை வாழிய நெஞ்சே செவ்வரை*

*அருவி ஆன்ற நீர்இல் நீள் இடை*[48]

தலைவன் தன்நெஞ்சிற்கு நடக்கவிருக்கும் மலைப்பாதையின் நிலையினைக் கூறுமிடத்து நீர் கொட்ட வேண்டிய அருவி அங்கே வறண்டு கிடக்கும். அவ்வழியில் நீ

செல்ல வேண்டியிருக்கும். அங்கே ஆண் யானை தன் பெண் யானையின் பசித் துன்பத்தைப் போக்குவதற்கு, வளைந்த ஓமை மரத்தினை ஒடித்திருக்கும். அத்தகைய ஓமை மரத்தின் நிழலில்தான் நீ தங்க வேண்டியிருக்கும் என்று தலைவன் தான் செல்லவிருக்கும் பாதையின் துன்பங்கூட தனக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. ஆனால் தலைவியின் நினைவுதான் தன் நெஞ்சிற்கு வருத்தத்தைத் தருகின்றது என்பதை மேற்கூறிய பாடல் உணர்த்துகின்றது.

பொருளீட்டச் செல்லும் தலைவன் பாதி வழியில் தலைவியின் நினைவினால் மேற்கொள்ளவிருக்கும் பாலைநில வழியின் நிலையினை உணர்ந்தவனாய் தன் நெஞ்சிற்குக் கூறும் பாடல் பின்வருமாறு,

*செங்காய் உதிர்ந்த பைங்குலை ஈந்தின்*
*பரல் மண் சுவல முரண் நிலம் உடைத்த*
*வல்வாய்க் கணிச்சி, கூழ் ஆர், கோவலர்*
*ஊறாது இட்ட உவலைக் கூவல்*[49]

கொடிய பாலை நிலப்பகுதியில் கோவலர்கள் தாங்கள் மேய்க்கும் ஆநிரைகளின் நீர் வேட்கையினைத் தணிப்பதற்காக உளி சுத்தியல் கொண்டு கூவல் தோண்டி இருப்பர். அவ்வாறு தோண்டியும் நீரின்மையால் அவ்விடத்தை அப்படியே பள்ளமாக விட்டுச் செல்வர். அப்பள்ளத்தில் கானவர்கள் யானையை வீழ்த்துவதற்காகப் போலியாக இலை தழைகளைக்கொண்டு மூடி யானையின் தந்தத்தை வெட்டிக் கொள்ள திட்டமிடுவர். அத்தகைய நீரற்ற கொடிய பாலைநிலப்பகுதியில் நீ கடந்துசெல்லப் போகிறாயே என்று தன் நெஞ்சிற்குக் கூறும் செய்தியாகப் பின்வரும் பாடல் அமைகின்றது.

மற்றொரு பாடலில் பொருள் தேடச்செல்லும் காட்டுவழியில் தலைவியின் நினைவால் கலங்குகின்றான். தலைவன் அவள் பார்வையை எண்ணிக் கண்ணில் மழை பொழிகின்றான்.

*மலர் பாடு ஆன்ற, மை எழில், மழைக்கண்*

*தெளியா நோக்கம் உள்ளினை, உளி வாய்*[50]

நெஞ்சமே! தலைவியை நினைத்து தெளிவில்லாத பார்வையை எண்ணுகிறாய். அதனால் என் கண்ணில் மழை. அதுபோல் என்னை எண்ணி மைதீட்டிய அவளது மலர்போன்ற அழகிய கண்ணிலும் கண்ணீர் மழை பொழிவாயோ என்று தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

மலையில் வாழும் மக்கள் அஞ்சும் வகையில் வானம் மழை பொழிகின்ற காட்சியினைக் கண்டு தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறும் செய்தியைப் பின்வரும் பாடல் உணர்த்துகின்றது.

*கடல் முகந்து கொண்ட கமஞ்சூல் மா மழை*

*சுடர் நிமிர் மின்னொடு வலன் ஏர்பு, இரங்கி,*

*என்றூழ் உழந்த புன்தலை மடப்பிடி*

*கைமாய் நீத்தம் களிற்றொடு படீஇய,*

*நிலனும் விசும்பும் நீர் இயைந்து ஒன்றி* [51]

மேகமானது கடல் நீரை முகர்ந்து சூலுற்ற நிலையில் செல்லுகின்ற மழைமேகம் மின்னலுடன் சுழன்று இடியுடன் முழங்குகின்றது. வெப்பத்தினால் துன்பப்பட்ட பெண்யானை ஆண் யானையின் தும்பிக்கை மூழ்கும்படி வெள்ளத்தில் பாய்ந்து

குளிக்கிறது. அச்செயலினால் மண்ணிலிருந்து வானம் வரை நீரே தெரிந்தது. அதுமட்டுமின்றி அக்காலத்தில் மழையை அளப்பதற்கு என்று **குறுநீர்க் கன்னல்** என்ற கருவியைக்கொண்டு மழையை அளந்து பார்த்தனர் என்ற செய்தி, சங்ககாலத்தில் மழையினை அளப்பதற்கும் கூட கருவி ஒன்றினைப் பயன்படுத்தினர் என்பதை மேற்கூறிய பாடல் கருத்தின்வழி அறியமுடிகின்றது.

**அகப்பாடலில் தலைவி பெறும் இடம்**

சங்க இலக்கிய அகப்பாடல் கூற்றுகள் அனைத்துமே தலைவியை மையமாகக் கொண்டே அமைகின்றன. யாருடைய கூற்றாயினும் அது தலைவியை முன்னிலைப் படுத்தி அவள் நலனைக் கருத்தில்கொண்டு நிகழ்வதாக அமைந்திருப்பது அகப் பாடலில் தலைவி பெறும் இடத்தைப் புலப்படுத்துகின்றது.

தலைவி என்ற சொல்லுக்குக் கழகத் தமிழகராதி ***எப்பொருட்கும் இறைவி, மனைவி, தலைமைப் பெண், அரசி, அகப்பொருட் கிழத்தி, கதாநாயகி*** [52] என்று பொருள் கூறுகிறது.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதி தலைவி, கலைமகள் எனும் சொற்களுக்கு ***தலைமைப்பெண், லேடி மிஸ்டர்ஸ், நேற்றான், மனைவி, அகப்பொருட்கிழத்தி, கதாநாயகி*** [53] என்று பொருள் விளக்கம் அளிக்கின்றது.

தலைவி பற்றி ஆய்வியல் அறிஞர்கள் கூறும் கூற்றுகள் இங்கு நோக்கத்தக்கன. ***காதலன், காதலி இருவரும் தலைவன், தலைவி என்று பெயர் பெற்றாலும், அகத் தலைமை பெண்ணுக்கு உரியது. புறத்தலைமையுடைய ஆடவன் இல்லத்***

*தலைமையையும் உடன் கொள்வது ஒத்து வராது. மகவைப் பெற்றெடுக்கும் பெண்ணினத்திற்கே குடும்பத்தைச் சுமக்கும் பொறுப்பு உரியதும் எளியதும் நல்லதும் ஆம். காதலின் தலைவன், தோழி, செவிலி, அன்னை முதலான அகமாந்தர்கள் எல்லோரும் தலைவியின் தலைமை நோக்கி இயங்குபவர்கள்[54].* என்கிறார் வ. சுப. மாணிக்கம்.

*சங்க இலக்கியத்தில் தலைவனுடைய உயர்ந்த உண்மையான காதல் உணர்வுகள் மிக முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது. ஏற்ற இடத்தில் தலைவி உணர்த்தும் சரியான உணர்வுகள் விலை மதிப்பற்றதாக உள்ளது என எடுத்துரைக்கின்றார்[55].*

மேற்குறிப்பிட்ட ஆய்வறிஞர்களின் கூற்றுகள் வழி அக மாந்தர்களுள் மிகமுக்கிய சிறப்பிடத்தைப் பெறுபவள் தலைவி என்றும் தலைவியின் இன்றியமை யாமையையும் இத்தலைவரின் வழியே பிற மாந்தர்கள் விளக்கப்படுவதையும் உணர முடிகின்றது.

**தலைவியின் ஆற்றாமை**

பல நாட்களாகப் பெய்த முது மழையினால் புதிதாகத் திருத்திய பொன் செய்நிலத்தில் விதைக்கப்பட்ட வரகு வளர்ந்து தழைத்தது. ஆண் மான்கள் அவற்றின் கதிர்கள் அறியப்பட்ட தாள்களில் தழைத்த இளைய கொழுந்துகளை உண்ணும் வரகின் தாள்களுக்கு இடையே முல்லைக்கொடியின் சிறிய அரும்புகள்

காட்சியளிக்கும் அவற்றோடு மனம் பொருந்திய பிற மலர்களும் மலர்ந்துள்ள முல்லை நிலத்தில் வண்டுகள் தேன் உண்பதற்காக அம்மலர்களைச்சுற்றி வருகின்ற இவ்வழகிய சூழலிலும் பொருளீட்டி வருவதற்காகச் சென்ற நம் காதலர் இன்னும் வரவில்லை என தோழியிடம் தலைவி கீழ்க்கண்டவாறு வருத்தமுற்று உரைப்பதனை,

*பழமழைக் கலித்த புதுப்புன வரகின்*

*இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை*

*இருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை*

*வெருகுசிரித் தன்ன பசுவீ மென்பிணி*

*குறுமுகை அவிழ்ந்த நறுமலர்ப் புறவின்*

*வண்டுசூழ் மாலையும் வாரார்*

*கண்டிசிற் றோழி பொருட்பிரிந் தோரே*[56]

என்ற முல்லைத்திணை பாடல்வழி தலைவனின் பிரிவால் வருந்தியிருக்கும் தலைவியின் ஆற்றாமையை அறியமுடிகின்றது

*சங்க இலக்கியத்தில் தலைவி ஒரு முக்கியமான இடம் பெற்றிருக்கிறாள். ஆண் பாத்திரப் படைப்பாகிய பாங்கனும் மகனும் தலைவியைச் சுற்றியே அமைக்கப்பட்ட பாத்திரமாகும். ஆண் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ள தலைவனும் சாதாரண பாத்திமாகவே உள்ளான். தலைவி இலக்கியத்தில் பேசுகின்றவை உணர்த்துகின்றவை குறைவாகவே இருந்தாலும் மிகப்பெறும் இடத்தில் உள்ளாள்*[57] என்று அழைக்கிறார் வ .சுப. மாணிக்கம்.

தலைவன் குறித்த காலம் வந்தும் வராமையால் மழை மேகமானது தலைவியை நோக்கி நீ இன்னும் உயிரோடுதான் இருக்கின்றாயா? என்று வினவுவதுபோல் இருப்பதாகத் தலைவி தோழியிடம் புலம்புவதனை,

*மங்குல் மா மழை விண் அதிர்பு முழங்கி,*

*துள்ளுப் பெயல் கழிந்த பின்றை, புகைஉறப்*

*புள்ளி நுண் துவலை பூவகம் நிறைய*[58]

மிகுதியான மழையைப் பொழியும் மழை மேகம் அதிரும்படி முழங்கியவாறு மழைக்கட்டிகளுடன் மழை பொழிந்தது. பனிக்காலத்தில் அவர் போர்ப்பாசறையில் இருக்கிறார். நானோ வாடைக்காற்றின் தாக்கத்தால் வாடிக் கிடக்கின்றேன் என்று புலம்புகிறாள் தலைவி.

ஈ. கோ. பாஸ்கரதாஸ் கூறும் கூற்று பின்வருவன, *அகப்பாடல்கள் தலைவியைப்பற்றி எண்ணும்பொழுது அவள் ஒரு குறிக்கோள் பெண் எனலாம். மனதளவிலும் உடலளவிலும் ஊரளவிலும் உலகத்தளவிலும் அனுபவசாலியாகத் திகழ்கிறாள். ஒவ்வொரு உணர்வுகளிலும் அவளுடைய பண்பின் சாயல் சிறந்தோங்கி நிற்கிறது*[59].

ஆதிமந்தி தன் காதலனைக் காவிரியாற்றில் தொலைத்துவிட்டு, பித்தாகித் தேடிக்கொண்டு அலைந்தாள். என் காதலர் அச்சம் தரும் காட்டுவழியில் சென்றிருக்கிறார் என்று நானும் ஆதிமந்தி போல அலைவேனோ என்று சொல்லிக் கொண்டு தலைவி வருந்துவதனை,

*நீர் இல் ஆர் ஆற்று நிவப்பன களிறு அட்டு,*

*ஆள் இல் அத்தத்து உழுவை உகளும்*

*காடு இறந்தனரே, காதலர் மாமை*[60]

தண்ணீர் இல்லாத வழி. ஆள் நடமாட்டமும் இல்லாத வழி. ஓங்கி உயர்ந்த யானையைக் கொன்றுவிட்டு வேங்கைப்புலி விளையாடும் வழி. இதனை எண்ணி என் மாந்தளிர் போன்ற மேனி பசலை நோய் கூர்ந்து துன்பம் அடையட்டும். பீர்க்கம்பூ போன்ற பசலை நிறம் கொள்ளட்டும். தலைவன் அருள் நெஞ்சம் கொண்டவன் என்று சொல்லித் தோழியானவள் தலைவியைத் தேற்றுகிறாள். அருள் அன்று, பொருள்தான் தலைவன் கொண்டிருக்கும் காதல் என்று கூறித் தலைவி மறுப்பதனை, மேற்கண்ட பாடல் வழியே அறியமுடிகின்றது.

*நீர் அற வறந்த நிரம்பா நீள் இடை,*

*வள் எயிற்றுச் செந்நாய் வருந்து பசிப் பிணவொடு*

*கள்ளிஅம் காட்ட கடத்திடை உழிஞ்சில்* [61]

தண்ணீரே இல்லாமல் வறண்டுபோன நிலவழி. அந்த வழியில் கள்ளிக்காடு. அங்கே உசிலஞ்செடி (உழிஞ்சில்). அதனடியில் நொள்ளை (செந்நாய் பதுங்கியிருக்கும் குழி). அந்தக் குழியில் பெண் செந்நாய் பசியுடன் படுத்துக்கிடக்கும். அதன் பசியைப் போக்க வேண்டும் என்று பிடுங்கித் தின்னும்.

*பெயன் மழை துறந்த புலம்பு உறுகடத்துக்*

*கவைமுள் கள்ளிக்காய் விடு கடுநொடி*

*துதைமென் தூவித் துணைப்புறவு இரிக்கும்*[62]

இவ்வுலகில், பொருள்தான் பெறுதற்கரியது என்பதும் அருளை மதிப்பவர் யாரும் இல்லை என்பதும் தெளிவு என்று தோழியிடம் கூறுகிறாள்.

*இனி எவன் மொழிகோ, யானே கயன் அறக்*

*கண் அழிந்து உலறிய பல் மர நெடுநெறி*

*வில் மூசு கவலை விலங்கிய*

*வெம்முனை அருஞ்சுரம் முன்னியோர்க்கே*[63]

மழை பெய்யாததால் வறட்சி மிகுந்துள்ள, தனிமைமிக்க பாலைநிலத்தில், பிளவுபட்ட, முள்ளையுடைய கள்ளியின் காய்கள் வெடிக்கும்பொழுது எழும் விரைவான ஒலியானது, நெருங்கிய மெல்லிய சிறகுகளையுடைய, ஆணும் பெண்ணுமாக இணைந்திருக்கும் புறாக்களைப் பிரிந்து ஓடச்செய்யும். அரிய வழிகள் உள்ள பாலைநிலம், கடத்தற்கரியது என்று கருதாமல் பொருளைத் தேடும்பொருட்டு நம் தலைவர் பிரிவாராயின், உறுதியாக இந்த உலகத்தில் செல்வம் மட்டுமே மதிக்கத் தக்கது என்பதிலும், அருளை ஒரு பொருளாக ஏற்றுக்கொள்வார். யாரும் இல்லை என்பதிலும் நிச்சயமாக ஐயமில்லை என்று கூறுகிறாள்.

*பழந்தமிழ் சமுதாயம் பெண்ணினத்தை நல் இனமாகக் கொண்டாடிற்று. காதல் செய்கையிலும் இல்லறத்திலும் உரிமையளித்த வெற்றி இதற்கு ஒரு சான்று. அகமாந்தர்களுள் தலைமை தலைவிக்கு என்றும் பிற மாந்தர்கள் தலைவி வழிப்பட்டவர்களே என்றும் தலைவியின் பண்புகளில் முதலாவது கற்புடை*

*திண்ணையே என்றும் பிற பண்புகள் கற்பினைச் சார்ந்து பொலிவனவே என்றும் நாம் தெரியவேண்டும்*[64] என்று குறிப்பிடுகிறார் வ. சுப. மாணிக்கம் அவர்கள்.

குளத்தில் நீர் இல்லாமல் வற்றிப்போய், அதன் குழிக்கண்கள் வறண்டு கிடக்கும் வழியில், மரத்துக்குப் பின்னால் வில்லோர் காத்திருக்கும் போர்முனை பிரிவுப்பாதை வழியில், பாலைநில வழியில் துணிவுடன் சென்றாரே என்று தலைவி குறிப்பிடுவதனை,

*கல் ஊற்று ஈண்டல கயன் அற வாங்கி*
*இரும்பிணர்த் தடக்கை நீட்டி நீர் நொண்டு*
*பெருங்கை யானை பிடி எதிர் ஓடும்*
*கானம் வெம்பிய வறம் கூர் கடத்திடை*[65]

கல்லில் ஊறிய நீரை நிரம்பவிடாமல், கல் குளத்திலுள்ள நீர் முழுவதையும் ஆண்யானை தன் கையை நீட்டி மொண்டுகொண்டு பெண் யானைக்கு எதிரே ஊட்டுவதற்கு ஓடும். காடே வெம்பிப்போய் வறட்சி மிக்கதாய் கிடக்கும். அந்தக் காட்டுவழியில் அவர் செல்கிறார் என்று தலைவி வருத்தமுற்று புலம்புவதனை மேற்கண்ட பாடல் செய்தியானது சுட்டுகின்றது.

**தோழி அறத்தொடு நிற்றல்**

தலைவியின் களவு ஒழுக்கத்தை, பிறருக்குத் தெரியாமல் தலைவன், தலைவி மனங்கள் ஒன்று சேர்ந்ததை உண்மையோடு வெளிப்படுத்தலே அறத்தொடு நிற்றல் ஆகும். தலைவி, தோழி, செவிலி, நற்றாய் என ஒவ்வொருவரும் அறத்தொடு நிற்பதுண்டு. அறத்தொடு நிற்றலின் விளைவு, தலைவியை அவள் விரும்பிய

தலைவனுடன் கற்பு வாழ்க்கையில் இணைப்பதாகும். திருமணம் செய்வித்தலாகும். தலைவிக்கு உடனிருந்து பிறர் அறியாமல் களவுக் காதலுக்கு உதவியவள் தோழி. களவுக்காதல் கற்பாக மாறவேண்டும். காதல் வெளிப்பட்டுத் திருமணம் நிகழ வேண்டும். ஆதலால் வாய்ப்பு ஏற்படும்பொழுது தோழி செவிலிக்குத் (வளர்ப்புத்தாய்) தலைவியின் காதலைக் குறிப்பாகப் புலப்படுத்துகிறாள்.

களவை வெளிப்படுத்தல் என்று கூறாமல் அறத்தொடு நிற்றல் என்று பெயர் வைத்துள்ளது சிறப்பாகும். தலைவியின் கற்பு அறத்தைக் காப்பதற்காகக் களவு உண்மையை வெளிப்படுத்துவதால் இது அறத்தொடுநிலை என்று சொல்லப்படுகிறது.

சங்க இலக்கியங்களில் தனியே தோழியின் குடும்ப வாழ்க்கை முறை, பிறப்பு, வளர்ப்பு உள்ளிட்ட எந்த செய்திகளும் காணப்படவில்லை. இருப்பினும் தொல்காப்பியர் தோழி என்பவள் செவிலியின் மகளாவாள் என்று தன் நூற்பாவில் குறிப்பிடுகின்றார்.

*தோழி தானே செவிலி மகளே*[66]

அகவாழ்வில் பிற மக்களின் உணர்வை உணர்ந்து செயல்படக்கூடிய நிலையில் உளவியல் ரீதியாகவும் தோழி இனம் காணப்படுகிறாள். அதனால் அகமாந்தர்கள் ஆகிய தலைவன், தலைவி, செவிலி, தமர் உள்ளிட்டோர் இவளது கூற்றை ஏற்றுக் கொள்ளக் கூடிய சூழல் ஏற்பட்டுவிடுகிறது. செவிலித் தாயிடம் தலைவியின் காதலை தோழி எடுத்துரைத்து அறத்தொடு நிற்றலைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

*தொடலை ஆயமொடு கடல் உடன் ஆடியும்,*

*சிற்றில் இழைத்தும், சிறு சோறு குவைஇயும்,*

*வருந்திய வருத்தம் தீர, யாம் சிறிது*

*இருந்தனமாக, எய்த வந்து*[67]

தாயே! நாங்கள் நெய்தல் நிலக்கடலில் இறங்கி விளையாடினோம்; சிறு வீடு கட்டி சிறுசோறு சமைத்து விளையாடினோம்; அவ்வாறே விளையாடியதால் மிகுந்த களைப்பில் ஓரிடத்தில் அமர்ந்திருந்தோம்; அங்கேயே தலைவன் வந்தான்; நீர் நிலைகள் பரந்து கிடக்கும் தங்களது சிறுகுடியில் உண்டு தங்கிச் சென்றால் என்ன என்று எண்ணுகிறேன் என்றான். அதைத் தோழி செவிலியிடம் தலைவன் தலைவி சந்திப்பு நிகழ்ந்தமையும் அதன்பின் இருவருக்குமிடையே நடந்த களவு ஒழுக்க நிகழ்வுகளையும் எடுத்துக் கூறி, தோழி அறத்தொடு நின்றமையை மேற்கூறப்பெற்ற பாடல் கருத்தின் வழி அறியமுடிகின்றது.

இவ்விடத்துத் தலைவன் சந்திப்பு என்பது நீர்த்துறை ஆகிய கடல் இடத்தில் அமையப் பெற்றிருப்பதையும் நீர் வளமிக்க நிலப்பகுதி நெய்தல் நிலப்பகுதி என்று தலைவன் கூறுவதும் அகப்பாடல்களில் நீர்நிலைகளின் பங்களிப்பு எத்தன்மை வாய்ந்தமையாக அமையப்பெற்றுள்ளது என்பதை அறியமுடிகின்றது.

தலைவியின் திருமணம் விரைவில் நடைபெறுவதற்கு தோழியாகிய தானே காரணம் என்பதனைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது

*ஆர்களிறு மிதித்த நீர் திகழ் சிலம்பிற்*

*சூர்நடைந்தனையாய் நடுங்கல் கண்டே*

*நரந்தநாறு குவையிருங் கூந்தல்*

*நிரந்திலங்கு வெண்பல் மடந்தை*

*பரிந்தனென் அல்லனோ இறையிறையானே*[68]

தலைவியே! யானைகள் மிதித்ததால் ஏற்பட்ட பள்ளத்தில் தேங்கிய நீர் விளங்கும் மலைப்பக்கத்திலுள்ள தெய்வத்தால் விரும்பப்பட்டவைபோல் நீ நடுங்கியதனை அறிந்து உன் துன்பத்தை பொறுத்துக்கொள்ள இயலாதவளாய் நான் உன் நிலையை, உன் தாயிடம் உனக்காகப் பலமுறை பேசியதன் காரணமாகவே தற்போது உனக்கு திருமணம் நடைபெற இருக்கின்றது என்று குறிப்பிடுகின்றாள்.

இப்பாடலில் தலைவியின் துன்பத்தை உணர்த்த யானைகள் மிதித்ததால் நீர் தேங்கிய பள்ளமான இடத்தினையும் காட்சிப்படுத்தியதனை ஆராயும்போது களவு வாழ்க்கையில் தலைவன் தலைவியின் நிகழ்வுகளில் சந்திப்பு நிகழ்வுகளில் ஏதேனும் ஒரு நீர்நிலை, நீர்த்துறை சங்கப் பாடல்களில் புலவர்கள் காட்சிப்படுத்தி இருப்பதனை நோக்கும்பொழுது நீர்நிலையின்றி களவு வாழ்க்கை நிகழ்வு இடம்பெறாது என்பது போன்ற சிந்தனைகளை சங்கப்புலவர்கள் எடுத்தாண்டுள்ளமையை உணர முடிகின்றது.

தலைவன் தலைவியை மணந்துகொள்ள வந்து கொண்டிருப்பதை அறிந்த தோழி மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கித் திளைப்பதற்கான காரணத்தை இப்பாடல் எடுத்துரைக்கின்றது.

*என்றூழ் வியன்குளம் நிறைய வீசி,*

*பெரும்பெயல் பொழிந்த ஏம வைகறை,*

*பல்லோர் உவந்த உவகை எல்லாம்*

*என்னுள் பெய்தந்தற்றே சேண் இடை*

*ஓங்கித் தோன்றும் உயர் வரை*

*வான் தோய் வெற்பன் வந்தமாறே*[69]

மகிழ்ச்சியைக் குளம் என்னும் நீர்நிலையோடு உவமைப்படுத்திக் கூறுவதனை இப்பாடல் குறிப்பிடுகின்றது.

தலைவியே! மழையின்மையால் வளர்ச்சியுற்று வாடிக் கிடக்கும் குளத்தில் ஒருநாள் இரவில் திடீரென்று பெருமழை பொழிந்து ஊரிலுள்ள குளம் நிரம்பினால் அதனைக்கண்டு ஊர்மக்கள் எத்தகைய இன்பத்தை அடைவார்களோ அத்தகைய மகிழ்ச்சியைத் தான் அடைந்திருப்பதாகத் தோழி குறிப்பிடுவதன் வழி சங்க அக இலக்கியப் பாடல்களில் நீர்நிலைகள் பெற்றிருக்கக்கூடிய ஆளுமைப் பண்பினை தோழி கூற்று பாடல் வாயிலாக அறிய முடிகின்றது.

தோழி மகிழ்ச்சிப் பெருக்குடன் தலைவியிடம் தலைமகன் தான் வருவதாகக் குறித்த காலத்திற்கு முன்பாகவே வருகின்றான் என்று தோழி கூறுகின்ற செய்தியாக இப்பாடல் அமைகின்றது.

*வருவையல்லை வாடை நனிகொடிதே*

*அருவரை மருங்கின் ஆய்மணி வரன்றி*

*ஒல்லென இழிதரும் அருவிநின்*

*கல்லுடை நாட்டுச் செல்லல் தெய்யோ*[70]

தலைவியே! நம்மலையில் ஊற்று நீரானது வழிகிறது; கோடல் மலர்ந்து இருக்கின்றது; இத்தகைய காலம் என்பது வாடைக்காற்று வீசும் காலம். அத்தகைய

காலம் வருவதற்கு முன்பே அதாவது முன்பனிக் காலத்திற்கு முன்பாகவே தலைவன் திரும்ப வருகிறான் என்று மகிழ்ச்சியோடு தோழி தலைவிக்குக் கூறுகின்றாள்.

**தோழி தலைவனுக்கு உரைத்தல்**

களவு, கற்பு என்ற இரு நிலைகளிலும் தலைவன், தலைவி ஆகிய இருவருக்கும் உற்ற துணையாய் இருந்து உதவுபவள் தோழியே ஆவாள். தலைவியின் உயிர்க்குயிராய் இருக்கும் தோழி காதலுக்கு உதவுவதிலும், இருவரும் சந்திக்க ஏற்பாடு செய்வதிலும், தலைவனைத் திருமணத்திற்கு உடனே ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கூறுவதிலும் களவியல் நிலையில் உதவியாக இருப்பவள் தோழி இளமை போய்விட்டால் திரும்ப வராது.

*இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்*

*வளமை விழைதக்கது உண்டோ? உள நாள்,*

*ஒரோஒ கை தம்முள் தழீஇ, ஒரோஒ கை*

*ஒன்றன் கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்,*

*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை; அரிதுஅரோ,*

*சென்ற இளமை தரற்கு!* [71]

நீர் உண்ண தாகம் எடுப்பதுபோல பொருள் தேடவேண்டும் என்ற எண்ணத்தில் உன்னை ஆசை துரத்துகின்றது. சற்று தலைவியின் நிலையைச் சிந்தித்து எண்ணிப்பார் தலைவனே! இளமை போய்விட்டால் திரும்பவராது. ஆகவே இளமைக்

கால இன்பத்தைத் திளைத்துக்கொள் என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்துகின்றாள்.

மற்றொரு பாடலில் தோழி தலைவனிடம் நான் சொல்வதைக் கேள். நீ இவளைப் பிரிவதாக இருந்தால் இவள் நலமுடன் இருக்க மாட்டாள். ஆகையால் இவளையும் கூட்டிச்செல் என்று உரைக்கின்ற செய்தியானது

*வான் கடற் பரப்பில் தூவற்கு எதிரிய,*

*மீன் கண்டன்ன மெல் அரும்பு ஊழ்த்த,*

*முடவு முதிர் புன்னைத் தடவு நிலை மாச் சினை,*

*புள் இறை கூரும் மெல்லம் புலம்ப*[72]

தலைவனே! வானம் போன்ற கடல் பரப்பில் மழை பெய்யும்போது மழைத் துளிகளை உண்பதற்காக மேற்பரப்பில் மிதக்கும் மீன்கள் போல அரும்புவிட்டுக் கொண்டிருக்கும் புன்னை மரங்கள் முடம்பட்டிருக்கும். அத்தகைய நிலையினை தலைவி அடைவாள். ஆகையால் நீ தலைவியைக் கூட்டிச்செல்க என்று குறிப்பிடுகின்றாள் தோழி.

*அறிவே உருவாய் வந்து அறமே வழங்கும் உள்ளம் கொண்டு விளங்கும் தோழி பால் சொல்லாற்றல் அளவின்றி அமைந்திருந்தது என்ற கூற்றும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது*[73]*.*

தலைவன் வரைதலில் விருப்பம் கொள்ளாது களவிலேயே ஆர்வம் காட்டிவருவதைக் கண்ட தோழி தலைவனிடம் நீண்ட மலைக்கண் உள்ள

தோட்டங்கள் பொருந்திய நம் ஊரில் இருந்து விரைந்து ஓடி வருகின்ற அருவியைக் கண்டாலும் என் தோழி கண்கலங்கி அழுகின்றாள் என்று வரைதல் எண்ணம் இல்லாத தலைவனிடத்தில் தலைவி கொண்ட வெறுப்புணர்வினை பின்வருமாறு வெளிப்படுத்துவதை,

*குன்றக் குறவன் புல் வேய் குரம்பை*

*மன்று ஆடு இள மழை மறைக்கும் நாடன்*

*புரையோன் வாழி, தோழி! விரை பெயல்*

*அரும் பனி அளைஇய கூதிர்ப்*

*பெருந் தண் வாடையின் முந்து வந்தனனே*[74]

தலைவனிடம் தோழி தலைவியை விரைவில் திருமணம் செய்யத் தூண்டுவதாக மேற்கண்ட பாடல் அமையப்பெற்றுள்ளது என்பதை உணர முடிகின்றது.

தோழி வரைவு கடாதலில் நடந்துகொள்ளும் முறை குறித்து இரா. தண்டாயுதம் அவர்கள் ***உயர்த்திக் கூறவேண்டிய இடத்தில் உயர்த்திக்கூறி, இடித்துக்காட்ட வேண்டிய நேரத்தில் இடித்துக்காட்டி, அறிவுரை நல்க வேண்டிய நேரத்தில் அறிவுரை நல்கி, உலக ஆட்சியில் மதி நலம் சார்ந்த அமைச்சராகத் தோழி விளங்குகின்றாள்***[75] என்று குறிப்பிடுகின்றார்.

தலைவனே! மென்மையான தன்மையும் மழை மேகம் போன்ற கூந்தலையும் கொண்ட தலைவி உன்னை எண்ணிக்கொண்டு புலம்புவதை நான் அறிவேன்.

அதனால் கொடிய காட்டுவழியில் நீ செல்லவேண்டாம் என்று தோழி எடுத்துரைப்பதே பின்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

*கல்லா கோவலர் கோலின் தோண்டிய*

*ஆன் நீர் பத்தல் யானை வெளவும்*

*கல் அதர் கவலை செல்லின் மெல் இயல்*

*புயல்_நெடும்_கூந்தல் புலம்பும்*

*வய_மான் தோன்றல் வல்லாதீமே* [76]

தலைவனே! நீ செல்லும் பாலை நிலப்பகுதியில் கற்காத காவலர்கள் ஆநிரையின் பசுவின் நீர்வேட்கை போக்குவதற்காகத் தன் கையால் குழியினைத் தோண்டுவர். அதன் பக்கத்தில் பத்தல் அமைத்து அதில் நீரினை ஊற்றுவர். பத்தலிலுள்ள நீரினை யானைகள் குடித்துச் சென்றுவிடும். அக்காட்டுவழியில் செல்லவேண்டாம் என்று தோழி தலைவனிடம் உரைக்கின்றாள்.

தோழி, தலைவனிடம் தலைவியின் நீலமலர் போலும் கண்கள் பசப்பதற்கு நீயே காரணமாகிவிட்டாய்! என்று தலைவியின் வருத்தத்தைத் தோழி எடுத்துரைக்கின்றாள்.

*கால் பொர நுடங்கல கறங்கு இசை அருவி நின்*

*மால் வரை மலிசுனை மலர் ஏய்க்கும் என்பதோ*

*புல் ஆராப் புணர்ச்சியால் புலம்பிய என் தோழி* [77]

மழை இடத்தே காற்று வீசும்போது அருவி ஆர்ப்பரித்து ஒலிக்கும். அருவியின் சுனையில் நீலமலர் மலர்ந்திருக்கும். அத்தகைய நீல மலர்போலும் உள்ள தலைவியின் புணர்ச்சியால் முழுமையடையாத இன்பத்தால் புலம்பித் தவிக்கின்ற தலைவி கண்கள் பசப்பதற்கு நீயே காரணம் என்று கூறுகின்றாள்.

மேலும் தலைவன் தலைவியைச் சந்திக்கக் கடந்து வரும் பாதையை எண்ணி வருத்தம்கொள்ளும் அவள் நிலையைத் தோழி இவ்வாறு கூறுகின்றாள். தலைவனே நீரின்றி வறண்டுபோன நிலம்போல தலைவி வருத்தமுற்று இருக்கின்றாள். இவளது மேனி அழகை, அழகு குறையாமல் பார்த்துக்கொள்வது உன் திறமை என தோழி எடுத்துரைக்கின்ற கலித்தொகை பாடல் பின்வருமாறு,

*ஆர் இடை என்னாய் நீ அரவு அஞ்சாய் வந்தக்கால்,*
*நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள், வைகறை,*
*கார் பெற்ற புலமே போல், கவின் பெறும்; அக்கவின்*
*தீராமல் காப்பது ஓர் திறன் உண்டேல், உரைத்தைக்காண்*[78]

தலைவனே! பாம்பு மேயும் வழியில் நீ அஞ்சாது கடந்து வருகின்றாய். அதனால் தலைவி நீரின்றி வறண்ட நிலம்போல் வருத்தம் கொள்கின்றாள். பொழுது புலர்ந்து எழுகின்ற காலை நேரத்தில் மழை பொழிந்த நிலம் போன்று இவள் மேனி உள்ளது. அத்தகைய மேனி அழகினை குறைவு கொள்ளாது பார்த்துக்கொள்வது உன் திறமை என்று தோழி குறிப்பிடுவதனை மேற்கண்ட தோழியின் பாடல் கருத்தின் வழியே உணர முடிகின்றது.

**தாய் வீட்டில் காவல் வைத்தல்**

தலைவனைச் சந்திக்க இயலாதவாறு தாய் தன்னை வீட்டுக் காவலில் வைத்திருப்பதை குளத்தைக் காவல் காக்கும் காவலனின் செயலோடு ஒப்பிட்டுக் கூறுகின்றாள் தலைவி.

*துய் அவிழ் பனி மலர் உதிர வீசித்*
*தொழில் மழை பொழிந்த பானாட் கங்குல்,*
*எறிதிரைத் திவலை தூஉம் சிறு கோட்டுப்*
*பெருங்குளம் காவலன் போல*
*அருங்கடி அன்னையும் துயில் மறந்தனளே*[79]

தோழியே! தலைவன் தன்னைப் பகல் குறியில் சந்திக்க வருவதனை அறிந்த தாயானவள் தன்னை வீட்டுக்காவலில் வைத்திருக்கும் செயல் என்பது மழையால் சிறிய கரையை உடைய பெருங்குளத்தின் கரை உடைந்துவிடாமல் இரவெல்லாம் கண்விழித்து காவல் காக்கும் காவலன்போலத் தன்னை இல்லத்தின் உள்ளே வைத்திருக்கின்றாள் என்று தன் தோழியிடம் தலைவன் கேட்குமாறு தலைவி எடுத்துரைக்கின்றாள்.

இற்செறிப்புப் பற்றி ஆய்வாளர்கள் தரும் கருத்து இங்கு நோக்கத்தக்கன.

*இற்செறிப்பு இயற்கையின் நிகழ்ச்சியாலும் ஐயத்தின் விளைவாலும் நிகழும். திணை முயற்சியின் காரணமாக தலைவி இயல்பாக எச்சரிக்கப்படுவாள். ஊர் அலரின் அலர் தலைவனின் வருகை அவன் உறவால் தலைவியின் உள்ளத்திலும் உடலிலும் ஆற்றாமையால் ஏற்பட்ட மாற்றங்களைத் தாய் உணர்ந்த நிலை என்பன தலைவி மேல் ஏற்பட்ட ஐயத்தின் விளைவாகும் என்று உரைக்கிறார்*[80].

*இற்செறிப்பு என்னும் குறியீட்டுச் சொல் பெண்களை வீட்டுக்குள் கட்டுப்படுத்திய நிலையைக் காட்டுவதாகும்*[81] என்கிறார் ச. மெய்யப்பன்.

*பருவம் வாய்க்கப்பெற்ற பெண் செல்வத் தகுதி மிக்க குடியினல் கடுமையாகப் பாதுகாக்கப்பட்டு இருக்கிறாள் என்பது உண்மை*[82].

அன்பின் ஐந்திணையில் உடன்போக்கு என்பது முக்கியப்பங்கு வகிக்கின்றது. மனம் ஒருமித்த காதலரின் களவு வாழ்வில் உடன்போக்கு நிகழ்வு என்பது ஒரு திருப்புமுனை என்றே கூறலாம். இந்த உடன்போக்கு குறித்த ஆய்வாளர்களின் கருத்துக்கள் இங்கே கூறப்பட்டுள்ளன.

*தலைவி தலைவனுடன் கொள்ளும் உறவும், தாயுடன் கொள்ளும் உறவும் முற்றிலும் தனித்து நிற்பவை அல்ல. ஒன்று மற்றொன்றுடன் பின்னி நின்று சிக்கலை உருவாக்குபவை. இரண்டில் ஒன்றையே தனதாக்க முடியும் என்ற நிலை தோன்றும்போது தலைவி தாயின் உறவை உதறிவிட்டு தலைவனின் உறவைத் தனதாக்க முடிவு செய்கிறாள். தாயின் இற்செறிப்பால் தலைவனுடன் அமையும் புணர்வு தடைபடும்போது மன விளைக்கும் புறக்கட்டுப்பாட்டிற்கும் இடையே தலைவியின் உள்ளத்தில் நடைபெறும் இப்போராட்டத்தில் தலைவி புறக்கட்டுப்பாட்டை மீற மன விளைவை நிறைவு செய்யும். உடன்போக்கை ஏற்காள் என்று உரைக்கின்றார்*[83].

*தலைவியின் உடன்போக்குக்கு அவள் தன் தாய் முன் நிற்க அஞ்சும் அச்சமே காரணமாம்* [84] என்கிறார் வ. சுப. மாணிக்கம் .

மற்றொரு பாடலில் தோழியே! நாம் கடலில் குளித்து விளையாடிய இனிய நிகழ்வினை அறியாது என் தாயானவள் ஊரார் தூற்றும் அம்பலைக் கேட்டு, தன்னை வீட்டுக் காவலில் வைத்திருக்கிறாள் என்று தலைவி புலம்புகின்ற செய்தியினைப் பின்வரும் பாடல் உணர்த்துகின்றது.

*கொண்டல் இடுமணல் குரவை முனையின்*
*வெண்தலைப் புணரி ஆயமொடு ஆடி,*
*மணிப் பூம்பைந்தழை தைஇ, அணித்தகப்*
*பல்பூங் கானல் அல்கினம் வருதல்*[85]

மேற்குறிப்பிட்ட பாடலடிகள் தோழியே கீழே காற்று வீசியபோது தரையில் மணலைக் குவித்து உறவை ஆடினோம்; பின்பு அது சலித்தபோது தோழிமார்களுடன் கடலில் குளித்து விளையாடினோம்; ஆனால் அந்நிகழ்வை ஊரார் தவறாகப் புரிந்து கொண்டு என்னை அம்பல் தூற்றுவதைக் கண்டு, வீட்டுக்காவல் வைத்துள்ளார் தோழி என்று தலைவி குறிப்பிடுகிறாள்.

**செவிலியின் புலம்பல்**

என் மகள் சென்றுவிட்டாள் என்று செவிலித்தாய் புலம்புவதனை,

*நீர்நசைக்கு ஊக்கிய உயவல் யானை*
*இயம்புணர் தூம்பின் உயிர்க்கும் அத்தம்*
*சென்றனள் மன்ற என் மகளே*[86]

தண்ணீர் தாகத்தால் வாடும் யானை இசைக்கருவியில் கொம்பு ஊதுவது போல பெரு மூச்சுவிடும். அப்படிப்பட்ட வழியில் என் மகள் சென்றுவிட்டாள் என்று செவிலித்தாய் புலம்புகிறாள்.

*சங்க இலக்கியத்தில் தலைவியோ தோழியோ பெற்றவளை நற்றாய் என்றோ வளர்த்தவளைச் செவிலி என்றோ சுட்டவில்லை. உரையாசிரியர்கள்தான் இவ்வாறு பாகுபடுத்திக் கூறுகின்றனர். செவிலி, தலைவியின் குடும்பத்துடன் நெருக்கமாகத் தொடர்பு கொண்டவள். அவள் பணத்திற்காக வேலை செய்யும் தாழ்ந்த பணிமகள் போலன்றி, குடும்பத்தில் மேம்பாடான நிலையில் இருந்தாள். தலைவியை வளர்ப்பதில் அன்புணர்வும் சிறந்த கடமையுணர்ச்சியும் காட்டினாள்*[87]*.*

மேலும் *தலைவியின் உடல் வளர்ப்பு நிலையில் மட்டுமின்றி அவளது புதிய குடும்ப அமைப்பிலும் செவிலித்தாயும் அவளது மகளான தோழியும் முக்கியப் பங்கேற்றனர் என்கிறார்* [88] எஸ். சிங்காரவேலு அவர்கள்.

செவிலிக்குரிய கடமைகளைப் பற்றி எஸ். சிங்காரவேல் அவர்கள் குறிப்பிடுகையில், *குழந்தையை ஊட்டி வளர்த்தல், ஓம்புதல், குடும்பத்தாரின் ஓம்புதலுடன் அவள் விரும்பும் தலைவனை மணந்துகொள்ளும் வரை அவளுக்குக் கற்பித்தல் என்பவற்றுடன் தலைவி மணப்பருவம் உற்றபோது செவிலித்தாயின் பொறுப்பு பன்மடங்காகி விடுகின்றது. தலைவியின் ஒழுகலாறு, தோழியின் நடத்தை, இவர்கள் தலைவனுடன் பழகுதல் முதலியன குடும்பநிலையைப் பாதிப்பதால்*

*அவற்றைச் செவிலித்தாய் கூர்ந்து கவனிக்கிறாள்*[89]. இவை செவிலித்தாயின் கடமைகள் ஆகின்றன.

ஊரே செல்வதுபோல உமணர் கூட்டம் உப்பு விற்கச் செல்லும். உப்பு வண்டியில் பூட்டப்பட்ட எருதுகளை அதட்டி ஓட்டும் தெள்விளி குன்றமெல்லாம் கேட்கும். குன்றத்தில் செல்லும் குடிநீர் இல்லாத குன்றம் வழியாகச் செல்லும். என்மகளின் பருவ அழகைப் பார்த்துத் தழுவினேன். அவளும் பலமுறை தழுவினாள். அவள்தன் காதலனுடன் செல்லப்போவதன் அறிகுறி என்பது இப்போதுதான் தெரிகிறது என்று செவிலித்தாய் புலம்புவதனை,

*ஊர் எழுந்தன்ன உருகெழு செலவின்,*
*நீர்இல் அத்தத்து ஆர் இடை, மடுத்த,*
*கொடுங்கோல் உமணர், பகடு தெழி தெள்விளி*
*நெடும் பெருங் குன்றத்து இமிழ்கொள இயம்பும்*[90]

பெற்ற மகளைக்காட்டிலும் மிகுந்த பேரன்பு கொண்டவளாக விளங்குவதையும் அவள் உடன்போக்குச் செல்லும் நீரற்ற வறண்ட நிலப் பகுதிகளைக் கடந்து செல்லும் தலைவியின் துன்பத்தையெண்ணி ஆற்றாதவளாய் செவிலித்தாயானவள் திகழ்வதையும் மேற்கண்ட பாடல் வாயிலாக உணர முடிகின்றது.

**தலைமகள் ஊடல் கொண்டு உரைத்தல் (கற்பு வாழ்வில் நீர்)**

தலைவன் பரத்தையரிடம் சென்றுவிட்டு மீண்டும் தலைவி இல்லத்திற்கு திரும்புகிறான். அவ்வாறு தன்னை நாடிவந்து இருக்கக்கூடிய தலைவனிடம்

பரத்தையின் செயல்களை எடுத்துக்கூறித் தலைவனிடம் கூறுகிறாள் தலைவி. இதனை அகநானூற்றுப்பாடல் பின்வருமாறு காட்சிப்படுத்துகிறது.

*நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்*
*தாதின் அல்லி அவிர் இதழ் புரையும்,*
*மாசு இல் அங்கை, மணி மருள் அவ் வாய்,*
*நாவொடு நவிலா நகைபடு தீம்சொல்,*
*யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை,*
*தேர் வழங்கு தெருவில் தமியோற் கண்டே!* [91]

தாமரை பூத்திருக்கும் நீர்நிலையில் அல்லி இதழ் விரியும்; நீர்நாய் விளையாடும்; அத்தகைய இடத்தில் தாமரைபோல் கையும் வாயும் கொண்ட பொன் வளையல் அணிந்த தேரோடும் தெருவில் தனியே விளையாடிக் கொண்டிருந்த நம் மகனை உன் காதல் பரத்தை கண்டு அதனை உச்சிமுகர்ந்து தன் மார்போடு தழுவிக்கொண்ட காட்சியைத் தான் கண்டதாகத் தலைவி தலைவனிடம் கூறுகிறாள்.

இவ்விடத்தில் தலைவி பரத்தையானவள் தலைவனின் மகனைக் கொஞ்சி விளையாடுகின்ற இடத்தினை நீர்நிலை பகுதியைச் சான்றாதாரமாகக் குறிப்பிட்டு சுட்டுவதன்வழி தலைவனின் தீய ஒழுக்கச் செயல்களினை இடித்துரைத்து, தன் ஊடலினைத் தலைவி வெளிப்படுத்துவதை உணரமுடிகின்றது.

தலைவன் தலைவியைத் தடுத்து நிறுத்திப் பேச முயற்சி செய்கிறான். அதற்குத் தலைவி உன் போன்றவர்களிடம் பேசக்கூடாது என்று என் தாய் சொல்லி வைத்திருக்கிறாள் என்று குறிப்பிடுகின்ற செய்தியைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*யார் இவன், என்னை விலக்குவான்? நீர் உளர்*
*பூந்தாமரைப் போது தந்த விரவுத்தார்க்*
*கல்லாப் பொதுவனை; நீ மாறு; நின்னொடு*
*சொல்லல் ஓம்பு என்றார்; எமர்* [92]

கல்லாத பொதுவனே! நீ விலகிச் செல் தண்ணீர் இல்லாமல் வாடும் தாமரை பூமாலை அணிந்து கொண்டிருக்கும் உன்போன்ற ஆடவரிடம் வாய்ப்பேச்சு கொடுத்தல் கூடாது என்று என்னைச் சார்ந்தவர்கள் எனக்குச் சொல்லி வைத்திருக்கிறார்கள். ஆகவே நீ விலகிச் செல் என்று தலைவனிடம் தலைவி பேச மறுத்துவிடுகிறாள்.

இவ்விடத்து பாடலில் தலைவனின் தோற்றத்தைத் தலைவி குறிப்பிடுகையில் நீரில்லாமல் வாடுகின்ற தாமரை பூவை, பூமாலையை அணிந்து கொண்டிருக்கும் கல்லாத பொதுவன் என்று கடிந்து உரைக்கின்ற காட்சி ஆராயத்தக்கது.

தலைவன் பரத்தையுடன் புனலாடிய செய்தி கேட்டு ஊடல்கொண்ட தலைவியிடம் இனி பரத்தைத் தொடர்பை விரும்பேன் என நீர்த்துறையின்மீது சூளுரைத்தான் தலைவன். இச்செய்தியினைப் பின்வரும் பாடல் குறிப்பிடுவதனை,

*அம்ம வாழி தோழி மகிழ்நன்*
*கடனன்று என்னும் கொல்லோ*
*நம்மூர் முடமுதிர் மருதத்துப் பெருந்துறை*
*உடனாடு ஆயமோடு உற்ற சூளே* [93]

தலைவன் தலைவியோடு புதுப்புனல் ஆடி மகிழ்ந்தபோது அவள் தோழியர் முன்னிலையில் இனி பரத்தையர் தொடர்பை விரும்பேன் என்று நீர்த்துறையில்

சூளுரை செய்தான் என்று தலைவி கூறுவதன் வாயிலாக தலைவன் நீர்த்துறையில் சூளுரைத்த செய்தியை அறிய முடிகின்றது.

பரத்தையை விட்டுப் பிரிந்து வந்த தலைவனிடம் தலைமகள் ஊடல்கொண்ட செய்தியைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*வருபுனல் வையை வார்மணல் அகன்துறை,*
*திருமருது ஓங்கிய விரிமலர்க் காவில்,*
*நறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு*
*வதுவை அயர்ந்தனை என்ப அலரே*[94]

தலைவனே! நீ பரத்தையை திருமணம் செய்துகொண்டது குறித்து ஊரார் வாயில் அலர் புறப்படுகிறது, தூற்றப்படுகிறது என்று கூறித் தலைவி ஊடல் கொள்வதை, ஊற்றுநீர் ஓடிவரும் வைகையாற்றில் நீண்ட மணல்வெளி கொண்ட மருதமரம் வளர்ந்த மலர் பூங்கா, அவ்விடத்தே அழகிய கூந்தல் கொண்ட மடந்தை பருவத்துப் பெண்ணோடு நீ வதுவை செய்துகொண்டதாக ஊரார் அலர் தூற்றுகின்றனர் என்று கூறி தலைவி ஊடல் கொள்வதாகக் குறிப்பிடுகின்றது.

காவிரியாற்றில் தலைவன் பரத்தையரோடு புனலாடுகின்றான். அக்காட்சியைக் காண்கின்ற தலைவி பிற பெண்கள் தொட்ட மார்பினை நான் தழுவ மாட்டேன் என்று கூறித் தலைவனிடம் ஊடல் கொள்கிறாள்.

*மகிழ்மிகச் சிறப்ப மயங்கினள் கொலோ*
*யாணர் ஊர நீன் மானிழை யரிவை*
*காவிரி மலிர் நிறையன்னநின்*
*மார்பு நனி விலக்கல் தொடங்கியோளே*[95]

மேலும்

*பொய்கைப் பள்ளிப் புலவு நாறு நீர்நாய்*
*வாளை நாளிரை பெறூஉம்ஊர*
*எம்நலம் தொலைவதாயினும்*
*துன்னலம் பெரும பிறர்த் தோய்ந்த மார்பே*[96]

பாடலில் மேற்கூறிய பாடலின் காட்சியில் மற்றொரு செய்தியாகப் புலால் நாற்றம் வீசும் நீர்நாயானது வாளைமீன் இழையை எளிதாகப் பெறும். அத்தகைய ஊருணி ஆகையால் என் நலமெல்லாம் அழிவது ஆயினும் பிற பெண்கள் தழுவிய மார்பினை நான் தழுவமாட்டேன் என்று கூறித் தலைவனின் ஊரினை இழிவுபடுத்தி தலைவி ஊடல் கொள்கிறாள்.

தலைவி தலைவனிடம் நீ ஆற்றுநீரில் பரத்தையரோடு நீராடியதைக் கண்டவர்கள் ஒருவர் இருவர் அல்லர். பலர் என்று என்னிடம் இதை நீ மறைக்க வேண்டாம் என்று கூறி தலைவி ஊடல் கொள்கிறாள்.

*அலமரல் ஆயமோடு அமர்துணை தழீஇ*
*நலமிகு புதுப்புனல் ஆடக்கண்டோர்*
*ஒருவரும் இருவரும் அல்லர்*
*பலரே தெய்ய எம்மறை யாதீமே*[97]

தலைவன் தலைவியை நீராட மாற்றுத்துறைக்கு அழைக்கின்றான். அதற்குத் தலைவி திருடன் நீராடும் துறை என்று எண்ணித் தலைவி தயங்குகிறாள். அப்போது தோழி தலைவனை நோக்கித் தலைவனே! நீ முன்பு செய்த சத்தியம் என்னவாயிற்று என்று தலைவனை இடித்துரைத்துத் தோழி கடிந்து உரைக்கின்றாள்.

தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையை விரும்பிச் செல்வது என்பது தலைவிக்கு இன்பம் தரக்கூடிய செயல் அன்று. இது குறித்து வ. சுப. மாணிக்கம் அவர்கள் கூறும் கூற்று.

*பொருள் வரம்பும் நல்லொழுங்கும் பிழிந்த அமைப்பும் பெறுமாறு அறிஞர் படைத்த ஐந்திணைக்கண் ஆகா பரத்தையும் பிரிவைச் சேர்ந்திருத்தல் பொருந்தாது என்பது மிக வெளிப்படை என்கிறார்*[98].

தலைவனுக்காக வாயில் வேண்டி தூது சென்ற பாணனிடம் தலைவி இவ்வாறு கூறி வாயில் மறுக்கின்றாள்.

*வலிமிகு முன்பின் அண்ணல் ஏஎறு*

*பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி,*

*மடக்கண் எருமை மாண்நாகு தழீஇ,*

*படப்பை நண்ணி, பழனத்து அல்கும்*

*கலிமகிழ் ஊரன் ஒலிமணி நெடுந்தேர்*[99]

வலிமைமிகுந்த உடலுறவுகொண்ட எருமைக்கடா பகலில் மலர்ந்திருக்கும் பொய்கையில் கிடந்துவிட்டு வீடு திரும்பிய பின்னர் தன் எருமையைத் தழுவி அழைத்துக்கொண்டு தோட்டத்தின் உள்ளே உள்ள சோலையின் கண்ணே மகிழ்ச்சி கொள்ளும். அத்தகைய ஊரினை உடைய தலைவன் அவன் என்று கூறித் தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தை மறைமுகமாகக் குறிப்பிட்டுப் பாணனிடம் வாயில் மறுக்கின்றாள்.

பரத்தையரிடமிருந்து பிரிந்து வந்த தலைவனிடம் தலைவி தலைவனின் தகாத செயலைச் சுட்டிக்காட்டி, தன் வருத்தத்தை எடுத்துரைப்பதாகப் பின்வரும் பாடல் அமைகின்றது.

*கோடுற நிவந்த நீடு இரும் பரப்பின்*
*அந்திப் பராஅய புதுப்புனர், நெருநை,*
*மைந்துமலி களிற்றின் தலைப்புணை தழீஇ,*
*நரந்தம் நாறும் குவை இருங்கூந்தல்*
*இளந்துணை மகளிரொடு ஈர் அணிக் கலைஇ,*
*நீர் பெயர்ந்து ஆடிய ஏந்து எழில் மழைக்கண்*[100]

தரையை உச்சியைத் தொடுமாறு பெருகி வந்த வெள்ளத்துக்கு அந்த விழா எடுத்து வழிபட்டுக் கொண்டு அந்த நீர்ப்பரப்பில் நேற்று நீ விளையாடினாய். யானைபோல் நீராடினாய்; முன்புறமாக உந்தும் தலைமேல் ஏறிக்கொண்டு நீராடினாய்; துணையாக நரந்தம் பூசி மணக்கும் கூந்தலையுடைய இளம்பெண்களை சேர்த்துக்கொண்டு நீராடினாய்; அவளை ஈரமாக்கி கலவையுடன் நீராடினாய்; அவள்மீது நீரைத் தெளித்து விளையாடியபோது அவளின் அழகிய கண்களைப் பார்க்கப் பார்க்க ஆசை மேலிட்டுத் தவிர்க்காமல் மீண்டும் மீண்டும் நீராடினாய்; நாணம் இல்லாது நீராடினாய் என்றெல்லாம் நீ நீராடியதைப் பற்றி ஊரெல்லாம் தூற்றிப் பேசுகின்றனர் என்று தலைவி ஊடல் கொண்டு தலைவனுக்கு வாயில் மறுக்கிறாள்.

**பரத்தையிடம் தலைவன் தொடர்பு**

எனக்கும் தலைவனுக்குமான நட்பினைப் பற்றி இவ்வூரே பெரிதாகத் தூற்றிப் பேசுகின்றது என்று பரத்தை புலம்புகின்ற செய்தியினைப் பின்வருமாறு,

*வானம் வேண்டா வறன்இல் வாழ்க்கை*

*நோன்ஞாண் வினைஞர் கோள் அறிந்து ஈர்க்கும்*

*மீன்முதிர் இலஞ்சிக் கலித்த தாமரை*

*நீர்மிசை நிவந்த நெடுந்தாள் அகல் இலை*

*இருங்கயம் துளங்க, கால் உறுதொறும்*

*பெருங்களிற்றுச் செவியின் அலைக்கும் ஊரனொடு*

*எழுந்த கௌவையோ பெரிதே; நட்பே,*

*கொழுங்கோல் வேழத்துப் புணை துணையாகப்*

*புனல் ஆடு கேண்மை அனைத்தே; அவனே,*

*ஒண்தொடி மகளிர் பண்டையாழ் பாட,*[101]

மீனவர் வாழ்க்கையானது மழை இல்லாமலும் வறட்சி இல்லாமலும் வாழ்வதே. அத்தகைய மீனவர்கள் வலைவீசி மீன் பிடிக்கும் குளத்தில் தாமரை மலர்ந்து இருக்கும். காற்று வீசும்போதெல்லாம் அந்த தாமரையின் இலையானது யானையின் காதுகள் ஆடுவதுபோல ஆடும். அப்படிப்பட்ட வளமான ஊரன் தலைவன் அவன் மழைபோல் அம்பு எய்யக்கூடியவன். மார்பில் கவசம் அணிந்தவன்; அவனுக்கும் எனக்குமான நட்பு என்பது யானை மிதவையில் ஏறிக்கொண்டு புனலில் விளையாடுவது போன்று மகிழ்ச்சியானது. ஆனால் இவ்வூரோ எங்களைத் தூற்றிப் பேசுகின்றனர்; என்று பரத்தையானவள் வருந்திக் கூறுகின்ற செய்தியைப் பாடலின் வழியே அறிய முடிகின்றது.

*பரத்தையர் என்பவளை காதற் பரத்தை, குலப் பரத்தை, நயப்பு பரத்தை, காமக் கிழத்தி எனவும் அழைக்கப்பட்டுள்ளனர்*[102].

ஈ.கோ. பாஸ்கரதாஸ் அவர்கள் *தலைவியர் இருவர் என்னும் கருத்து அகப்பொருள் மரபுக்கு மாறானதாகும். காமக்கிழத்தி மனையோல் ஒத்தவளேயன்றி மணயோலை மணையோல் இல்லை மனையோள் கிழத்தி ஆதல் இல்லை. ஒருடம்பிற்கு இரண்டு தலைகள் இல்லாமை போல, ஒரு தலைவனுக்கு இரு தலைவியர் இருத்தல் பொருந்தாது என்று குறிப்பிடுகின்றார்*[103]*.*

சமுதாயத் தேவையே பண்டைய பரத்தமைக்குக் காரணம். அடக்கம் இல்லாத ஆடவர் தம் காமப் பசிக்கு பரத்தையர் இரையாவர். ஆணின் பொருளும், பெண்ணின் மெய்யும், பண்ட மாற்றதலைப் பண்டைச் சமுதாயம் பார்த்துக் கொண்டிருந்தது என்று குறிப்பிடுகின்றார்.

தலைவனின் கயமைத் தன்மையைப் பரத்தையானவள் பின்வரும் பாடலில் எடுத்துரைக்கின்றாள்.

*மனையோட் தேற்றும் மகிழ்நன் ஆயின்,*
*யார்கொல் வாழி, தோழி! நெருநல்*
*தார்பூண் களிற்றின் தலைப்புணை தழீஇ,*
*வதுவைஈர் அணிப்பொலிந்து, நம்மொடு,*
*புதுவது வந்த காவிரிக்*
*கோடுதோய் மலிர்நிறை, ஆடியாரோ?*[104]

என்னோடு உறவில் ஈடுபட்டுவிட்டுச் சென்ற தலைவன் தன் மனைவியிடம் அவ்வாறு நான் தவறு செய்தால் வேளூர் வாயில் ஊரின் தெய்வம் என்னைத் தண்டிக்கட்டும் என்று தலைவியிடம் தலைவன் சூளுரை உரைத்து காவிரி ஆற்றுப்

புதுப்புனலில் என்னை தழுவிக்கொண்டு நீராடியது யார் என்று பரத்தை கேள்வி கேட்கின்றாள்.

மற்றொரு பாடலில் பரத்தை தலைவனிடம் ஊடல்கொண்டு புலம்புவதாகக் குறிப்பிடுகின்றது. பரத்தை தலைவனிடம் இங்கே வந்து என்னிடம் உன்னை மட்டுமே விரும்புவதாகக் கூறுகின்றார். இச்செய்தியை உன் மனைவி கேட்டால் மனதில் பெரும் வருத்தம் கொள்வாள் என்று தலைவனிடம் கூறி, பரத்தை ஊடல் கொள்வதாக மேற்கண்ட பாடல் செய்தி சுட்டுகின்றது.

காவிரியாற்றைப்போல ஊரனை நான் சூழ்ச்சி செய்து இழுத்துச் சென்று மறைத்து வைத்துக்கொள்ள எண்ணுகின்றேன் என்று ஊரனின் மனைவிமார்கள் பற்றி பேசுகின்றனர் என்று பரத்தை தருக்கோடு பேசுகின்றாள்.

*கச்சினன், கழலினன், தேம் தார் மார்பினன்,*
*வகை அமைப் பொலிந்த, வனப்பு அமை, தெரியல்,*
*சுரியல் அம் பொருநனைக் காண்டீரோ? என,*
*ஆதிமந்தி பேதுற்று இனைய*[105]

ஆட்டனத்தி, காவிரி ஆற்றில் நடனம் ஆடியபோது எதிர்பாராத விதமாக அவனைக் காவிரியாற்று வெள்ளமானது இழுத்துச் சென்றது; தன் காதலனைத் தேடி காதலி ஆதிமந்தி காவிரிக்கரை வழியாகவே தேடி வந்தாள்; சுருள் முடியுடன் இருக்கும் என் தலைவனைத் தேடுகிறோம் என்று கூக்குரலிட்டு ஆற்றிடம் கேட்டுக்கொண்டே வந்தாள்; அத்தகைய ஆதிமந்தியைப்போல ஊரனின் மனைவிமார் தேடிக்கொண்டு அலைவதும் நான் காவிரியாறுபோல அவனை சூழ்ச்சி செய்து மறைத்து

வைத்துக்கொண்டு இருக்கின்றேன் என ஊரனின் மனைவிமார்கள் பற்றி பேசுகின்றனர் என்று பரத்தை தருக்கோடு பேசுகின்றாள்.

பரத்தை தலைவன் ஊடல் என்னும் உட்பிரிவின் தலைப்பின்கீழ் ஆராய்ந்தமையின் வழியே தலைவனுக்கும் பரத்தமைக்குமான உறவில் உள்ள ஊடல் ஒழுக்க நிகழ்வுகளையும், தலைவன் தலைவியிடம் கூறும் பொய்யுரைகளையும், அதனை பரத்தமையானவள் எடுத்துரைக்கும் பாங்கும், சங்க அகப்பாடல்களின்வழி அறிமுடிகின்றது. மேலும் பரத்தமை தலைவனோடு ஊடல் நிகழ்த்துகின்ற காட்சிகள் யாவும் பொய்கை, குளம் மற்றும் ஆறு உள்ளிட்ட நீர்நிலைகளைக் களமாகக்கொண்டு பாடல் இயற்றிய சங்ககாலப் புலவர்களின் புலமைத் திறத்தினையும் நீர்நிலைகள் சங்ககால மக்களின் அகவாழ்வில் பெற்றிருந்த ஆளுமையினையும் மேற்கண்ட பாடல்களின் கருத்தின்வழி அறியமுடிகின்றது.

**தோழி வாயில் மறுத்தது**

தலைவியின்மீது கொண்ட பேரன்பால் அவ்வளவு நிலையைத் தோழியானவள் தலைவனுக்கு எடுத்துரைப்பதுடன் அறிவுரையும் பகர்கின்றாள். தலைவனே! நீ வேறு ஒரு பெண்ணுடன் இருந்ததைப் பற்றி இவ்வூரார் அலர் தூற்றிப் பேசுகின்றனரே, அவ்வாறு இருக்கையில் இப்பொழுது எதற்காகத் தலைவியைக் காண வந்தாய் என்று தோழி தலைவனைக் கடிந்து உரைத்துத் தோழி வாயில் மறுக்கின்றாள்; இதனைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

*பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்*
*அரவாய் அன்ன அம்முள் நெடுங்கொடி*

*அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி,*

*அசைவரல் வாடை தூக்கலின், ஊதுஉலை*

*விசை வாங்கு தோலின், வீங்குபு ஞெகிழும்*

*கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர![106]*

தலைவனே! ஓடும் ஊற்றுநீர் ஒரே முனையில் தட்டிப் படலில் விழுந்து ஒழுகி ஓடும்; ஆறு கலிங்குக் கட்டி தண்ணீர் விழும் இடத்தில் அகன்ற பானையைச் சாய்த்து வைத்திருப்பர்; அவ்வாறு ஓடி வரும் நீரின் வழியே வரும் மீன்படலில் விழுகையில் நீர் வடிந்து விடுவதால் நீரின்றி மீனானது துள்ளிக் குதிக்கும்; பானையில் விழும் அப்பொழுது அங்கிருக்கும் பானையில் விழுந்த மீனிணை மீனவர் அள்ளிச் செல்வர் என்ற இப்பாடலின் வழியே தலைவனின் விரும்பத்தகாத செயலினை எடுத்துக்கூறி அம்மீனின் நிலையோடு தலைவியின் நிலையை எடுத்துரைப்பதாக இப்பாடல் செய்தி அமைகின்றது.

இது ஒருவகையான மீன் பொரிவித்தை நீ விரும்பிய ஒருத்தியோடு இருந்ததை ஊரெல்லாம் பேசுகின்றது; அவ்வாறு இருக்கையில் நீ தலைவியைக் காண எதற்காக வந்தாய் என்று வீட்டு வாயிலில் நுழைய விடாமல் தோழி தடுப்பதனை இப்பாடல் செய்தி உணர்த்துகின்றது.

பரத்தையரோடு புனலாடி தன் இல்லம் திரும்பிய தலைவனுக்குத் தோழி வாயில் மறுப்பதோடு அவனுக்கு மறுமொழியாக,

*ஓஒ! புனல் ஆடினாய் எனவும் கேட்டேன்; புனல் ஆங்கே*

*நீள் நீர் நெறி கதுப்பு வாரும் அறல் ஆக,*

*மாண் எழில் உண் கண் பிறழும் கயல் ஆக,*

*கார் மலர் வேய்ந்த கமழ் பூம் பரப்பு ஆகம்,*

*நாணுச் சிறை அழித்து நன்பகல் வந்த அவ்*

*யாணர்ப் புதுப் புனல் ஆடினாய், முன் மாலை,*[107]

மகிழ்நனே! நீ பரத்தையரோடு நீராடி அதனை ஒத்துக்கொள்ள மாட்டாய்; மலர்கள் மிகுதியாகக்கொண்ட மிகவும் பழமையான மருதமரம் நிற்கும் பெரிய நீர்த்துறையின்கண்ணே நீ என் காதலி மின்னோடு புனலாடி வந்ததனைக் கண்டோர் பலராவர்; அது பற்றி ஊர் முழுவதும் அலர் பரவிற்று என்ற தலைவனின் பரத்தமையை இகழ்ந்துரைக்கின்றாள். இவ்வாறு பரத்தையுடன் கொண்ட உறவினைத் தலைவனுக்கு எடுத்துரைக்கின்றாள்.

தலைவன் பரத்தையரிடமிருந்து தலைவியைக் காண வருகிறான். தோழி தலைவனை தடுத்து நிறுத்தி, காவிரியாற்றின் துறையில் நீராடியதை ஊரெல்லாம் பேசுகிறது என்று கூறித் தலைவனை வாயில் மறுக்கின்றாள்,

*அகலுள் ஆங்கண், அம்பகை மடிவை,*

*குறுந்தொடி, மகளிர் குரூஉப் புனல் முனையின்,*

*பழனப் பைஞ்சாய் கொழுதி, கழனிக்*

*கரந்தை அம் செறுவின் வெண்குருகு ஓப்பும்*[108]

தலைவனே! காவிரியாற்றில் அத்துறையில் மருத மரம் சாகுபடி விடியற்காலம் வேளையில் வந்த நீரில் நீ விரும்பிய வளையல் அணிந்த பெண்ணோடு புனலாடினாய் என்றும் அதேபோல் முந்தாநாள் நீராடினாய் என்று ஊரெல்லாம் தூற்றிப் பேசுகிறதே என்று கூறித் தோழி தலைவனுக்கு வாயில் மறுக்கின்றாள்.

தலைவனே! நீ பரத்தையோடு நீராடியதை நான் பொய் என்று மறுத்துரைக்க முயன்றேன்; ஆனால் அது என் கட்டுப்பாட்டில் நிற்கவில்லை; தலைவி நான் கூறியதை நம்பவில்லை என்று கூறி, தோழி தலைவனிடம் வாயில் மறுப்பதாக பின்வரும் பாடல் அமைகிறது.

*பொய்புறம் பொதிந்து, யாம்கரப்பவும், கையிகந்து*

*அலர் ஆகின்றால்தானே; மலர்தார்,*[109]

தலைவனே! நீ பரத்தையோடு நீராடியதை ஊரெல்லாம் தூற்றிப்பேசுகிறது. நானும் தலைவியிடம் தலைவன் அவ்வாறு செய்யமாட்டார் என்று பொய்யுரைத்து மறைக்க முயன்றேன் என் பொய்யுரையை ஏற்கவில்லை இனி என் கையில் ஏதுமில்லை என்று தோழி தலைவனிடம் குறிப்பிடுகின்றாள்.

இதன் வழி அகவாழ்வில் தலைவன் தலைவியின் களவு, கற்பு இருநிலைகளிலும் தோழியின் பொறுப்புணர்வு மிகுந்த தன்மையினை காண முடிவதோடு கலிங்கு, ஆறு போன்ற நீர்நிலைகள் குறித்ததான செய்திகளையும் இடம்பெற்றுள்ளமையும் உணரமுடிகின்றது.

# தொகுப்புரை

- சங்க இலக்கிய அகவாழ்வில் மனம் ஒத்த தலைமக்களின் வாழ்க்கையில் நீரும் நீர்த்துறைகளும் பெறும் பங்களிப்பினை அகப்பாடல்களின் வழியே உணர முடிகின்றது.
- தலைமக்களின் அன்பின் திறத்தை வெளிப்படுத்துவதற்கும், தலைமக்களின் சந்திப்பிற்குக் காரணியாகவும் களவுக்கூட்டம் நடைபெறும் குறியிடமாகவும் நீரும், நீர்த்துறைகளும் இடம்பெறுதலோடு நட்பின் ஆழத்தை குறிப்பிடும் உவமையாகவும், நீர்நிலைகள் பயன்படுத்தப்பட்டுள்ளதனை அறிய முடிகின்றது.
- தலைமக்களின் பண்பு நலன்களைக் கூறுமிடத்தும் தலைவியின் மென்மை குறித்துப் பேசுமிடத்தும் நீருடனும் நீர்த்துறைகளுடனும் ஒப்புமைப்படுத்தி பாராட்டப்பெற்றுள்ளமையைக் காணமுடிகின்றது.
- தோழி கூற்றுப் பாடல்களில் நீரும், நீர்த்துறைகளும் பெற்றிருக்கக்கூடிய ஆளுமைப் பண்பினைக் குறிப்பிடுகையில் தலைமக்களின் சந்திப்பிற்கு அரணாக நின்று காக்கும் இடங்களிலும், அறத்தொடு நிற்றலிலும் தலைவியின் துயர நிலைகளிலும், தலைவனை இடித்துரைக்குமிடத்தும் களவுவாழ்வில் நீர்நிலைகள் பெற்றிருக்கக்கூடிய சிறப்பியல்புகளை அறியமுடிகின்றது.
- கற்பு வாழ்விலும் நீர் முக்கிய ஊடகமாகத் திகழ்கிறது.

- தலைவன் பரத்தையுடன் புனலாடிய செய்தி கேட்டு ஊடல்கொண்ட தலைவியிடம் இனி பரத்தைத் தொடர்பை விரும்பேன் எனத் தலைவன் நீர்த்துறையின் மீது சூளுரை நிகழ்த்துவதனை அறியமுடிகின்றது.
- தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்தைத் தலைவி, தோழி கடிந்துரைக்குமிடத்தும் வாயில் மறுக்கும் இடங்களிலும் என கற்பு வாழ்விலும் நீரும், நீர்த்துறைகளும் பெறும் ஆளுமைச் சிறப்பினைக் குறித்த செய்தியினையும் மேற்கண்ட அகவாழ்வில் நீரியல் சிந்தனை நிகழ்வுகளாக ஆய்வின்வழி பெறமுடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள். அகம். 54
2. தொல். அகத்.1 இளம். உரை
3. தொல். அகத். 1 நச்சி. உரை
4. இறை. அகம் - 1939 .9
5. இ. விளக்கம் - 375
6. தொல். பொருள். அகம்.1
7. தொல். அகத். நூற் - 3
8. தொல். அகத். நூற் - 4
9. தொல். அகத். நூற் - 5
10. தொல். அகத். நூற் - 2
11. சிலம்பு. காடுகாண் காதை - 64-66
12. தொல். அகத். நூற் -18
13. தொல். அகத். நூற் - 14
14. பி. எல். சாமி, செடி கொடி விளக்கம் ப. 28
15. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 97
16. மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 92
17. தொல். பொருள். கற்பியல் - 143
18. குறுந். பா. 113:1-6
19. அகம். பா. 2: 1 - 9
20. அகம். பா. 100: 5 - 10
21. நற். 334: 6 - 9
22. அகம். பா. 72: 1 - 6
23. அகம். பா. 362: 1 - 5
24. புலவர்குழந்தை, தொல்காப்பிய கால தமிழர், பக்கம் - 120
25. நற். 334: 1 - 5

26. அகம். பா. 322: 1 - 4
27. நா. சுப்புரெட்டியார், அகத்திணை கொள்கை, பக்கம் - 56
28. அகம். பா. 182: 9 - 12
29. அகம். பா. 92: 1 - 5
30. நற். பா. 61: 7 - 10
31. தொல். களவியல், நூற் - 7
32. நச்சி. உரை, பக்கம் -176
33. Tamil Lexicon, Vol – IV, Pa. 1788
34. கழகத் தமிழ் அகராதி, பக்கம் - 474
35. கலித். பா. 42: 9 - 11
36. கலித். பா. 46: 7 - 9
37. குறுந். பா. 3:1 - 2
38. குறுந். பா. 170: 1 - 5
39. ஐங்குறு. பா. 203: 1 - 4
40. நற். 228: 6 - 9
41. அகம். பா. 332: 1 - 5
42. அகம். பா. 392: 12 - 15
43. குறுந். பா. 367: 4 - 7
44. குறுந். பா. 36: 1 - 6
45. அகம். பா. 162: 23 - 25
46. அகம். பா. 62: 9 - 12
47. நற். பா. 346: 1 - 3
48. நற். பா. 137:1 - 5
49. அகம். பா. 21: 20 - 23
50. அகம். பா. 33: 9 - 10
51. அகம். பா. 43: 1 - 5
52. கழகத் தமிழ் அகராதி, பக். 474

53. Tamil Lex. vol – III, PP. 1782 - 1783
54. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்கம் - 461
55. R.K. Naghu, A Critical Study of Palaith Thinai in Cangam Literature, Pa. 70
56. குறுந். 220:1 - 7
57. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்கம் - 176
58. அகம்:பா ;294:1-3
59. ஈ .கோ. பாஸ்கரதாஸ், எட்டுத்தொகையில் தலைவி, பக்கம் - 43
60. அகம்:பா;45:4-6
61. அகம்:பா;53:5-7
62. குறுந்:பா;174: 1-3
63. நற்:பா;224:8-11
64. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்கம் - 217
65. நற்:பா;186:1-4
66. தொல். களவியல் 35
67. அகம். பா. 110:6-9
68. குறுந். பா. 52:1-5
69. அகம்: பா. 42: 9 - 14
70. ஐங்குறு. பா. 233 :1 - 4
71. கலித். பா. 18 : 7 - 12
72. அகம். பா. 10 :1 - 4
73. கா. கோவிந்தன், நற்றிணை, பக்கம் - 221
74. ஐங்குறு, பா. 252 :1 - 5
75. ரா. தண்டாயுதம், சங்க இலக்கியம், பக்கம் - 106
76. ஐங்குறு. பா. 304 :1 - 5
77. கலித். பா. 45 : 8 - 10
78. கலித். பா. 38 : 10 - 13
79. அகம். பா. 252 : 10 -14

80. சரளா ராஜகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, பக்கம் - 93
81. சா. மெய்யப்பன், சங்க இலக்கியத்தில் பெண்கள், பக்கம் - 5
82. கு.வே. பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், பக்கம் - 207
83. அ. ராமகிருஷ்ணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, பக்கம் - 119
84. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்கம் - 25
85. அகம். பா. 20 : 7 - 10
86. ஐங்குறு. பா. 377 :1 - 3
87. சரளாராஜகோபாலன், சங்க இலக்கியம் (அகம்), பக்கம் - 91.
88. S.Singaravelu & amp; quot; Social Life of Tamils - The Classical Period & amp; quot; Pa.19
89. S.Singaravelu & amp; quot; Social Life of Tamils - The Classical Period & amp; quot; Pa.181,182
90. அகம். பா. 17: 11 - 14
91. அகம். பா. 16: 1 - 6
92. கலித். பா. 112: 1 - 4
93. ஐங்குறு. பா. 31: 1 - 4
94. அகம். பா. 36: 9 - 12
95. ஐங்குறு. பா. 42: 1 - 4
96. ஐங்குறு. பா. 63: 1 - 4
97. ஐங்குறு. பா. 64: 1 - 4
98. வ. சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்கம் - 236
99. அகம். பா. 146:1 - 5
100. அகம். பா. 266 :1 - 6
101. அகம். பா. 186 :1 - 10
102. ஈ. கோ. பாஸ்கரதாஸ், அகப்பொருள் பாடல்களில் தலைவி, பக்கம் - 81
103. வ .சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக்கம் - 284
104. அகம். பா. 166:10 -15

105. அகம். பா. 76: 7 - 10

106. அகம். பா. 96: 3 - 8

107. கலித். பா. 98:13 - 18

108. அகம். பா. 226: 3 - 6

109. அகம். பா. 116: 11- 12

# சங்க இலக்கியப் புறவாழ்வில் நீரியல் சிந்தனைகள்

**முன்னுரை**

சங்க இலக்கியத்தினை அகமென்றும் புறமென்றும் இருவகையாகப் பிரிப்பர். இதில் அகம் என்பது சங்ககால மக்களின் களவு, கற்பு சார்ந்த வாழ்வியலை எடுத்துரைப்பதாகும். புறம் என்பது சங்ககால மக்களின் பண்பாடு, பழக்க வழக்கங்கள், வீரம், விருந்தோம்பல், ஆடை, அணிகலன்கள், உணவு முறைகள், சடங்குகள் போன்ற மக்களின் புறவாழ்வு செய்திகளையும் மன்னர்களின் ஆளுமை, ஆட்சித் திறன், கொடைச்சிறப்பு, குடிமக்களை வருத்தாது ஆட்சி நடத்திய தன்மை ஆகிய வரலாற்றுக் கூறுகளை விளக்கியுரைப்பதே சங்கப் புற இலக்கியங்கள்.

அத்தகைய புறச் செய்திகளில் மனிதனின் அன்றாட வாழ்வில் உணவுத் தேவைக்கு அடிப்படையாக அமைகின்ற நீர் குறித்தான செய்திகளைச் சங்க இலக்கியங்களின் வழி புற வாழ்வில் மக்கள் நீரினைப் பயன்படுத்திய பாங்கு, நீரோடு அவர்களுக்கு இருந்த வாழ்வியல் தொடர்பு, நீர்வளத்தைப் பெருகச் செய்யப் புலவர்கள் மன்னனுக்கு அறிவுறுத்திய நிலை, மன்னர்களும் வளமான ஆட்சியை அமைப்பதற்கு நீர்நிலைகள் எந்த அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது, என்பதையெல்லாம் புறவாழ்வில் நீரியல் சிந்தனைகள் என்னும் தலைப்பின்கீழ் இவ்வியல் ஆராய இருக்கிறது.

தமிழர்தம் புறவாழ்வில் நீர் ஊடாடிய நிலை குறித்தும் இவ்வியலானது மூன்று உட்தலைப்புகளின்கீழ் ஆராயப்படுகின்றது.

1. **பண்பாட்டு நிலைகளில் நீர் பெறுமிடம்**
2. **சங்ககால மக்களின் நீர்ப் பயன்பாடு**
3. **அரசர்களின் வாழ்வில் நீரின் ஆளுமை**

**1.பண்பாட்டு நிலைகளில் நீர் பெறுமிடம்:**

இயற்கையின் உன்னதப் படைப்பாகத் திகழ்பவன் மனிதனே ஆவான். அத்தகைய மனிதன் தனக்கே உரிய சிறப்புப் பண்புகளால், பிற விலங்கினங்களிடமிருந்து வேறுபடுகின்றான். அவ்வேறுபாட்டை உருவாக்குவது மனிதனின் மனமே ஆகும். சமுதாய விலங்காகத் திகழும் மனிதன் மற்ற மனிதர்களோடு கூடி வாழும்போது தன்னலத்தை மறந்து பொதுநலத்தை நாடி காக்க வேண்டியவனாக விளங்குகின்றான். அதற்குக் கீழ்க்கண்ட சிறப்புப் பண்புகள் தேவைப்படுகின்றன. அத்தகைய பண்புகள் குறித்து முனைவர் தக்ஷிணாமூர்த்தி அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

***அன்பு, அருள், வாய்மை, தூய்மை, ஒப்புரவு , கண்ணோட்டம், ஈகை, நாணம் முதலிய பண்புகள் அனைத்தும் மனிதன் பிறரோடு கொள்ளும் உறவினுக்கு அடிப்படையானவைகளேயாம் என்று வகைப்படுத்துகின்றார்[1].***

இத்தகைய உறவு தன்னுடைய சிறு சமூக எல்லைக்கோட்டைக் கடந்து செல்கிறதோ அதுவே உலக உறவாக மலர்கின்றது. மனிதகுலத்தின் மேம்பட்ட பண்பாக அமைகின்றது. மேற்கூறப்பட்ட பண்புகளில் யாவும் ஒருநாட்டிற்கோ

மொழியினருக்கோ, சமயப் பிரிவினருக்கோ உரியன அல்ல. மனித இனம் முழுவதற்கும் உரியனவாகும் என்பதை மேற்கண்ட கூற்றின் வழி அறியமுடிகின்றது. பண்பாடு என்னும் சொல்லின் பொருள் குறித்து பின்வருமாறு குறிப்பிடப்படுகின்றது.

*ஆங்கிலத்தில் Culture என்று சுட்டுவதற்கு நேராகவே 'பண்பாடு' என்பது ஆளப்படுகின்றது. இச்சொல்லை இப்பொருளில் முதன்முதலில் ஆண்ட பெருமை அறிஞர் டி.கே. சிதம்பரநாத முதலியாருக்கே உரியது என்பர். பண்படு என்னும் சொல்லிலிருந்து அமைத்துக்கொள்ளப்பட்டது இச்சொல்லாகும்*[2] என்று பண்பாடு என்னும் சொல் குறித்து விளக்கமளிக்கின்றார் ஆ. தஷிணாமூர்த்தி அவர்கள். மனித வாழ்வின் மாண்புக்குரிய வாழ்வியல் களஞ்சியமாகத் திகழும் சங்க இலக்கியங்கள் அக ஒழுக்கம், புற ஒழுக்கம் என்ற இருவேறு நிலைகளில் மனித உறவுகளைப் பேசுகின்றன. சங்க இலக்கிய அகப்பாடல்கள் காதல் உறவை மையப்படுத்தி விளக்க, புறப்பாடல்கள் மனிதனின் புறவாழ்வுச் செய்திகளான நாகரிகம், பண்பாடு என்ற ஒழுக்கத்தை மையப்படுத்தி விளக்குகின்றது எனலாம். அத்தகைய பண்பாட்டுச் சூழல்களில் நீர்பெறுமிடமானது விருந்தோம்பல் நிலைகளிலும் இறைசார்ந்த நம்பிக்கைகளிலும் மற்றும் தங்கள் புறவாழ்வின் எல்லா இடங்களிலும் நீரின் பங்களிப்பு என்பது மிக முக்கியத் தேவையாக அமைகின்றது.

### 1.1 தமிழர், பண்பாடு

நாகரீகம் என்பது நமது திருந்திய வாழ்க்கை. பண்பாடு என்பது ஒழுக்கம் சார்ந்த வாழ்க்கை முறை. ஒரு இனத்தின் வரலாறு என்பது திருந்திய வாழ்வியல்

முறைகளில் பண்பாட்டில் கூறப்பெறுதலோடு இறைநம்பிக்கை, செய்தொழில்கள் பேசும்மொழி, உண்ணும் உணவு, கலைகள் ஆகிய அனைத்தும் பண்பாட்டின் பாற்படும்.

பண்பாடு குறித்து சோ. லட்சுமிதரன் அவர்கள் குறிப்பிடுகையில், *பண்பாடு என்பது மக்களுடைய சிந்தனை, சொல், செயல், கருவிகள் ஆகிய அனைத்தின் முழுமையாகவும், இயற்கையாகப் பிறவியில் பெறுவதல்ல; எண்ணித் துணிந்து ஏற்றுக் கொள்வது; மீண்டும் மீண்டும் செய்து பதமாகியது* [3] என்கிறார் .

*நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை; அது எல்லா பொருள்களையும் தமக்கே பயன்படுத்துவது; பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம்; அது எல்லா பொருள்களையும் தமக்கும், பிறருக்கும் பயன்படுத்துவது*[4] என்று பண்பாடு, நாகரிகம் குறித்து ஞா. தேவநேயன் விளக்கம் அளிக்கின்றார்.

தமிழர் பண்பாட்டின் முக்கியக் கூறுகளாக - காதல், வீரம், கொடை, தெய்வநம்பிக்கை, விருந்தோம்பல் இவற்றைக் குறித்தும் நம் முன்னோர்கள் கூறிச் சென்றுள்ளனர். தமிழர் பண்பாடு உலகமே வியந்து பார்க்கக்கூடிய பண்பட்ட நெறிமுறைகளையும் விழுமியங்களையும் கொண்டது. வாழும் முறைதான் பண்பாடு. இப்படித்தான் வாழவேண்டும் என்ற வரன்முறைக்கு உட்பட்டது நம் தமிழர் பண்பாடு எனலாம்.

**விருந்தோம்பல்**

சங்க காலத்தில் வாழ்ந்த மக்களிடையே காணப்பட்ட பெரிதும் போற்றி வளர்த்த அறமாகக் கருதப்படுவது விருந்தோம்பல் பண்பாகும். தமிழரின் வாழ்வியலுக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் பெண்ணின் இலக்கணத்தைப் பற்றிக் கூறுகையில் விருந்தோம்பல் பண்பாட்டையும் இணைத்தே கூறுகின்றார். மனிதகுல வாழ்வியல் அறமாகப் போற்றப்படும் திருக்குறளில் விருந்தோம்பல் என்னும் தனி அதிகாரத்தையே படைத்தளித்துள்ளார் திருவள்ளுவர்.

*இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி*

*வேளாண்மை செய்தற் பொருட்டு*[5]

வீட்டில் இருந்து பொருள்களைக் காத்து இல்வாழ்க்கை நடத்துவதெல்லாம் விருந்தினரைப் போற்றி உதவி செய்யும்பொருட்டே என்று விருந்தோம்பலின் பண்பினைக் குறிப்பிடுகின்றார்.

இதனால் சங்ககாலத்தில் விருந்தோம்பல் பண்பிற்கு வழங்கியுள்ள முக்கியத்துவத்தினை உணரமுடிகின்றது. சங்கப் புலவர்களும் விருந்தோம்பலை வலியுறுத்தி தம் பாக்களில் மிகுதியான இடங்களில் சுட்டியுள்ளனர்.

எயிற்றியானவள் விருந்தினரை உபசரித்த விதத்தினைக் குறித்துத் கூத்தர்கள் கூறுகையில்,

*குறும் காழ் உலக்கை ஓச்சி நெடும் கிணற்று*

*வல் ஊற்று உவரி தோண்டி தொல்லை*

*முரவு வாய் குழிசி முரி அடுப்பு ஏற்றி*

*வாராது அட்ட வாடூன் புழுக்கல்*[6]

மிக அகன்ற ஆழமானக் கிணற்றில் இருந்து தோண்டி எடுக்கப்பெற்ற முகந்த ஆற்று நீரில் எயிற்றி வாராது அட்டவாடும் புழுக்களை (பிரியாணியை) இளையில் விருந்தினருக்கு உபசரித்தாள் என்று குறிப்பிடுவதன்வழி சமைப்பதற்குக்கூட எத்தகைய நீரினைப் பயன்படுத்திச் சமைத்தாள் என்பதைப் புலவர் குறிப்பிடுவதை வழி விருந்தோம்பல் பண்பில் நீர் பெறுமிடம் குறித்து அறியமுடிகின்றது.

குளத்தில் மீன் பிடித்து வாழ்பவர்களைக் கொடுமுடி வலைஞர் என்று அழைப்பர். இவர்கள் தம் சுற்றத்தார் ஆகிய இளைஞர்களும் முதியவர்களும் ஒன்றுகூடி மீன் பிடிக்கக் குளக்கரைக்குச் செல்வர். இதனைப் பின்வரும் பாடல் காட்சிப்படுத்துகின்றது.

*கொடுங் கால் புன்னைக் கோடு துமித்து இயற்றிய*
*பைங் காய் தூங்கும் பாய் மணல் பந்தர்,*
*இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி,*
*புலவு நுனைப் பகழியும் சிலையும் மான,*
*செவ் வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்*
*மை இருங் குட்டத்து மகவொடு வழங்கி,*
*கோடை நீடினும் குறைபடல் அறியாத்*
*தோள் தாழ் குளத்த கோடு காத்திருக்கும்*
*கொடு முடி வலைஞர் குடி வயின் சேப்பின்*[7]

தாமரை மலர் வேரோடி கிடக்கும் அக்குளத்தில் தனித்தனியாக மீனைப் பிடிக்காமல் ஒன்றாகவே கூடி மீனைப் பிடிப்பதற்காகக் காத்திருப்பார்கள். அங்கு சென்றால் சுவையான விருந்து உணவினைப் பெறலாம் என்ற செய்தியை மேற்கண்ட பாடல் சுட்டுகின்றது.

**இறை நம்பிக்கையில் நீர்**

சங்ககாலத் தமிழர் மனித வாழ்விற்கு அச்சாணியாக விளங்கும் நீர்நிலைகளைத் தெய்வமாகக் கருதியும் புண்ணியத் தீர்த்தமாக எண்ணியும் வழிபட்டு வந்துள்ளனர். அத்தகைய நீர்நிலைகளில் சடங்குகளும் வழிபாடுகளும் நிகழ்த்தியுள்ளனர்; என்பதனை, சங்கப்பாடல் வழியே உணரமுடிகின்றது.

ஆதித்தமிழர் வாழ்ந்த ஆரம்ப காலங்களில் மலைகளிலும் காடுகளிலும் சமவெளிகளிலும் கூடி வாழ்ந்த காலகட்டத்தில் இயற்கையின் அதீத ஆற்றலை உணர்ந்து அச்சமுற்று அவ்விடங்களில் இறைவன் இருப்பதாக எண்ணி வழிபடலாயினர். அத்தகைய கடவுள்கள் நீர்த் துறைகளில் வாழ்ந்து வருவதாக நம்பினர் என்பதனை,

***உண்டுறை யணங்கியவள்***[8]

***ஊற்று***[9]

***அணங்குடை முந் நீர்***[10]

என்ற பாடல் வரிகளால் அறிய முடிகின்றது.

முல்லைநில இளைஞர்கள் ஏறுதழுவுகின்ற நிலையில் நீர்த்துறைகளிலும் ஆல மரங்களின் கீழும், பழமை வாய்ந்த வலிமைமிக்க மரங்களின் கீழும், உறைவதாக எண்ணி முறையாக ஒன்றுபட்டு வழிபட்டு பின் ஏறு தழுவும் தொழுவத்தில் புகுந்தனர் என்பதை,

*துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்*

*முறையுளி பராஅய், பாய்ந்தனர், தொழூஉ* [11]

என்னும் பாடல் வரிகளால் அறிய முடிகின்றது. மேலும் வைகை ஆற்றில் நீராடி நீர்த்துறையில் வழிபட்டுப் போற்றி வாழ்ந்தவர்கள் சங்கத்தமிழர்கள் என்பதைப் பரிபாடல் கூறுகின்றது. வைகை ஆற்றினை இறைவனாக எண்ணி வழிபட்ட செய்தியினைப் பின்வரும் பாடல் பதிவு செய்கின்றது.

***நத்தொடு, நள்ளி, நடை இறவு, வய வாளை,***

***வித்தி அலையில், 'விளைக! பொலிக'!*** [12]

என்னும் பாடல் வரியில் நாட்டில் விளைச்சல் பெருகி உலகம் வாழவேண்டும் என்று கருதி மக்கள் வைகை ஆற்றில் வருகின்ற புதுநீரில் பொன்னால் செய்த நத்தை, நண்டு, இறால், மீன் வலை மீன் ஆகியவற்றை காணிக்கை பொருள்களாக நீரில் இட்டு வழிபட்டனர் என்ற செய்தியை மேற்குறிப்பிட்ட பாடல் மூலம் அறிய முடிகின்றது. அதுமட்டுமின்றி வைகை ஆற்றுக்கு வரும் புதிய நீரினை வரவேற்று வணங்கியதனை நல்லந்துவனார்,

***புகை, பூ, அவி ஆராதனை, அழல், பல ஏந்தி*** [13]

மதுரை மாநகரை நோக்கி வைகைக்கு வரும் ஆற்று நீரினை மக்கள் மலர் தீபாராதனை காட்டி வழிபட்டதாக மேற்குறிப்பிட்ட பாடல் சுட்டுகின்றது.

இவ்வழக்கம் தற்காலக் கிராமப்புறங்களில் இன்றும் ஏரி, குளங்களிலும் உள்ள தெய்வங்களை வழிபடுகின்ற வழக்கமானது வழக்கத்திலிருந்து வருவதைக் காணலாம். இத்தகைய நம்பிக்கை நம் சங்ககாலத் தமிழரிடமிருந்து இன்றளவும் தொன்றுதொட்டு வழங்கி வரக்கூடிய நம்பிக்கை சார்ந்த நிகழ்வாகக் காணமுடிகிறது.

**மழை வேண்டி விழா எடுத்தல்**

மழை பொழிவிற்கு உரிய பருவகாலத்தில் பொழியாது, பொய்ப்பின் மக்கள் அனைவரும் ஒன்றுகூடி மழைக் கடவுளை வேண்டுவதும், மிகுதியாகப் பொழிந்தால் அம்மழையை நிறுத்த வேண்டியும், இறைவனை வேண்டுவதும், அக்காலத்தில் மக்களிடையே வழங்கி வந்துள்ள நம்பிக்கை சார்ந்த ஒன்றாகும்.

*மலைவான் கொள்க என உயர் பலிதூஉய்*
*மாரிஆன்று மழைமேக்கு உயர்க எனக்*
*கடவுட் பேணிய குறவர் மாக்கள்*
*பெயல் கண்மாறிய உவகையர் சாரல்*
*புனத்தினை அயிலும் நாட*[14]

மழை இல்லாக் காலத்தில் மழை வந்து சூழ வேண்டும் என்று வேண்டி, பலியிட்டு கடவுளைக் குறவர்கள் வழிபாடு செய்தமையால் மிகுதியான மழை பொழிந்தது என்று கூறுவதனை இப்பாடல் குறிப்பிடுகின்றது.

மேலும்

*குன்றக் குறவன் ஆர்ப்பின், எழிலி*

*நுண் பல் அழி துளி பொழியும் நாட!*[15]

மிகுதியான மழை பெய்தமையால் அதனை நிறுத்தவேண்டி மக்கள் கடவுளை வேண்டி இடமாறி பொழிய வேண்டும் என்றும், வானம் நோக்கி ஆரவாரம் செய்ததால் மேகமானது மழையைத் தரும் என்றும் நம்பினர், சங்ககாலத் தமிழர் என்பதனை, மேற்சுட்டிய பாடல் வழி உணரமுடிகின்றது.

மேற்குறிப்பிட்ட பாடல் செய்திகளின் வழியே சங்கத்தமிழர்கள் நீர்நிலைகளைக் கடவுளாகவும் இறைவன் உறையும் இடமாகவும் நம்பி வந்ததனையும் அந்நீர் நிலைகளில் சடங்கு வழிபாடுகள் நிகழ்த்தியுள்ளமையையும் அறிய முடிகின்றது.

**புனலில் மகிழ்ந்து விளையாடல்**

புனலாடுதல் என்ற சொல் இக்காலத்தில் நீராடுதல், குளித்தல், தலை முழுகுதல் போன்ற சொற்களை மிகுதியாகப் பயன்படுத்துவதைக் காணமுடிகிறது. சங்ககால மகளிர் தங்களது கூந்தலினைப் பல வண்ணமிக்க மலர்களாலும் முடிபுகளலும் ஒப்பனை செய்து கொண்டனர். இத்தகைய ஒப்பனை நிகழ்விற்கு முன்பாகத் தூய நீரினால் நீராடிய பின்னே தங்களைஅழகுப்படுத்திக் கொண்டதாக சங்க இலக்கிங்கள் கூறுகின்றன.

அவ்வகையில் அகப்புணர்ச்சிக்கும் புறப்புணர்ச்சியாகிய மெய் தூய்மைக்கும் அடிப்படையாக அமைவது உடல் தூய்மையாகும். அதனால்தான் தூய்மையான நீரிலே நீராடுவது என்பது இன்றளவும் இன்றியமையாத நிகழ்வாகக்

கருதப்படுகின்றது. தங்களது உடம்பினைத் தூய்மைப்படுத்திக் கொள்வதில் எத்தனை ஈடுபாடு கொண்டனரோ, அதுபோலவே கூந்தலின் தூய்மைக்கும் முக்கியத்துவம் தந்துள்ளனர்.

தொல்காப்பியர் கூறும் உவகைக்குரிய நிலைகளன்கள் நான்கினுள் புனல் விளையாட்டு ஒன்றும் என்று குறிப்பிடுகிறார்.

*செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்*
*றல்லல் நீத்த உவகை நான்கே* [16]

என்னும் நூற்பாவில் குறிப்பிடுவதைக் காண முடிகின்றது,

நீரானது உடல் வெப்பத்தைத் தணிக்கவும் சுத்தம் செய்யவும் உதவுகிறது. அத்தகைய நீரினை உடலின் அகத்திற்கும் புறத்திற்கும் பயன்தரக்கூடியது. மேலும் உடலின் தூய்மை குறித்து வள்ளுவர் கூறுவதனை,

*புறந்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை*
*வாய்மையால் காணப் படும்*[17]

என்னும் குறட்பாவழி உடல்தூய்மை நீரினாலும் உள்ளத் தூய்மை உண்மையாலும் காணப்படும் என்கின்றது வள்ளுவரின் குறள் கருத்து.

சங்க இலக்கியங்களில் நீராடுதலுக்குரிய காலம் கூறப்பட்டுள்ளது. வைகறையில் நீர்நிலைகளுக்குச் சென்று நீராடுதல் உடலுக்கும் மனதிற்கும் மிகுந்த சிறப்பினைத் தரும் என்றும் சங்ககால மகளிர் தை மாதத்தில் விடியற் காலையில் கூட்டமாகச் சென்று ஆற்றில் நீராடி விளையாடியதை வழக்கமாக இருந்ததை,

*நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்*

*தை இத்தண் கயம்போல,*

*பலர் படிந்து உண்ணும்*[18]

*பெரும் புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து,*[19]

போன்ற பாடல் வரிகள் சுட்டுகின்றன. தன்பொருணை என்னும் ஆறு பாய்கின்ற வஞ்சி மாநகரில் மகளிர் பாவைக்கூத்து விளையாடியதைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

*அரி மயிர்த் திரள் முன்கை,*

*வால் இழை, மட மங்கையர்*

*வரி மணல் புனை பாவைக்குக்*

*குலவுச் சினைப் பூக் கொய்து,*

*தண் பொருநைப் புனல் பாயும்,*

*விண் பொரு புகழ், விறல் வஞ்சி,*

*பாடல் சான்ற விறல் வேந்தனும்மே,*[20]

வானளாவிய புகழையும் வெற்றியையும் கொண்ட வஞ்சி மாநகரத்தில் பொருணை ஆற்று மணலில் மகளிர் பாவை செய்தும் பூப்பறித்து வந்தும் பாவைக்குச் சூட்டி மகளிர் விளையாடினர் என்பதை மேற்குறிப்பிட்ட பாடல் சுட்டுகின்றது.

காவிரியாற்றில் மகளிர் புனலாடி மகிழ்ந்து விளையாடியதைப் பட்டினப்பாலை எனும் நூல் பின்வருமாறு காட்சிப்படுத்துகிறது .

*கருவி வானங் கடற்கோண் மறப்பவும்*

*பெருவற னாகிய பண்பில் காலையு*

*நறையு நரந்தமு மகிலு மாரமுந்*

*துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி*

*நுரைத்தலைக் குறைப்புனல் வரைப்பகம் புகுதொறும் . . .*

*புனலாடு மகளிர் கதுமெனக் குடையக்*[21]

வறட்சி எய்திய காலத்தில் காவிரி ஆற்றில் வெள்ளம் வரும் அதோடு அகில், ஆரம், நரந்தம் முதலிய மரங்களையும் சுமந்துகொண்டு வரும், அத்தகைய காவிரி துறைகொண்ட இடங்களிலெல்லாம் நீரினை இட்டுச்செல்லும்; நுரை பொங்கும் ஓசையுடைய காவிரியாற்றில் மகளிரது புனலாட்டும் நடைபெறும் என்பதை மேற்கண்ட பாடல் சுட்டுகின்றது.

*அரிமதர் மழைக்கண், அம்மா அரிவை*

*நெய்யோடு துறந்தமை யிருங்கூந்தல்* [22]

என்னும் பாடல் வரிகளில் மகளிர் தங்கள் கூந்தலில் தடவியுள்ள நெய் எண்ணை நீங்கும்படி மாசற நீராடியதாகவும், அதன் பின்னர் கூந்தலில் மணம்மிக்க மலர்கள் அணிந்து கொண்டதாகவும் குறிப்பிடுகின்றது.

கூந்தலின் எண்ணைய் பிசுபிசுப்பிற்கு அழுக்கு நீக்குவதற்காக அரைப்புப்பொடி களிமண் மற்றும் நறுமணப் பொருட்களைச் சேர்த்து நீராடிய நிலையினை குறுந்தொகை பாடல் விளக்குகின்றன.

*துன்னல்போ கின்றாற் பொழிலே யாமெம்*

*கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்* [23]

மேற்கூறிய பாடலுக்கு உரை எழுதிய உ.வே.சா. இருமண் என்பதற்கு எருமண் என்ற தன்மையில் பொருள் கூறுகின்றார் .

மகளிர் தங்களது கூந்தலின் அழுக்கு பிசுபிசுப்பினை நீக்குவதற்குத் தலையில் **எருமண்** என்கின்ற களிமண்ணைப் பிசைந்து நீராடியதாகத் தமது உரையில் குறிப்பிடுகின்றார்.

ஆற்றில் புனலாடி விளையாடுகின்றபொழுது மணிச்சிரல் என்னும் மீன்கொத்திப் பறவை தங்க நகைகளைத் தங்கமீன் என்று நினைத்துத் தனக்கான இரை கிடைத்துவிட்டது என்று எண்ணி அதன்மீது பாயும். அதனைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*வண்ட லாயமொ டுண்டுறைத் தலைஇப்*
*புனலாடு மகளி ரிட்ட பொலங்குழை*
*யிரைதேர் மணிச்சிர லிரைசெத் தெறிந்தெனப்*
*புள்ளார் பெண்ணைப் புலம்புமடற் செல்லாது*
*கேள்வி யந்தண ரருங்கட னிறுத்த . .*[24]

மகளிர் தங்கள் தோழியர்களோடு ஆற்றில் புனலாடி விளையாடுகின்ற பொழுது மகளிர் நீருக்குள் மூழ்கி விளையாடுவர். அவ்வாறு விளையாடும் பொழுது தங்களது தங்க நகைகளை ஆற்றின் கரைகளில் கழட்டி வைத்துவிட்டு மூழ்கி விளையாடுவர். அவர்கள் நீருக்குள் மூழ்கி விளையாடுகின்ற சமயத்தில் மணிச்சிரல் என்னும் மீன்கொத்தி பறவை தங்கநகைகளை தங்கமீன் என்று நினைத்துத் தனக்கான இரை

கிடைத்துவிட்டது என்று எண்ணி அதன்மீது பாயும். இதன் வழி அக்காலத்தில் மகளிர் அச்சம் கொள்ளாது ஆற்று துறைகளில் புனல் ஆடி மகிழ்ந்தனை அறியமுடிகின்றது.

**திருமண சடங்குகளில் நீர்**

பழந்தமிழர்களின் திருமணமுறை சடங்கில் நீர் முதன்மை பெற்றிருந்ததனை அகநானூற்று பாடல் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*உழுந்து தலைப்பெய்த கொழுங் களி மிதவை*

*பெருஞ் சோற்று அமலை நிற்ப, நிரை கால்*

*தண் பெரும் பந்தர்த் தரு மணல் ஞெமிரி*

*மனை விளக்குறுத்து, மாலை தொடரி,*

*கனை இருள் அகன்ற கவின்பெறுகாலை;*

*கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்*

*கேடு இல் விழுப் புகழ் நாள் தலைவந்தென,*

*உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர்,*

*பொது செய் கம்பலை முது செம் பெண்டிர்*

*முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தர,*[25]

உளுத்தம் பருப்புடன் கூட்டு சமைத்த குறைவான பொங்கலை விருந்தினருக்குப் பரிமாறினர். இடைவிடாது மக்கள் உணவு உண்டனர்; வரிசை வரிசையாக கால்களை நிறுத்தி அமைக்கப்பட்ட பந்தலில் மணலைப் பரப்பியிருந்தனர்; விளக்குகள் ஏற்றப்பட்டன; மாலைகள் தொங்கிக் கொண்டிருந்தன; தீ கோள்கள் நீங்க வளைந்த

வெண்மையான திங்களைத் தீமையற்ற சிறந்த புகழையுடைய உரோகிணி விண்மீன் வந்து கூடும் நன்னாளில் மிக்க இருள் நீங்கப்பெற்று பொழுது புலர்ந்தது.

மங்கள மகளிர் தம் தலையில் நீர் நிரம்பிய குடங்களைச் சுமந்து வந்தனர்; மக்களை ஈன்றெடுத்த மகளிர் நால்வர் கற்பிலிருந்து வழுவாது பலவற்றிலும் உதவியாய் இருந்து நின்னை மனைவியாகப் பெற்ற நீ கணவனைப் பேணிக்காக்கும் பெரும் சிறப்பினை உடையை ஆகுக என்று கூறி வாழ்த்தினார்; நீரோடு கலந்த குளிர்ந்த இதழ்களை உடைய மலர்களை நெல்லோடு கலந்து அவர்களுடைய அடர்ந்த கரிய கூந்தலில் தூவினர். இவ்வாறாக வதுமை மணம் முடிந்தது. மற்றொரு பாடலில்

*படு மண முழவொடு பரூஉப் பணை இமிழ,*

*வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்று,*

*பூக்கணும் இமையார் நோக்குபு மறைய,*[26]

திங்கள் உரோகிணியைக் கூடும் முழுநிலா நாளாக இருந்தது. மணப்பந்தல் போட்ட பின்னர் பெரிய அளவினதாகிய முரசு முழக்கத்துடன் திருமணச் சடங்கு நடைபெற்றது. வந்திருந்த மூத்தவர்கள் கண் இமைக்காமல் மணமக்களைப் பார்த்த பின் விடைபெற்றுச் சென்றனர்.

அகப்புற உறவுகள் குறித்து சி. பாலசுப்பிரமணியம் குறிப்பிடுகையில், ***அக வாழ்வு வீட்டு இன்பத்திற்கும் புறவாழ்வு நாட்டுச் சிறப்புக்கும் உரமூட்டின***[27] என்று குறிப்பிடுகின்றார்.

நீர் என்பது உயர்ந்த வளர்ச்சி நிலையை எட்டும் தன்மை கொண்டதாகவும், அத்தகைய நீருடன் நெல்லும் சேர்ந்து துளிர் விடுதல்போல மணமக்கள் பிள்ளைகளைப் பெற்று சிறப்புடன் வாழ வேண்டும் என்ற நோக்கில் அக்கால மகளிர் வளமையை உணர்த்தும் சடங்காக நிகழ்த்தியதனை அறியமுடிகின்றது.

மனித வாழ்வின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து நிகழ்வுகளிலும் இன்றியமையா நிலையைக் கொண்டதாக நீர் விளங்குகின்றது. மேலும் தமிழ்ப் பண்பாட்டின் முக்கிய அடையாளமாக நீர் திகழ்ந்துள்ளதை சங்கப்பாடல்வழி அறியமுடிகின்றது. அத்தகைய நம்பிக்கை இன்றளவும் நம் மக்களிடையே வழங்கப்பட்டு வருவதனை காணமுடிகின்றது.

***நீர் நிலைகளால் சிறப்புறும் நகரங்கள்***

உறையூரில் மக்கள் பயன்படுத்திக் கொள்வதற்கு ஏற்ற உண்ணத்தக்க நல்ல நீரைக் கொண்ட பொய்கை இருந்தது. அது வண்ண ஓவியம்போலக் காட்சியளிப்பதாக இருந்ததனைப் பின்வரும் சிறுபாணாற்றுப்படை பாடல் கூறுகின்றது.

> ***நறுநீர்ப் பொய்கை யடைகரை நிவந்த***
> ***துறுநீர்க் கடம்பின் றுணையார் கோதை***
> ***ஓவத் தன்ன வுண்டுறை மருங்கிற்***
> ***கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலின்*** [28]

உறையூரின் பொய்கையில் குடிமக்கள் பருகுவதற்கு ஏற்ற அளவில் தண்ணீர் இருந்தது என்றும் அப்பொய்கையின் கரையில் உள்ள கடம்பமரத்தின் மலர்கள்

மாலைகள் தொங்குவதுபோல தொங்கிப் பூத்து விழும் காட்சி ஒரு வண்ண ஓவியம் போல இருந்தது எனப் புலவர் கூறுகின்றார்.

மற்றொரு பாடலில் நல்லியக்கோடனின் ஆம்பூர் ஆமூர் நகரின் சிறப்பினைக் கூறுகையில் ஆம்பூர் என்னும் ஊர் மருத நிலவளம் நீர்வளம் மிக்க ஊராகவும் அகழிகள் கொண்டதாகவும் இருந்துள்ளது என்பதனைப் பின்வரும் ஆமூர் வளமும், உழவர் விருந்தும் பாடல் குறிப்பிடுகின்றது.

*நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினைக்*
*குறுங்காற் காஞ்சிக் கொம்ப ரேறி*
*நிலையருங் குட்ட நோக்கி நெடிதிருந்து*
*புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்*[29]

மருத நிலவளமிக்க ஆம்பூரில் ஆழமான வைகையின் கரையில் உயரம் குறைந்த காஞ்சி மரத்தில் ஒரு பக்கமாக சாய்ந்து இருந்த மரக்கிளையில் உட்கார்ந்து இருந்த சிரல் என்னும் மீன்கொத்திப் பறவை பொய்கையில் பாய்ந்தபோது அதன் நகம் கீரி அருகில் இருந்த தாமரை இலையைக் கிழித்தது. பின் மீனைக் கொத்திக்கொண்டு அங்கே மலர்ந்திருந்த தாமரை மலரின் மீது அமர்ந்திருந்தது.

மேற்கூறிய பாடல்காட்சி எவ்வாறு இருந்தது என்று புலவர் குறிப்பிடுகையில் நிலவைப்போல் மலர்ந்திருந்த தாமரையை அது மறைத்தது போன்று இருந்தது என்றும், இந்நிகழ்வு கிரகண நாளில் நிலவினைப் பாம்பு மறைத்துவிட்டு விலகுவது

போன்று இருந்தது என்று கூறி இப்படிப்பட்ட வளமான மருதநில வளமையைக் கொண்ட ஊர்தான் ஆம்பூர் இருந்ததாக இப்பாடல் செய்தி சுட்டுகின்றது.

மேற்கூறிய பாடல் செய்திகளின் வழி சங்ககால நகரங்கள் நீர்நிலைகளால் சிறப்புற்றிருந்தனை சங்க பாடல்களின் வாயிலாக நமக்கு தெரிய வருகின்றது.

**2. சங்ககால மக்களின் நீர் பயன்பாடு**

பண்டைய தமிழர்கள் தங்கள் அன்றாட வாழ்வியலுக்கு அடிப்படைத் தேவையாக திகழும் நீரினைப் பயன்படுவத்துவதில் மிகுந்த கவனத்துடனும் கூர்த்த மேலாண்மை திறத்துடனும் விளங்கியுள்ளனர் என்பதனை சங்கப்பாக்களின்வழி அறியமுடிகின்றது.

சங்க கால மக்கள் குடிநீருக்காகச் செம்மண் நிலத்திலுள்ள கூவல் தோண்டி நீரினை பெற்றுக் குடிப்பதற்கு பயன்படுத்திக் கொண்டனர் என்பதைப் புறநானூற்றுப் பாடல் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*பூவற் படுவிற் கூவல் தொடீஇய*
*செங்கண் சின்னீர் பெய்த சீறில்*
*முன்றில் இருந்த முதுவாய்ச் சாடி*[30]

செம்மண் நிலத்தின் பள்ளத்தில் இருக்கும் கூவலினைத் தோண்டி செந்நிறம் உடைய நீரினைப்பெற்றனர். பின் கலங்கிய நீரையும் நன்னீராகிய மாற்றுவதற்கு கடுக்காய், தேற்றாங்கொட்டை முதலியவற்றைத் தண்ணீரிலிட்டு கலங்கல் தன்மை நீக்கியுள்ளனர் என்பதை மேற்கண்ட பாடல் கருத்தின்வழி அறியமுடிகின்றது. மேலும்

உப்புநீரையும் கிணற்று நீரையும்கூட சங்ககால மக்கள் தங்களது அன்றாட அடிப்படைத் தேவைகளுக்குப் பயன்படுத்தியதனையும் காணமுடிகின்றது.

*கல் அறுத்து இயற்றிய வல் உவர்க் கூவல்,*

*வில் ஏர் வாழ்க்கை, சீறூர் மதவலி*

*நனி நல்கூர்ந்தனன்ஆயினும், பனி மிக,*

*புல்லென் மாலைச் சிறு தீ ஞெலியும்*

*கல்லா இடையன் போல, குறிப்பின்*[31]

கல்லினை அறுத்து அமைக்கப்பட்ட கூவல் கிணற்றில் அரிதாக ஊறிய உப்பு நீரினைப் பருகி சங்ககால மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை மேற்கண்ட பாடல் செய்தி எடுத்துரைக்கின்றது.

### 2.1. நீர் வேட்கை தணித்தல்

மனிதன் உயிர்வாழ அடிப்படைத் தேவையாக இருக்கும் நீரானது வாழ்வின் முக்கிய இன்றியமையாதக் காரணியாகக் கருதப்படுகிறது. நீரற்ற இடங்களில் பாலைநில வழியில் செல்லும் ஊர்களில் எல்லாம் இடையில் நீர் வேட்கையைத் தணிக்க, எவ்வித நீர்நிலைகளுமின்றி காணப்பட்டதாகப் பின்வரும் பாடல் உணர்த்துகின்றது.

*ஊர் இல்ல, உயவு அரிய,*

*நீர் இல்ல, நீள் இடைய,*

*பார்வல் இருக்கை, கவி கண் நோக்கின்,*

*பார்வல் இருக்கை, கவி கண் நோக்கின்,*[32]

இத்தகைய பாலைநில வழியில் குடியிருப்புகளும் இல்லாத நிலைக்கு அவ்விடத்தில் நீரின்மை முக்கியக் காரணமாக இருப்பதை உணரமுடிகின்றது. எனவே மனித வாழ்விற்கு நீர் என்பது வாழிடக் காரணியாக இடம்பெறுவதால் புலவர்களும் தான் பாடிய பாடல்களில் நீர்நிலைகளின் முக்கியத்துவத்தைப் பற்றி மன்னர்களுக்குப் பாடல்கள் மூலமாக அறிவுறுத்துவதைக் காணமுடிகிறது.

நீரற்ற வறண்ட காலத்தில் சங்ககால மக்கள் நீர் வேட்கையைத் தணிப்பதற்காக, இயற்கையில் கிடைத்த பொருட்களைக்கொண்டு நீர் தாகத்தைத் தணித்துக் கொண்டுள்ள செய்தியினைச் சங்கப்பாக்கள் தெரிவிக்கின்றன. அதில் நெல்லிக் காயினை உண்டும் உகாய் மரத்தின் பட்டையை மென்று சுவைத்தும், உணவு உட்கொண்ட பின் கள்ளினைப் பருகியும் தங்களது நீர் வேட்கையை தணித்துக் கொண்டதாகச் சங்கப் பாடல் பதிவு செய்கின்றது. இதனை,

*வருநர்ப் பார்க்கும் வன்கண் ஆடவர்*
*நீர்நசை வேட்கையி னார்மென்று தணியும்* [33]

*செல் உயிர் நிறுத்த சுவைக் காய் நெல்லிப்*
*பல் காய் அம் சினை அகவும் அத்தம்*[34]

*விளர் ஊன் தின்ற வேட்கை நீங்க,*
*துகள் அற விளைந்த தோப்பி பருகி,*[35]

*அறந்தலைப் பட்ட நெல்லியம் பசுங்காய்*[36]

என்ற பாடல் வரிகள் மூலம் வாயிலாக அறியமுடிகின்றது. அது மட்டுமின்றி உயவை என்ற கொடியின் வேரினை வாயிலிட்டு மென்று தின்றால் வாயில் நீர் ஊறும் என்றும்

அக்காலத்தில் மக்கள் நீர்வேட்கையைத் தணிப்பதற்குப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர் என்பதனைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*மாறுகொள வொழுகின வூறுநீ ருயவை*[37]

மேலும் பாடல் கோடைக்காலத்தில் விலங்குகளின் நீர் வேட்கையைத் தணிப்பதற்கு யானையானது உகாய் மரத்தின் பட்டையினைக் கிழித்துத் தன் பிடியானையின் தாகத்தைத் தணித்ததாக மற்றொரு பாடல் குறிப்பிடுவதனை,

*கொல் மருப்பு ஒடியக் குத்தி, சினம் சிறந்து,*

*இன்னா வேனில் இன் துணை ஆர,*[38]

*மிசை மரம் சேர்த்திய கவை முறி யாஅத்து,*

*நார் அரை மருங்கின் நீர் வரப் பொளித்து,*

*களிறு சுவைத்திட்ட கோதுடைத் ததரல்* [39]

மேற்கண்ட சங்கப் பாடலின்வழி தமிழர்கள் நீரில்லா வறண்ட காலங்களில் உகாய் மரத்தின் பட்டைகளை மென்றும் நெல்லிக்காயினைச் சுவைத்தும் உயவைக் கொடியின் வேரினை மென்றும் தமக்கு ஏற்பட்ட தாகத்தினைத் தீர்த்துக் கொண்டதாகப் பாடல்கள் பதிவு செய்வதனை அறியமுடிகின்றது.

சங்கத் தமிழர்கள் தமக்கு ஏற்பட்ட தாகத்தினைத் தணித்துக் கொள்வதற்கு நீரை மட்டும் நம்பி இராமல் அதற்கு மாற்றாக மேற்குறிப்பிட்ட பொருள்களைப்

பயன்படுத்தி தமது நீர் வேட்கையைத் தணித்துக் கொண்ட சங்கத் தமிழர்களின் கூர்த்த அறிவு நுட்பத்திறனை அறியமுடிகின்றது.

## 2.2. சங்கத் தமிழரின் நீர் உண்துறை

பண்டைத்தமிழர் தங்கள் குடிநீர் தேவைக்காகத் தனியே நீருண்துறையை அமைத்துள்ளனர் என்பதைச் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இத்தகைய நீருண்துறையின் நீரினைத் தூய்மையாகவும் எத்தகைய இடர்ப்பாடும் ஏற்படா வண்ணம் பராமரித்தும் பாதுகாத்தும் வந்துள்ளனர். இயற்கையாக மலைகளில் இருந்தும் அருவிகளிலிருந்தும் விழுகின்ற நீரானது ஆறுகளில் பெருக்கெடுத்து ஓடிவரும் நீரில் மருத்துவ குணம் வாய்ந்த நீராகவும் அமையப்பெற்று தண்ணீர் மக்களுக்கும் பயன்பட்டது.

இவ்வாறு ஓடிவரும் நீரில் மட்டுமின்றி இயற்கை நீர்நிலைகளில் தேங்கி நிற்கும் நீரினையும் உரிய முறையில் குடிப்பதற்காகப் பாதுகாத்து பராமரித்தும் வந்துள்ளனர், சங்கத் தமிழர்கள். மேலும் செயற்கை நீர்நிலைகளான ஏரி, குளம் போன்ற நீர்நிலைகளிலும் தூய்மையான நீரினை அருந்துவதற்கு ஏற்ற அளவில் நீரினைப் பாதுகாத்து, பராமரித்து தங்கள் தண்ணீர் தேவையைப் போக்கிக்கொள்ள முயன்றுள்ளனர். அவ்வாறு நன்னீரைப் பாதுகாப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட உத்திமுறைகளைப் பின்வரும் சங்கப்பாடல் குறிப்பிடுவதனை,

***ஊருண் கேணிப் பகட்டு இலைப் பாசி***[40]

ஊர்மக்கள் பயன்படுத்தத்தக்க ஊருண் கேணி குறிப்பிடுவதை அறிய முடிகின்றது. பாசி மிகுந்து காணப்படும் கேணியில் பாசியினை நீக்கிவிட்டு அதனை நன்னீராக மாற்றிப் பருகிய நிலையினையும் மேற்கண்ட பாடல் சுட்டுகின்றது. எனவே கேணி என்பது நன்னீர் உள்ள நீர்நிலை என்பதை இதன் வழி அறியமுடிகின்றது.

பாலைநிலத்தினை கடக்கும் உமணர்கள் நீர்வீழ்ச்சியால் நீரற்ற வழியே பாறைகள் கொண்ட இடத்தில், நிலத்தினை இடித்துப் பரந்த வாயினைக்கொண்ட கிணற்றினைத் தோண்டினர். அவ்வாறு தோன்றியதன் விளைவாக ஊறிய நீரினை உமணர்கள் மட்டுமின்றி வழிச்செல்வோரின் தாகத்தினையும் தீர்ப்பதற்குப் பயன்பட்டதாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது. மேற்கோள்

*அகல் இடம் குழித்த அகல் வாய்க் கூவல்*

*ஆறு செல் வம்பலர் அசை விட ஊறும்,*[41]

குவளை மலர்களால் போர்த்தப்பட்ட அழகுமிக்க சுனையின் பளிங்கு போன்ற தெளிந்த நீரினை வழியிலேயே நடந்து வந்திருக்கக்கூடிய கூத்தர்கள் தங்கள் களைப்பினைத் தீர்த்துக்கொண்டனர் என்பதனை மலைபடுகடாம் பாடல் தெரிவிக்கின்றது.

*துகள் அறத் துணிந்த மணி மருள் தெள் நீர்,*

*குவளை அம் பைஞ் சுனை, அசைவு விடப் பருகி;*

*மிகுத்துப் பதம் கொண்ட பரூஉக் கண் பொதியினிர்,*[42]

உயர்ந்த மலைச்சாரலிலே மரங்கள் மிகுந்திருக்கக்கூடிய மலை உச்சியினின்று கொட்டுகின்ற அருவிநீரினை வழிப்போக்கர் உள்ளங்குளிர உண்டு, தம் நீர் வேட்கையைத் தணித்துக்கொண்டு பயணத்தைத் தொடர்ந்தனர் என்பதாகப் பின்வரும் புறநானூற்று பாடல் குறிப்பிடுகின்றது.

*நல்மரன் நளிய நறுந்தண் சாரல்*
*கல்மிசை அருவி தண்ணெனப் பருகி* [43]

மேற்கண்ட பாடல் செய்தியின் வழியே சங்ககாலத்தில் மக்கள் அருந்துவதற்கென்று தனிப்பட்ட நீர்நிலைகளை ஏற்படுத்தியிருந்தனர் என்றும் அத்தகைய நீர்நிலைகளை அசுத்தம் செய்யாதவாறு மக்களுக்குப் பல கட்டுப்பாடுகளும் தண்டனைகளும் விதிக்கப்பட்டிருந்தமையும் உணரமுடிகின்றது. மேலும் நீரற்ற வழியே வலிய பாறைகள் கொண்ட நிலங்களில் நீரினைப் பெறுவதற்காக குந்தாலி, உளி போன்ற கருவிகளைக்கொண்டு கிணற்றினைத் தோண்டி நீரினைப் பெற்றனர் என்பதையும் அறியமுடிகின்றது. இக்காலத்தில்கூட மக்கள் அருந்துவதற்கென்று சில இடங்களில் நீருண் துறைகள் கொண்டிருப்பதனைக் காணலாம் .

சங்ககாலத்தில் ஏற்படுத்தப்பட்ட ஊருண் கேணி என்பதே தற்காலத்தில் மருவி ஊருணி என்று வழங்கப்பட்டு வருவதைக்கொண்டு காலங்காலமாக இத்தகைய பண்பாடு என்பது நம் தமிழரிடையே இருந்து வரக்கூடிய வழக்கமாக இருப்பதை உணரமுடிகின்றது.

தூயநீரினைப் பயன்படுத்திப் பல்வேறான நீர்நிலைகளை உருவாக்கிய தமிழர்கள், நீர்நிலைகளிலிருந்து நீரினைப்பெற்று பருகுவதிலும் மிகுந்த கவனத்தை மேற்கொண்டுள்ளனர். இதனால் நன்னீரை அருந்துவதில் எத்தகைய முனைப்பு மிக்கவர்களாக விளங்கியுள்ளனர் என்பதை உணரமுடிகின்றது. மிகத்தெளிந்த நீர்ப்பரப்பினை கொண்ட கடல் நீரே இருப்பினும் தாக மிகுதியால் அந்நீரை யாரும் பருகுவதில்லை. ஆநிரைகளும் மற்ற விலங்கினங்களும் ஒன்றுகூடி கலக்கிய சேற்று நீராக இருப்பினும் அச்சேற்று நீரை விலக்கி நன்னீரினையே அருந்தியுள்ளனர் சங்ககாலத் தமிழர்கள். மிகுதியாகக் காணப்படும் கடல்நீரே ஆயினும் உவர்ப்புத் தன்மையைக் கருதி அதனை யாரும் அருந்துவதில்லை இதனை,

*தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்*
*உண்ணார் ஆகுப, நீர்வேட்டோரே;*
*ஆவும்மாவும் சென்று உணக், கலங்கிச்,*
*சேசூறாடு பட்ட சிறுமைத்து ஆயினும்,*
*உண்ணீர் மருங்கின் அதர்பல ஆகும்;*[44]

என்ற வரிகள் சுட்டுகின்றது மேற்கண்ட பாடல் கருத்தினை ஒட்டிய மற்றொரு புறநானூற்றுப் பாடலும்,

*களிறு நீறாடிய விடுநில மருங்கின்*
*வம்பப் பெரும்பெயல் வரைந்து சொரிந்து இறந்தெனக்*
*குழி கொள் சின்னீர் உண்டலின்*
*சேறு கிளைத்திட்ட கலுழ்கண் ஊறல்*
*முறையின் உண்ணும் நிறையா வாழ்க்கை* [45]

என்னும் பாடலில் யானைகள் அலைந்து திரிந்த நிலங்களில் ஏற்பட்ட குழிகளில் மழை பெய்தமையால் நீர் நிரம்பிக் காணப்பட்டது. அக்குழிகளிலுள்ள நீரினை ஆநிரைகளும் மற்ற விலங்குகளும் அருந்தி விட்டுச்சென்றமையால் வேட்டுவர் அக்குழியைத் தோண்டி, புதிய நீரினை அருந்தியதாக மேற்கண்ட பாடல் தெரிவிக்கின்றது.

மேலும் பருவநிலை காலமாற்றத்திற்கு ஏற்ப நீரினை அருந்துவதிலும் மிகுந்த கவனத்தைச் செலுத்தியுள்ளனர் சங்ககாலத் தமிழர்கள். குளிர்காலத்திலும் மழை காலங்களிலும் குளிர்ந்த நீரினை அருந்தாமல் வெந்நீரையே பருகியுள்ளனர். வெந்நீரினை ஊற்றி வைப்பதற்கென்று **சேமச்செப்பு** என்கின்ற நீர் வெதுப்பானை உபயோகப்படுத்தியுள்ளனர் என்பதனை அறியமுடிகின்றது.

*அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்*
*சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே* [46]

என்ற பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

இவ்வாறு சங்ககால மக்கள் குடிப்பதற்கு ஏற்ற தண்ணீரினை அருந்துவதில் எத்தகைய எச்சரிக்கைத் தன்மை உடையவர்களாக திகழ்ந்துள்ளனர் என்பதை உணர முடிகிறது. மேலும் இக்காலத்தில் நீரினால் ஏற்படக்கூடிய காலரா, வயிற்றுப்போக்கு போன்ற உபாதைகளிலிருந்து தங்களைத் தற்காத்துக் கொள்வதற்கு மிகுந்த விழிப்புணர்வுடன் விளங்கியுள்ளதை உணரமுடிகின்றது. மழைக்காலம், குளிர்காலம் ஆகிய காலங்களில் **சேமச்செப்பு** என்கின்ற நீர் வெதுப்பான் களத்தினைக் கொண்டு குளிர்காலங்களிலும் மழைக்காலங்களிலும் வெதுவெதுப்பான நீரையே

அருந்தியுள்ளனர். அதுவே இன்றைய காலகட்டத்தில் பிளாஸ்க் என்ற ஆங்கிலச் சொல்லால் தற்காலத்தில் வழங்கப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. எனவே கோடைக்காலம் மற்றும் குளிர்காலங்களில் உரிய பாதுகாப்பு வழிமுறைகளோடு சுகாதாரமான வாழ்வியல் சூழலில் வாழ்ந்தவர்கள் சங்ககாலத் தமிழர்கள் என்பதனை சங்க இலக்கியப் பாடல்கள் வழி அறியமுடிகின்றது.

### 2.3 நீர்க் கொள்ளும் கலன் உருவாக்கல்

நீர்நிலைகளிலுள்ள நீரினைக்கொண்டு வருவதற்கென்று மருதநில மகளிர் அழகிய வேலைப்பாடு கொண்ட குடங்களை உருவாக்கி, அதிலே நீர் சுமந்து வந்தனர் என்பதனை அகநானூற்று பாடல் தெரிவிக்கின்றது.

*தெண் கட் தேறல் மாந்தி, மகளிர்*

*நுண் செயல் அம் குடம் இரீஇ, பண்பின்*[47]

மேலும் வெப்பம் மிகுந்த கோடைக்காலத்தில் சங்ககாலத் தமிழர் புது மண்பானையில் நீரை நிரப்பிக் குளிர்ந்த நிலையில் பருகி உள்ளனர். அத்தகைய பானையில் மண்ணின் மனம் நீங்குவதற்குப் பாதிரி பூக்களை நீரினுள் போட்டுள்ளனர். இதனால் நீரின் மனம் கூடுவதோடு மண்மணம் நீங்கியதாகச் சங்கப்பாடல் குறிப்பிடுகின்றது.

சங்ககால மக்கள் நீரினை நீர்நிலையிலிருந்து கொண்டு வருவதற்கு வண்ணமிக்க வேலைப்பாடுகள் கொண்ட குடத்தினைச் செய்தமையும் அதிலே நீரினைக்கொண்டு வந்துள்ளனர் என்பதனையும் அறியமுடிகின்றது. கோடைக் காலங்களில் புது மண் பானையில் நீரிடை நிரப்பியும் அதிலே நீரின் மணத்திற்காகப்

பாதிரி பூக்களை இட்டும் பருகி உள்ளனர். குளிர்காலத்தில் தம் உடல் நடுக்கத்தினைப் போக்குவதற்கு தீ மூட்டி வெப்பப்படுத்தியுள்ளனர் என்ற செய்திகளை மேற்கண்ட பாடல் வழியே அறியமுடிகின்றது. இத்தகைய கூர்த்த அறிவினையும் கலைத் திறனையும் கொண்டவர்களாக நம் சங்ககாலத் தமிழர்கள் வாழ்ந்துள்ளனர் என்பதை உணரமுடிகின்றது.

### 2.4 நாழிகை கணக்கர்

சங்ககாலத்தில் பொழுதினைக் கண்டறிந்து கொள்வதற்கு நாழிகை கணக்கர் என்போர் அரண்மனைகளில் பணியமர்த்தப்பட்டிருந்தனர். இவர்கள் **நாழிகை வட்டில்** என்னும் கருவி கொண்டு பொழுதினைக் கணக்கிட்டனர். நாழிகை வட்டில் என்பது சிறிய களத்தினைக்கொண்டு அதிலே நீரை நிரப்பி அதனடிப்பகுதியில் நுண்ணிய சிறிய துளையினை இட்டு நீர் ஒழுகையில் நாளைக்கு ஒன்றென கோடுகளை இடுவர். இறுதியில் மொத்தமாகக் கணக்கிட்டு நாழிகையை அறிந்து கொள்வர். இதனைக் குடிநீர் கன்னல் என்றும் வழங்குவர். இவ்வழக்கம் சங்ககாலத் தமிழரிடையே இருந்து வந்துள்ளது என்பதனைச் சங்கப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

இந்நாழிகை வட்டிலினைத் திவாகர நிகண்டு, ***கண்ணல் நாழிகை வட்டில்*** என்று குறிப்பிடுகின்றது. இந்நாழிகை கணக்கர் அரண்மனைகளில் இருந்துகொண்டு மன்னனுக்குக் காலப்பொழுதினைக் கணக்கிட்டு வழங்கி வந்துள்ளனர் என்ற செய்தி நாட்டு மக்களுக்குப் பொழுதினை அறிவிப்பதற்காகவும், மன்னர்களின் போர் முதலான நிகழ்வுகளுக்குச் செல்ல உகந்த காலப்பகுதியைக் கணக்கிட்டுக்

கூறுவதற்கும் நாழிகை கணக்கர் அரண்மனைகளில் அதிகாரிகளாகப் பணியமர்த்தப்பட்டனர்.

மேகம் மறைந்த இரவுப்பொழுதுகளிலும் சூரியனைப் பார்க்க இயலாதவாறு இருண்டு மழைபொழியும் காலங்களிலும் நாழிகை கணக்கர் மக்களுக்குக் காலப் பொழுதினைத் தெரிவிப்பர். மேலும் முல்லைநில மக்கள் மலர்கள் மணம் வீசுவதனைக் கண்டு ஒருவினை அறிந்து கொண்டனர் என்பதையும் முல்லைப்பாடல் குறிப்பிடுகின்றது. மேலும் மன்னன் போர்மேற் செல்வதற்குரிய காலப்பொழுது வந்துவிட்டதாகக் குடிநீர் கன்னல் என்ற கருவிகொண்டு நாழிகை கணக்கர் தவறாது கணித்து வந்ததாக முல்லைப்பாட்டு குறிப்பிடுகின்றது.

*பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள், . .*
*தொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி,*
*"எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்! நின்*
*குறு நீர்க் கன்னல் இனைத்து" என்று இசைப்ப,* [48]

நாழிகை கணக்கர் அரசனை வாழ்த்திக் கடலால் சூழப்பட்டுள்ள உலகினை வெல்வதற்குரிய காலம் வந்தாகிவிட்டது செல்வோம் என்று கூறுவதனை மேற்கண்ட பாடல் தெரிவிக்கின்றது.

## 2.5 நிமித்தம் அறிதல்

சங்ககாலத் தமிழர்கள் இயல்பாகவே சில செயல்களைத் தொடங்குவதற்கு முன்பாக சகுனம் என்று சொல்லப்படுகின்ற நிமித்தம் பார்ப்பது என்பது அக்காலத்தில் வழங்கப்பட்டு வந்துள்ளது. இதனைப் பின்வரும் புறநானூற்று பாடல் உணர்த்துவதை,

*நெல் நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்*
*செம் முது பெண்டின் சொல்லும் நிரம்பா;*
*துடிய! பாண! பாடு வல் விறலி!* [49]

தலைவியைப் பிரிந்து போருக்குச் சென்ற தலைவனின் நிலையை அறிந்துகொள்ள முதுபெண்டிர் நெல்லோடு நீரைத்தூவி விரிச்சி கேட்டதாகக் குறிப்பிடுவதைக்கொண்டு புறவாழ்வில் நீரின் முக்கியத்துவத்தினை அறிய முடிகின்றது.

**அரசர்களின் வாழ்வில் நீரின் ஆளுமை**

சங்ககால அரசர்களைப் பற்றிய வரலாற்றினை முறையாக அறிந்து கொள்வதற்குத் தக்க சான்றுகள் ஏதுமில்லாத நிலையில், புறநானூறும் பதிற்றுப்பத்தும் போன்ற சங்க இலக்கிய நூல்களில் கூறப்பட்டுள்ள மூவேந்தர் பற்றிய செய்திகளையும் மற்ற அகப்பாடல்களில் உவமையாகத் தரப்படும் செய்திகள் வாயிலாகவும் பத்துப்பாட்டில் காணப்படும் அரசியல் கருத்துக்கள் வழியாகவும் சங்ககால மன்னர்களைப் பற்றிய வரலாற்றினை அறிந்துகொள்ள முடிகின்றது .

சங்கப் புறநூல் ஆகிய புறநானூற்றில் மன்னருக்குப் புலவர்கள் அரசியல் கோட்பாடுகளை அறிவுறுத்தியுள்ளமையை செவியறிவுஉ பொருண்மொழிக்காஞ்சி போன்ற துறைகளின் பாடல்கள் வழியே அறியமுடிகின்றது. திருவள்ளுவர் ஒரு மன்னன் எவ்வாறு ஆட்சி புரியவேண்டும் என்பதை விளக்கும் விதமாக பொருட்பாலில் அரசியல் என்னும் அதிகாரத்தைத் தன் அரசியல் அனுபவமாகத் தந்திருக்கின்றார்.

அரசனைக் கோன், வேந்தன், கொற்றவன், இறை போன்ற சிறப்புப் பெயர்களால் மக்கள் குறிப்பிட்டுள்ளனர்.

தமிழக அரசியலில் மன்னனே உயிர் நாடி. அவனின்றி நாட்டைக் கற்பனை செய்துகூடப் பார்க்க இயலாது. நாட்டினை உடலாகவும், மன்னனை உயிராகவும் அக்கால மக்கள் மதித்து போற்றியுள்ளனர் என்பதனை,

*நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;*

*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;* [50]

என்ற மோசிகீரனாரின் பாடலிலிருந்து, அரசன் அறிவு, அன்பு போன்றவற்றில் மேலோங்கியவனாகவும், அன்பில், குடிமக்களின் நலன் கருதி ஆட்சி செய்தலும் இரவலர்க்கு ஈதலும், ஆற்றலினால் பகைவர் மூலம் வரும் போரினைத் தடுத்தலும், வெற்றிபெறுதலும் போன்றன அரசனுக்குரிய கடமையாகும் என்பதை உணர முடிகின்றது.

அரசன்மீது மக்கள் வைத்துள்ள அன்பு குறித்து இளவழகனார் அவர்கள் குறிப்பிடுகையில், ***ஆட்சியைப் பொறுத்து குடிமக்களுக்கு அன்பு பெருகும். அரசன் தன் குடிமக்களைக் காக்கும் வகையில் பெரு வீரனாய் செயல்கள் செய்யும்போது அவனுக்கு ஏதாவது ஒரு துன்பம் நேர்ந்து விடுமானால், அவனிடம் அன்புள்ள குடிமக்கள் உண்ணவும் மனம் கொள்ளார்; அப்படி அவர்கள் உள்ளம் அரசனோடு பிணிப்புற்றிருக்கும்*** [51] என்ற அவரின் கூற்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

இவ்வுலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் நீரின்றி உயிர் வாழ்தல் இயலாது என்பதை உணர்ந்த சங்ககால மன்னர்கள், மனிதனின் அடிப்படை வாழ்வியலுக்கும் மற்ற உயிரினங்களுக்கும் நீரே அடிப்படை ஆதாரம் என்பதை உணர்ந்து அதனைக் கருத்தில்கொண்டு பல நீர்நிலைகளை ஏற்படுத்தி, அதன் வழியாகத் தங்களது நிலைத்த புகழை ஏற்படுத்திக் கொண்டனர்.

**மன்னன் வலிமையை நீருடன் ஒப்பிடுதல்**

மன்னனின் புகழ்மிக்க ஆட்சித்திறனை எடுத்துரைப்பதற்குச் சங்ககாலப் புலவர்கள் நீருடன் தொடர்புபடுத்திப் பாராட்டியுள்ளனர். மன்னன் என்பவன் பஞ்சபூதங்களைக் காட்டிலும் பெருமைக்குரியவனாகப் போற்றப்படுகிறான் என்பதனை,

*நீர், நிலம், தீ, வளி, விசும்போடு, ஐந்தும்*

*அளந்து கடை அறியினும், அளப்பு அருங் குரையை! நின்*[52]

பஞ்சபூதங்களாகிய நீர், நிலம், நெருப்பு, வானம், காற்று போன்றவற்றை அளந்தறிய இயலும்; ஆனால் மன்னனின் சிறப்பினை அளந்தறிய இயலாது என்று உரைப்பதன் வழியே மன்னனின் திறன் பஞ்சபூதங்களைக் காட்டிலும் வலிமை மிக்கதாகக் கருதப்படுவதை அறியமுடிகின்றது. மேலும் நீரைவிடவும் இனிமை மிக்கனவாகவும் மென்மை மிக்கவனாகவும் மன்னன் காட்சிப்படுத்தப்பட்டுள்ளான் என்று கூறுவதனை மேற்கண்ட பாடல் அடியில் மன்னன் நீருடன் உவமைப்படுத்தி இருப்பதை அறியமுடிகின்றது.

ஆறானது பெருக்கெடுத்து வரும் வழியில் சிக்கிய பொருட்களையெல்லாம் அடித்துக்கொண்டே செல்லும். அந்த ஆற்று வெள்ளம்போல பாண்டிய மன்னன் பகைவரை வென்று திரும்புகையில், அங்கு காணும் பொருட்களைக் கவர்ந்து வருகிறான் என்று கூறுவதன்வழி ஆற்றின் தன்மையையும் மன்னனின் இயல்பினையும் புலவர் ஒப்பிட்டு கூறுவதனைக் காணமுடிகின்றது.

மன்னனின் கொடைத்திறனை மழையோடு ஒப்பிடும் தன்மையினை பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*கரையே கைவண் தோன்றல்ஈகை போன்ம்என* [53]

மழையானது நல்லவர்கள் தீயவர்கள் என்று பேதம் பார்க்காது அனைவருக்கும் ஒரேவிதத்தில் நன்மை அளிப்பதைப் போன்று மன்னனும் எவ்வித வேறுபாடு பார்க்காது அனைவருக்கும் வாரி வழங்கும் கொடைப்பண்பினைக் கொண்டவன் என்று மேற்கூறிய பாடல் எடுத்துரைப்பதை அறியமுடிகின்றது .

மேற்கூறிய பாடலைப் போன்றே

*ஆர் அரண் கடந்த மாரி வண் மகிழ்த்*
*திதலை எஃகின் சேந்தன் தந்தை*
*தேம் கமழ் விரி தார் இயல் தேர் அழிசி* [54]

அழிசி என்பவன் ஜெயந்தனின் தந்தை ஆவான். அவன் மாரியைப் போன்று வாரி வழங்கும் ஈகைத்திறன் மிக்கவன் என்றும் வையை இறுகிய ஆட்சியானது பாண்டிய மன்னனின் வள்ளன்மை போன்று இருந்தது என்று உரைப்பதன் வழியே

மன்னர்களின் கொடைத்திறன் ஆறு, மழை ஆகியவற்றுடன் தொடர்புபடுத்தி பாடப்பட்டுள்ளதனை மேற்கூறிய பாடல்களின் வழியே அறியமுடிகின்றது.

பாண்டிய நெடுஞ்செழியனின் படை வீரர்களுக்குப் போர் என்றால் மிகுந்த விருப்பம் கொள்வார்கள். அத்தகைய வீரர்கள் போர் என்று வந்துவிட்டால் கல்லணை போல தடுத்து நிறுத்தி, பகைவர்கள் எதிர்த்துப் போரிட்டு வெற்றி கொள்வர் என்பதனை மதுரைக்காஞ்சி,

> *வருபுனற் கற்சிறை கடுப்ப விடையறுத்து . . .*
> *ஒன்னா ரோட்டிய செருப்புகல் மறவர்*
> *வாள்வளம் புணர்ந்தநின் தாள்வலம் வாழ்த்த . . .*[55]

மேற்குறிப்பிட்ட பாடலில் கல்லால் அடுக்கிக் கட்டப்பட்ட கல்லணை போன்று அவர்களைத் தடுத்து நிறுத்தி, திரும்ப ஓடிவிடும்படி செய்பவர்கள் பாண்டியன் நெடுஞ்செழியனின் வீரர்கள் என்று புலவர் கூறுவதனை அறியமுடிகின்றது. இதன்வழி ஆற்றின் வெள்ளத்தைத்தடுத்து நிறுத்துவதற்குக் கல்லாலான கல்லணை அக்காலத்தில் கட்டியுள்ளதனை அறியமுடிகின்றது என்றும் பல்லாயிரம் ஆண்டுகள் கடந்தும் அழியாது தமிழர்களின் கட்டடக்கலைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்து வருவது என்பது குறிப்பிடத்தக்கது.

**வளமான ஆட்சிக்கு நீரினை ஒப்பிடுதல்**

மன்னனே! நீரில்லா நீண்ட வழியைக் கடந்து வருவோரின் நிலையை உணர்ந்து அவர்களின் வறுமையைப் போக்குவதுதான் உன் வலிமை என்று புறநானூற்றுப் பாடல் கூறுவதனை,

*நிலம் பெயரினும், நின் சொல் பெயரல்;*

*பொலங் கழற் கால், புலர் சாந்தின்*

*விலங்கு அகன்ற வியல் மார்ப!*

*ஊர் இல்ல, உயவு அரிய,*

*நீர் இல்ல, நீள் இடைய,*

*பார்வல் இருக்கை, கவி கண் நோக்கின்,*

*செந் தொடை பிழையா வன்கண் ஆடவர்*

*அம்பு விட, வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை,*[56]

மன்னனே! நிலமே மாறினாலும் நீ சொன்ன சொல் தவறாது வாழவேண்டும். பொன்னாலாகிய வீரக்கழலினைக் காலில் அணிந்திருப்பவனும் சந்தனம் பூசிய மார்பினைக் கொண்டவனுமாகிய உன்னை நயந்து, இரவலர்கள் வரும் வழியானது நீரில்லாத நெடிய தொலைவு கொண்ட பகுதியாகும். அது மட்டுமின்றி இன்னும் பல கொடிய வழிகளைக் கடந்தும் வருவர்; அவ்வாறு தன்னை நாடி வருவோரை அவர்கள் வறுமையைப் போக்குவதுதான் உன் வலிமை என்று இப்பாடல் செய்தி அமைகின்றது. இதன்வழி மக்களின் வறுமையை உணர்த்துகின்ற அதேநேரத்தில் அவர்கள் வருகின்ற நீரற்ற கொடிய வழியினையும் இங்கே புலவர் சுட்டிக்காட்டி, நீரின் வேட்கையோடு வரும் அவர்களின் நிலையை உணரவேண்டும் என்று மன்னனிடம் உணர்த்துவதை இப்பாடல்வழி அறியமுடிகின்றது.

காவிரியாறு பாயும் உன் வளநாட்டினை வளப்படுத்துவதில் கவனம் செலுத்தாது சேரநாட்டினை அழிப்பதுதான் உன் வலிமையா? என்று புலவர் கூறுவதை,

*தண் புனல் பரந்த பூசல் மண் மறுத்து*

*மீனின் செறுக்கும் யாணர்ப்*

*பயன் திகழ் வைப்பின் பிறர் அகன் தலை நாடே*[57]

இரவு, பகல் பாராது பகைநாட்டினைத் தீக்கிரையாக்கி அது பற்றி எரிகின்ற தீச்சுடரால் அந்நாட்டு மக்களின் அழுகுரலைக் கேட்பவனே, இது சரியன்று என்றும் காவிரி புனல் பாயும் உன் வளநாட்டைச் செழுமைப்படுத்துவதில் கவனம் கொள்ளாது நீர் வளமிக்க சேரநாட்டை அழிக்கலாமா? என்று புலவர் மன்னனின் வலிமையை நீர் வளத்துடன் ஒப்பிட்டு அறிவுறுத்துவதனைக் காணமுடிகின்றது.

பாரிவேந்தனின் வள்ளல் தன்மையைப் புகழுமிடத்துப் பறம்பு மலையினது குன்றாத நீர் வளத்தோடு புலவர் ஒப்பிடுவதனை,

*பெய்யினும் பெய்யா தாயினும் அருவி*

*கொள்ளுழு வியன்புலத்து உழைகால் ஆக*

*மால்புடை நெடுவரைக் கோடுதொறு இழிதரும்*

*நீரினும் இனிய சாயல்*

*பாரி வேள்பால் பாடினை செலினே*[58]

பாரியின் பறம்பு நாட்டில் மழை பெய்தாலும், பெய்யாவிட்டாலும் பறம்பு மலையின் சிகரங்களிலிருந்து அருவிகள் வழியாக நீர் வந்துகொண்டே இருக்கும் என்பது மேற்கூறப்பட்ட பாடல் செய்தியாகும். இதன்வழி பறம்புமலையின் குன்றாத நீர்வளத்தை பாரியின் வள்ளல் தன்மையோடு ஒப்பிடுவதை அறியமுடிகின்றது.

முதியன் ஆதுங்கனைப் போன்று எனக்கு மிகுதியான பொருள்களை வழங்கி, என் வீட்டுப் பெண்டிரின் ஒப்பாரி ஒலியைக் கேளாமல் இருக்க, பொருள் வழங்குமாறு பொருநன் வேண்டுவதைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

*நீர் நுங்கின் கண் வலிப்ப,*

*கான வேம்பின் காய் திரங்க,*

*கயம் களியும் கோடை ஆயினும்,*

*ஏலா வெண்பொன் போருறு காலை,*

*எம்மும் உள்ளுமோ பிள்ளைஅம் பொருநன்* [59]

குளம் வற்றிக் களிமண்ணாகக் காட்சியளிக்கும் கோடைக்காலத்திற்கு முன்னதாகவே முதியன் ஆதுங்கன் சிறுபிள்ளை போன்று பொருநனாகிய புலவன் தன்னை நினைப்பானோ இல்லையோ என்று கருதி முன்னதாகவே அவர்களின் வறுமையைப் போக்கினான் என்று கூறுவதன் வழி மன்னனின் கொடைத்திறனுக்கு குளம் என்னும் நீர்நிலையைப் புலவர் எடுத்தாண்டு உள்ளதை மேற்கூறிய பாடல் வழி அறிய முடிகின்றது.

**நீருடன் மன்னனின் ஆற்றலை போற்றல்**

சங்ககாலத்தில் மன்னர்கள் பகை நாட்டவரிடமிருந்து தம்மைத் தற்காத்துக் கொள்வதற்காக ஏற்படுத்திக்கொண்ட பாதுகாப்பு அரண்களுள் ஒன்றே அகழி என்னும் நீர்நிலையாகும். மன்னனின் அரண்மனைகளுக்குப் பின்னால் அகழி என்னும் நீர்நிலை இருந்துள்ளமையை பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*கடுங் கண்ண கொல் களிற்றால்*

*காப்பு உடைய எழு முருக்கி,*

*பொன் இயல் புனை தோட்டியால்*

*முன்பு துரந்து, சமம் தாங்கவும்;*

*பார் உடைத்த குண்டு அகழி*

*நீர் அழுவ நிவப்புக் குறித்து,*

*நிமிர் பரிய மா தாங்கவும்;*

*ஆவம் சேர்ந்த புறத்தை தேர் மிசைச்*

*சாப நோன் ஞாண் வடுக் கொள வழங்கவும்*[60]

எதிரியின் கோட்டைக் கதவினைத் தடைமரத்தை உடைக்கவும், ஆண் யானையின் பொன்னாலாகிய அங்குசத்தால் வலிமையாகக் குத்திப் போரிட்டுத் தாக்கியும், நிலத்தைப் பிளந்து உருவாக்கிய அகழி என்னும் நீர்நிலையைப் போர்க்குதிரை இழுத்துப் பிடிக்கும். தேர்மீது இருந்துகொண்டு வில்லினை இழுத்து அம்பு எய்யும்படியான வலிமை மிக்க மன்னனே என்று மேற்கூறிய பாடல் செய்தி கூறுவதன் வழியே அக்காலத்தில் நிலத்தைப் பிளந்து அகழி என்னும் நீர்நிலையை அரண்மனை வீரர்களுக்கு உட்புறப் பாதுகாப்புக்காக அமைக்கப்பட்டிருந்தது என்றும் மன்னனின் வலிமையைப் போன்று அமையப்பெற்றிருந்தது என்பதை மேற்கூறிய பாடல் சுட்டுவதன் அறியமுடிகின்றது.

மன்னனே! உன் நாட்டில் ஆற்றுநீர் மோதலின்றி பிற மோதல்கள் இல்லாதவாறு களைந்தெறிய வேண்டும் என்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய

கிள்ளிவளவனைப் புலவர் இடைக்காடனார் வேண்டுவதனைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*ஆனா ஈகை, அடு போர், அண்ணல்! நின்*
*யானையும் மலையின் தோன்றும்; பெரும! நின்*
*தானையும் கடல் என முழங்கும்; கூர் நுனை*
*வேலும் மின்னின் விளங்கும்; உலகத்து*
*அரைசு தலை பனிக்கும் ஆற்றலைஆதலின்,*
*புரை தீர்ந்தன்று; அது புதுவதோ அன்றே;*
*தண் புனல் பூசல் அல்லது, நொந்து,*[61]

வளவனே! உன் நாட்டில் யானையோ மலைபோல் இருக்கின்றது; உன் படையோ கடல்போல் முழங்குகின்றது; உன் வேலோ மின்னலென மின்னுகின்றது; உன்னைக் கண்டு உலகின் பிற அரசர்கள் எல்லாம் நடுங்குகின்றனர் என்று மேற் குறிப்பிடும் பாடல் கருத்தின், வழியே புலவர் மற்றொரு செய்தியையும் கூறுவது யாதெனில், உன் நாட்டில் ஆற்றுநீர் மோதல்களின்றிப் பிற மோதல்கள் இல்லாது களைந்தெறிவாயாக! என்று கிள்ளிவளவனின் வலிமையைப் புலவர் நீருடன் ஒப்பிடுவதைக் காணமுடிகின்றது.

இதேபோன்று மற்றொரு பாடலில் மன்னனின் வலிமையை எதிர்த்து நிற்க யாருமில்லை என்பதனைப் பஞ்ச பூதங்களோடு ஒப்பிட்டுக் காட்டுவதனைப் பின்வரும் பாடல் கூறுகின்றது.

*நீர் மிகின், சிறையும் இல்லை; தீ மிகின்,*

*மன் உயிர் நிழற்றும் நிழலும் இல்லை;*

*வளி மிகின், வலியும் இல்லை; ஒளி மிக்கு*

*அவற்று ஓர் அன்ன சினப் போர் வழுதி,*[62]

மிகுதியாகப் பெருக்கெடுத்து வரும் வெள்ளத்தை எவரும் தடுத்து நிறுத்திட முடியாது; அதுபோல மிகுந்து வரும் தீச்சுடரினை எதிர்த்து, தடுத்து எவரும் இடை பிடிக்க இயலாது; காற்றை எதிர்த்து நிற்கும் வலிமை எவருக்கும் இல்லை; சூரிய வெளிச்சத்தையும் எவரும் கையை வைத்து மறைக்க இயலாது. அதுபோலவே மன்னனை எதிர்த்து நிற்க எவருமில்லை என்று பஞ்சபூதங்களோடு ஒப்பிட்டுக் கூறுவதனை அறியமுடிகின்றது.

பாரி வேந்தரின் பறம்பு நாடு பாதுகாவலின்றி அழிவதைக்கண்ட கபிலர் அதன் கரை உடைந்து அழியும் சிறு குளத்தோடு ஒப்பிட்டு வருந்துவதைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*அறையும் பொறையும் மணந்த தலைய*

*எண்நாள் திங்கள் அனைய கொடுங்கரைத்*

*தெண்ணீர்ச் சிறுகுளம் கீள்வது மாதோ*

*கூர்வேல் குவைஇய மொய்ம்பின்*

*தேர்வண் பாரி தண்பறம்பு நாடே*[63]

பாறைகளும் சிறுசிறு குன்றுகளும் ஒன்றுசேரக்கூடிய மலைப்பாங்கான இடத்தில் எட்டாம் நாள் பிறை நிலவைப் போன்று வளைந்த கரையையுடைய

தெளிந்த நீரைக்கொண்ட சிறு குளம் உடைந்திருப்பது போன்று பாரியின் பறம்பு மலை விரைவில் அழிந்து விடுமோ? என்று கபிலர் அச்சம் கொள்வதனை மேற்சுட்டிய பாடல் உணர்த்துகின்றது. இதன்வழி சங்ககாலத்தில் குளம் அமைப்பதற்கு எத்தகைய உத்தி முறைகளைக் மேற்கொண்டிருந்தனர் என்பதைக் காணமுடிகின்றது.

**பரிசில் பெற்றதனை கூறல்**

புறவாழ்வில் புலவர்தம் மன்னனிடம் பரிசுபெறும் நிலை, உரையாடும் முறை, மன்னனை நல்வழிப்படுத்தும் சூழல், நட்பாக ஏற்றல், அரசனுக்குப் பல்வகைகளில் உதவிடுதல், குடிமக்களின் செயல் ஆகிய அறிவும் ஆற்றலும் சார்ந்த நிலையில் உண்மைத்தன்மை உடையதாக விளங்குகின்றன.

தொண்டைமான் இளந்திரையனிடம் பரிசில் பெற்று வரக்கூடிய பெரும்பாணன் தான் பெற்றுவந்த செல்வ வளம் குறித்துக் கூறுகையில், மழையோடு உவமித்து கூறுவதாக இப்பாடல் அமைகின்றது.

*பெருவறங் கூர்ந்த கானங் கல்லெனக்*
*கருவி வானந் துளிசொரிந் தாங்குப்*
*பழம்பசி கூர்ந்தவெம் மிரும்பே ரொக்கலொடு . .*
*வழங்கத் தவாஅப் பெருவள னேய்தி*
*வாலுளைப் புரவியடு வயக்களிறு முகந்துகொண்*
*டியாமவ ணின்றும் வருதும் நீயிரு* [64]

நான் காஞ்சி மாநகரிலிருந்து வருகிறேன். அந்நகரின் தலைவன் தொண்டைமான் இளந்திரையன் கொடுத்த பெரும் கொடையோடு வருகின்றேன்

என்று கூறி வறுமையில் வாடிய எங்களுக்கு வழங்கிய செல்வமானது நிலம் வறண்டு கிடக்கும் காலத்தில் மேகமானது இடி இடித்து மிகுதியான மழை பொழிந்தமையைப் போன்று அவன் பல செல்வங்களை எங்களுக்கு வழங்கியுள்ளான் என்று கூறுவதன் வழி புலவர் பரிசில் கூட மழையோடு உவமித்துள்ளமையை உணரமுடிகின்றது.

மற்றொரு பாடலில் இளந்திரையனின் நட்பினை அவனின் வலிமையைப் பெறுவதற்காகப் பிற அரசர்களும் மக்களும் அவனைக் காண வந்து கொண்டே இருப்பர். இக்காட்சியானது மலையிலிருந்து இறங்கும் அருவியானது கடலினை நோக்கி எவ்வாறு செல்கின்றதோ அதுபோல மன்னனை நோக்கி மக்களும் அரசர்கள் வருவது இருந்தது என்று புலவர் குறிப்பிடுகின்றார்.

பரிசில் பெற்று வரும் ஒரு கூத்தன் தன்னையொத்த மற்றொரு கூத்தனிடம் நன்னன் வழங்கிய பரிசினைப் பற்றி கூறுகையில் இவ்வாறு கூறுகின்றான்.

*துப்புக்கொளல் வேண்டிய துணையி லோருங்*
*கல்வீ ழருவி கடற்படர்ந் தாங்குப்*
*பல்வேறு வகையிற் பணிந்த மன்ன* [65]

உதிர்ந்த மலர்களை ஆற்றின் நீரானது சுமந்துகொண்டு கடலை நோக்கிப் புறப்படுவது போன்று நன்னன் எங்களுக்கு அள்ளாமலும் அளக்காமலும் வாரி வழங்கிய செல்வத்தைச் சுமந்துகொண்டு நாங்கள் அவனின் செங்கண்மா நகரிலிருந்து எங்கள் இருப்பிடம் நோக்கிச் செல்கிறோம் என்று கூத்தன் கூறுவதாகப் புலவர் குறிப்பிடுகின்றார்.

**கொடை திறத்தை நீருடன் ஒப்பிடுதல்**

வீரக்கழலணிந்த குறுநில மன்னனாகிய பேகன் என்பான் கொடை வழங்குவதில் மழை போன்று அறியாமையோடு செயல்படுகின்றான் என்றும் பேகனைப் பரணர் பாடுகின்ற செய்தி பின்வருமாறு,

*அறு குளத்து உகுத்தும், அகல் வயல் பொழிந்தும்,*
*உறும் இடத்து உதவாது உவர் நிலம் ஊட்டியும்,*
*வரையா மரபின் மாரிபோல,*
*கடாஅ யானைக் கழல் கால் பேகன்*
*கொடைமடம் படுதல் அல்லது,*
*படைமடம் படான், பிறர் படை மயக்குறினே*[66]

மழையானது வற்றிய குளத்தில் பொழியாமல், வயலில் பொழியாமல் களர் நிலத்திலும் பயன்படாத வெற்றிடத்தில் பொழிகின்றது; மழையைப்போன்று பேகன் நல்லவர் தீயவர் என்று பாராது வழங்குவதில் கொடை வழங்குவதில் அறியாமை மிக்கவனாக செயல்படுகின்றான் என்று குறிப்பிட்டுக் கொடை வழங்குவதில் மழையாகப் பாராது செயல்படும் பேகன் போர் என்று வந்துவிட்டால் அறிவோடு செயல்படுவான் என்ற கருத்தினையும் பெறமுடிகிறது.

**மன்னன் நீர்நிலைகளைத் தோற்றுவித்தல்**

சங்ககாலத்தில் மிக அதிகளவிலான ஏரி, குளங்களை அமைத்து நாட்டின் வளத்தினை உருவாக்குவதில் மன்னனின் முக்கியத்துவம் எந்த அளவிற்கு இருந்தது என்பதனைப் புறநானூறு உள்ளிட்ட பிற இலக்கியங்களின் பாடல் வழியே

அறியலாம். இவ்வாறு நீர்நிலைகளை அமைத்தலில் அரசனின் கடமையைப் புலவர்கள் மன்னனுக்கு அறிவுறுத்தி உள்ளதனையும் சங்கப்பாடல் வழியே அறியமுடிகின்றது.

வளமிக்க நாட்டினை உருவாக்குவதற்கு அக்கால மன்னர்கள் மிகுந்த முயற்சிகளை மேற்கொண்டிருந்தனர் என்பதனை புறநானூற்றுப் பாடல் வழி அறிய முடிகின்றது.

மேற்கூறப்பட்ட பாடலடியில் குடபுலவியனார் என்னும் புலவர் மன்னனுக்கு வழங்கும் அறிவுரையாகக் குறிப்பிடுமிடத்து,

*நிலன் நெளி மருங்கில் நீர் நிலை பெருகத்*

*தட்டோர் அம்ம, இவண் தட்டோரே;*

*தள்ளாதோர் இவண் தள்ளாதோரே*[67]

பள்ளமான நிலங்களில் எல்லாம் நீர்நிலைகளை பெருகச் செய்யவேண்டும் என்றும்; அவ்வாறு நிலத்துடன் நீரைக் கட்டியோர் இவ்வுலகம் உள்ளவரை அழியாத தன் பெயரை நிலைநிறுத்திய புகழினை அடைவர் என்றும் குறிப்பிடுகின்றார். இதனால் நீர் நிலைகளைத் தோற்றுவித்தலில் நாட்டைக் காக்கும் அரசனின் கடமை எத்தன்மை வாய்ந்தது என்றும் நீர்நிலைகளின் முக்கியத்துவத்தைப் புலவர் குடபுலவியனார் பாடல் வழி அறிய முடிகின்றது.

மேலும் மற்றொரு பாடலில் கிள்ளிவளவன் என்னும் மன்னன் மக்களுக்கு இரு மருந்து தந்து நாட்டைக் காத்தவன் என்று புலவர் குறிப்பிடுவதனை,

*இருமருந்து  விளைக்கும் நல் நாட்டுப் பொருநன்*

*கிள்ளிவளவன் ............  .....*[68]

தண்ணீரும் உணவுமாகிய இரு மருந்தை மக்களுக்கு அளித்து அவர்களின் பசிப்பிணியாகிய இரு மருந்தை வழங்கி நாட்டைக் காக்கும் மன்னவன் என்று கிள்ளிவளவன் மேற்கூறிய பாடலில் புகழ்ந்துரைப்பதன் வழியே மக்களின் வாழ்வினைச் செம்மைப்படுத்துவதில் மன்னனுக்கு இருந்த பொறுப்புணர்வை அறியமுடிகின்றது.

இக்கருத்தினையொட்டி நாட்டு மக்களுக்கு உயிர் போன்றவன் மன்னவன் என்பதனைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;*
*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;* [69]

நாட்டில் வாழ்கின்ற மக்களுக்கு எல்லாம் நெல்லும் நீரும் உயிரன்று; மாறாக நாட்டு மக்களின் நிலையினை உணர்ந்து நல்லாட்சி புரிந்து அம்மக்களைக் காக்கின்ற மன்னனே மக்களுக்கு உயிர் போன்றவன் ஆவான் என்றுரைப்பதன் வழி குடிகளைக் காப்பதில் மன்னனின் கடமை எந்த அளவிற்கு முக்கியத்துவம் பெற்றிருந்தது என்பதை உணர முடிகின்றது.

அதனால்தான் அக்கால மன்னர்கள் செயற்கை நீர்நிலைகளாகிய ஏரி, குளங்களை உருவாக்கித் தங்களது நாட்டின் வளமையை மேம்படுத்த மிகுந்த முயற்சி மேற்கொண்டிருந்தனர் என்பதனைப் பின்வரும் பாடல் உணர்த்துகின்றது

நாட்டின் சிறப்பிற்கு மிகுந்த பொறுப்புணர்வோடு மன்னர்கள் கடமையாற்றி இருந்ததனைக் குறிப்பிடுகையில் காட்டை அழித்து, பெரும் குளங்கள் அமைத்து அதன் வழியே நீரைப் பாசனத்திற்கு பயன்படுத்தியதோடு, மடை, மதகு போன்ற நீர்த்தேக்க தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி உணவு உற்பத்தியில் தன்னிறைவு கண்டனர் என்பது புலனாகின்றது.

இத்தகைய நீராதாரங்களை முறையாக ஒழுங்குபடுத்தி மேலாண்மை செய்வதன் வாயிலாக வேளாண்மையில் தனித்துவம் மிக்க ஒரு நாடாக விளங்கமுடியும் என்பதனைக் காவிரியாறு பாய்வதால் நாட்டின் செல்வச்செழிப்பு மிகுந்த மண்ணின் உயர்வுக்குக் காரணமாகக் காவிரியாறு பெருக்கெடுத்து பாய்வதால்தான் என்ற கருத்தினைப் பாடல் குறிப்பிடுகின்றது. ஒரு நாட்டின் வளமையைக் கொடுப்பதில் நீருக்கு முக்கியப்பங்குண்டு என்பதனை இப்பாடல் உணர்த்துவதை உணரமுடிகின்றது.

பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனுக்கு நிலையாமை கருத்தினை உணர்த்த மாங்குடி மருதனாரால் பாடப்பட்டது மதுரைக்காஞ்சி என்னும் நூலில் புலவர் மழைபோன்று உன் செயல்கள் இருந்து விடவேண்டும் என்று சிறப்பிக்கின்றார்.

மன்னனே! பெரும் புகழோடு வாழ்ந்த அரசர்கள் எல்லாம் மாண்டு அழிந்து விட்டனர். ஆகையால் நீ வாழும் காலத்தில் ஆராய்ந்தறிந்து உன் புகழை என்றும் நிலைநிறுத்திக் கொள்ளுமாறு ஆட்சி நடத்திட வேண்டும் என்று மன்னனுக்கு

அறிவுரை கூற வந்த புலவர் மழையின் செயலோடு ஒப்பிட்டுக் காட்டி விளக்குவதனை பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*குணகடற் கிவர்தருங் குரூஉப்புன லுந்தி . . .*

*நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றிக்*

*களிறு மாய்க்குங் கதிர்க் கழனி*

*ஒளி றிலஞ்சி அடை நிவந்த*

*முட் டாள சுடர்த் தாமரை*

*கட் கமழு நறு நெய்தல் . . .* [70]

மன்னனே! மேகங்கள் கிழக்குத்திசையில் உள்ள கடல் நீரினை முகர்ந்து கொண்டு செல்லும். பின் மேற்கிலுள்ள கடலினை முற்றுகையிடும். இவ்வாறு நடைபெறும் செயலால் மேகம் குளிர்ந்து கொட்டும் இடந்தெரியாது பள்ளமான நிலப்பரப்பிலும் உயர்ந்த மலைப்பகுதிகளிலும் மழையைக் கொட்டும்; அத்தகைய மழையைப்போன்று உன் செயலானது இருந்துவிடக்கூடாது என்றும் இவ்வுலகில் உனது புகழை என்றும் நிலைக்கும்படி நல்லாட்சி புரிதல் வேண்டும் என்றும் மேற்குறிப்பிட்ட பாடலின் வழியே நெடுஞ்செழியனுக்கு உணர்த்துவதை அறியமுடிகின்றது.

**மன்னனின் பெயரால் நீர்த்துறைகள் இடம்பெறுதல்**

சங்க இலக்கியப் புலவர்கள் மன்னனின் புகழை எடுத்துரைப்பதற்கு ஆறு, மழை போன்றவற்றோடு ஒப்புமைப்படுத்தி பாடியுள்ளனர். அவ்வகையில் நீர்த்துறைகளும் மன்னனின் இயல்பினோடு இடம்பெறுகின்ற தன்மையை,

*பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்*
*அரலைக் குன்றத் தகல்வாய்க் குண்டுசுனைக்*
*குவளையொடு பொதிந்த குளவி நாறுநின்* [71]

என்னும் பாடலில் சுனையைக் குறிப்பிடும் இடத்தில் பாணர்கள் போன்ற இரவல்களைக் காக்கின்ற மன்னனின் அதலை என்ற குன்றத்தின் கண் பரந்த வாயினையுடைய ஆழமிக்க சுனை என்று மன்னன் பெயரால் வழங்குவதை அறிய முடிகின்றது.

*கழற்கால் பண்ணன் காவிரி வடவயின்* [72]

காவிரியாற்றைக் குறிப்பிடும் இடத்தில் கழல் அணிந்த காலினைக்கொண்ட மன்னனின் காவிரி என்று வழங்கப்படுகின்றது. நாட்டினை மன்னன் ஆட்சி செய்வதால் அந்நாட்டு நீர்நிலையும் மன்னனுக்கு உரியதாகவே கருதப்படுவதை மேற்கண்ட பாடல் உணர்த்துகின்றது. மன்னராட்சி காலத்தில் நீர்நிலைகள் தனிப்பட்டவர்களுக்கானது என்ற நிலை இருந்தது. ஆனால் தற்போதைய மக்கள் ஆட்சிக்காலத்தில் நீர்நிலைகள் பொதுநிலையிலேயே அனைவருக்குமானது என்ற நிலை வழங்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

சங்ககாலத்தில் நெறி தவறாது நல்லாட்சி புரியும் ஆட்சியாளர்களால்தான் நாட்டில் மழை பொழிகிறது என்ற நம்பிக்கை அக்காலத்தில் இருந்து வந்துள்ளது இதனை,

*பசிபிணி முழவின் குட்டுவன் காப்ப*
*பசி என அறியாப் பணை பயில் இருக்கை* [73]

என்ற பாடலடியில் குடநாடு, பசி என்றால் என்னவென்றே தெரியாத அளவிற்கு மக்கள் நலம் மிக்க, வளம்மிக்க மருதநில ஊர்களைக் கொண்டதாக இருந்தது என்று கூறுகின்றது. இதன் வழி நாட்டை ஆளும் மன்னனே, அந்நாட்டின் வளமைக்கும் காரணம் என்பதை அறியமுடிகின்றது. நவீன அறிவியல் தொழில்நுட்பம் வளராத காலத்தில் மழைப்பொழிவு என்பது மன்னர்களின் நல்லாட்சியைப் பொருத்தே அமையும் என்ற நம்பிக்கை இருந்ததைப் போன்று அறிவியல் வளர்ச்சி வளர்ந்த இக்காலத்திலும் ஆட்சியாளர்களின் நல்லாட்சியைப் பொறுத்தே மழையும் பொழியும் என்ற கூற்று இன்றளவும் பேசப்பட்டு வருவதைக் காணமுடிகின்றது.

**செல்வத்தைச் சுருங்கை அமைத்துக் காத்தல்**

மன்னர்கள் தங்களது செல்வ வளங்களை எல்லாம் பிற நாட்டு மன்னர்கள் கவர்ந்துகொண்டு செல்லாது இருக்க, மறைவான இடங்களில் அச்செல்வங்களைப் பதுக்கி வைப்பது வழக்கமாக இருந்துள்ளது; அதன்படி பாடலிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த மன்னர்கள் தம் செல்வ வளங்களையெல்லாம் பகையரசர்கள் கவர்ந்து செல்ல இயலாதவாறு கங்கை நதிக்கரையில் சுருங்கை அமைத்துப் பதுக்கி வைத்திருந்ததாக அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுவதனை,

*நீர்முதல் கரந்த நிதியம்கொல்லோ?*

*பல் புகழ் நிறைந்த வெல் போர் நந்தர்*

*சீர் மிகு பாடலிக் குழீஇ, கங்கை*

*நீர்முதல் கரந்த நிதியம் கொல்லோ?* [74]

என்ற பாடலடிகள் குறிப்பிடுவதைக் காணலாம். இவ்வாறு தம் செல்வ வளங்களைக்கூட பாதுகாத்துக் கொள்வதற்கென்று நீர்நிலைகள் சங்ககாலத் தமிழருக்குப் பயன்பட்டுள்ளது என்பதையும், அத்தகைய நீர்நிலைகளைத் தங்களது அறிவு நுட்பத்தாலும் தொழில்நுட்பத் திறத்தாலும் சுருங்கை முதலியனவற்றின் வழியே பொருட்களைப் பாதுகாத்தமை வியப்பளிக்கக் கூடியதாக அமைகின்றது.

**போரிடுவதற்கு முன் நீராடல்**

போர்க்களத்தில் போரிவடுதற்கு முன்பாகப் பாண்டியன் நெடுஞ்செழியன் குளத்தில் நீராடினான் என்ற செய்தியைப் பின்வரும் பாடல் குறிப்பிடுவதனை,

*மூதூர் வாயில் பனிக் கயம் மண்ணி,*

*மன்ற வேம்பின் ஒண் குழை மலைந்து,*

*தெண் கிணை முன்னர்க் களிற்றின் இயலி,*

*வெம் போர்ச் செழியனும் வந்தனன்; எதிர்ந்த*

*வம்ப மள்ளரோ பலரே;*

*எஞ்சுவர் கொல்லோ, பகல் தவச் சிறிதே?* [75]

என்னும் பாடலடிகள் பாண்டியன் நெடுஞ்செழியன் மதுரை மூதூர் குளத்தில் நீராடிய பின்பு தன் குடிக்கு அரிதாகிய அடையாளப் பூவாகிய வேப்பம் பூ மாலையை தலையில் சூடிக்கொண்டு கிணைப்பறை பின் தொடர்ந்து வழங்கி வர செழியன் போர்க்களத்திற்கு வந்திருக்கிறான் என்ற செய்தியைப் பெறமுடிகின்றது.

**நீர்நிலைக் காவலர்**

புறவாழ்க்கையில் மன்னர்களின் அரசியல் வாழ்வில் எல்லைகளாகக் கருதப்பட்ட நீர்நிலைகளைப் பராமரித்துப் பாதுகாக்கக் காவலர்கள் நியமிக்கப் பட்டனர். மழைக்காலங்களில் குளங்களில் ஏற்படுகின்ற கரை உடைப்புதனை சரி செய்வதற்காகக் காவலர்கள் பணியமர்த்தப்பட்டு பராமரிக்கப்பட்ட செய்தியினை,

*எண்நாள் திங்கள் அனைய கொடுங்கரைத்*

*தெண்ணீர்ச் சிறுகுளம் கீள்வது மாதோ* [76]

என்ற பாடல் வரி எடுத்துரைக்கின்றது. மேலும் வடதிசையிலுள்ள இமயமலையின் பெருமைக்கு ஈடாகத் திகழ்வது தென்திசையிலுள்ள 'ஆய்' என்ற மன்னனின் குடிமரபு என்கிறது இந்தப் பாடல்.

*அவன் புகழைக் காலம் தாழ்ந்து கேட்கும் என் காது*

*பாழ்ங்கிணறு போலத் தூர்ந்துபோக*[77]

இப்படிப்பட்ட ஆய் அரசன் முதலிலேயே பார்த்து என் வறுமையைப் போக்கிக் கொள்ளாமல் காலம் போன கடைசியில் பார்க்கிறேனே; அதனால் என் உள்ளம் மூழ்கி அழியட்டும்; இப்போது பாடும் என் நாக்கு பிளந்து போகட்டும்; அவன் புகழைக் காலம் தாழ்ந்து கேட்கும் என் காது பாழ்ங்கிணறு போலத் தூர்ந்துபோகட்டும்; நீர் தேவைக்காக ஊர்களில் கிணறுகள் தோண்டப்பட்டு மக்களுக்குப் பயன்படுத்தியதனை குறிப்பிடுகின்றது.

**பகை மன்னர்களின் நீர்நிலைகளைப் பாழாக்குதல்**

சங்ககால மன்னர்கள் நாட்டின் எல்லையை விரிவுபடுத்தக்கருதி நாட்டின்மீது படையெடுப்பர். அவ்வாறு படையெடுத்துச் செல்லும்போது நாட்டின் வளங்களை அழிப்பதுண்டு. ஏரி, குளம் போன்ற நீர்நிலைகளையும் விளைநிலங்களையும் அழிப்பதுண்டு. இவ்வாறு நீர்நிலைகள் மற்றும் விளைநிலங்களில் தாக்குதலின் நோக்கம் அந்த நாட்டுமக்களின் அடிப்படைத் தேவைகளான குடிநீர் மற்றும் உணவுப் பொருட்களைச் சேதப்படுத்தி, அதன் வாயிலாக அந்நாட்டு மக்களின் வலிமையை இழக்கச் செய்வர். இவ்வாறு அறநெறிக்கு மாறாகப் போர்ச்செயலில் ஈடுபட்டு அந்நாட்டினை மெதுவாகக் கைப்பற்றிக் கொள்வதற்கு அக்கால மன்னர்கள் கையாண்ட நீதிக்குப் புறம்பான போர் உத்தி முறையாக இருந்துள்ளது என்பதைச் சங்கப்பாடல் வழியே காணமுடிகின்றது. இதற்குச் சான்றாகப் பின்வரும் புறநானூற்று பாடலொன்று அமைகின்றது.

> ***குண கடல் பின்னது ஆக, குட கடல்***
> ***வெண் தலைப் புணரி நின் மான் குளம்பு அலைப்ப,***
> ***வல முறை வருதலும் உண்டு' என்று அலமந்து, நெஞ்***
> ***சு நடுங்கு அவலம் பாய,***
> ***துஞ்சாக் கண்ண, வட புலத்து அரசே*** [78]

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பான், தான் படையெடுத்துச் சென்ற பகை நாட்டின்மீது பறவைகள் ஆரவாரிக்கும் விளைநிலங்களில் தேரினை செலுத்திய தனையும்; காவல் நிறைந்த பகைநாட்டு நீர்நிலைகளில் ஆண்

யானையினை ஏவி பாதங்களைப் படியச்செய்து கலக்கியமையும்; மேல் குறிப்பிட்ட பாடல் செய்தி உணர்த்துவதன் வழியே மண்ணாசை காரணமாகப் போர் மேற்செல்லும் மன்னன் எதிரிநாட்டு வளங்களை அழிப்பதில் நீர்நிலைகள் பெற்றிருந்த முக்கியத்துவத்தினை உணரமுடிகின்றது.

அரசர்கள் தங்களுக்குள் வஞ்சித்துப் போர் புரிவதற்கான காரணங்களாக ஆய்வறிஞர்கள் கூறும் கருத்துக்கள் இங்கு நோக்கத்தக்கன.

*அரசர் போர் ஆசை, பாதுகாப்பு, பகை, தண்டனை, மரம், அருள் என்னும் அறுவகை காரணத்தார் பிறக்கும் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை, புகழாசை, விண்ணாசை என்ற ஐவகை ஆசைகள்; தற்காப்பு, நாட்டுக்காப்பு, மதகாப்பு எனும் மூவகைப் பாதுகாப்பு; பழி தீர்ப்பு, பழம்பகை, பொறாமை என்னும் மூவகைப் பகை; இகழ்ச்சி திரையிறாமை, படையெடுப்பு ஆகிய மூன்று தண்டனை; கடுமறம், தன்குடி, பிறர் குடி மேல்கொண்ட அருள் ஆகிய அறுவகை காரணமாகப் போர்கள் தோன்றலாம்* என்கிறார் ஞா. தேவநேயன்.

*பொருள், நாடு பிடித்தல், புகழ்பெருக்கல், பழியும் அவமானமும் ஏற்படாமல் தன்னைக் காத்தல், பகைவர் செருக்கடக்கல்* என்கிறார் பொற்கோ[80].

*நால்வகை படைகளைப் பெற்றிருப்பினும் அவற்றால் வெற்றி உண்டாகாது; அற வழிகளாலேயே வெற்றி உண்டாகும் என்னும் உண்மையைத் தமிழ்ப்புலவர்கள் அவ்வப்போது அரசருக்கு அறிவுறுத்தி வந்தனர்* என்றுரைக்கின்றார் லெ. பா. கரு. ராமநாதன்[81].

அக்காலத்தில் பகை நாட்டை வெற்றிகொள்ளக் கருதிய மன்னன் போரிடுவதற்கு முன்பாக அந்த நாட்டு நீர்நிலைகளைப் பாழ்படுத்தி அதன் வாயிலாக வீரர்களின் வலிமையைக் குன்றச்செய்து போர்ச்செயலில் ஈடுபட்ட செய்தியினை அறிய முடிகின்றது.

இன்றும் போர் நடைபெறும் நாடுகளில் பகை நாடுகளின் நீராதாரங்களை அழிக்கும் போக்கு காணப்படுகின்றது. மூன்றாம் உலகப் போர் என்ற ஒன்று நேரிடின் அது நீருக்காகத்தான் இருக்கும் என்கின்றனர் தற்கால அறிவியலாளர்கள். நாடுகளுக்கிடையே நடைபெறும் போர்களில் நீர் முக்கியத்துவம் பெற்று அரசியல் ஆயுதமாக அமையப்பெறுவதை காணமுடிகின்றது.

**போர்க்காலத்தில் நீர்நிலைகளைச் சேதப்படுத்துதல்**

பகைநாட்டை பாழ்படுத்தும் பொருட்டு நீர்நிலைகளைச் சேதப்படுத்துவது குறித்த செய்திகள் புறப்பொருள் வெண்பாமாலை என்னும் இலக்கண நூலில் ஐயனாரிதனார் துறையாகக் குறிப்பிட்டுக் கூறுவதிலிருந்து அறியலாம். மேலும் நீர் நிலைகள் போர்க்காலத்தில் யானைகளால் மிதிபட்டு பாழ்படுத்தப்பட்ட செய்தியினைப் புறநானூறு பின்வருமாறு விளக்குகின்றது.

*ஒளிறு மருப்பின் களிறு அவர*
*காப்பு உடைய கயம் படியினயி;*[82]

என்ற பாடல் வரிகளால் செய்தியை அறிய முடிகின்றது.

போர்க்கால நிகழ்வு பின்னர் வந்த காலத்தில் இலக்கணம் செய்த ஆசிரியர் ***மழபுல வஞ்சி*** என்ற துறையினுள் சுட்டிக்காட்டி இருப்பதனை அறியமுடிகின்றது.

**கடலையே நீர் எல்லையாக அமைத்தல்**

சங்ககாலத்தில் ஆட்சி விரிவாக்கத்தில் எல்லை, நீர் எல்லை என்ற இருவேறு எல்லைகள் இருந்ததாக சங்கப்புறப் பாடல்கள் தெரிவிக்கின்றன. சங்ககாலத்தில் தோற்றுவிக்கப்பட்ட மிகப் பரந்துபட்ட அதிகளவிலான நீர்நிலைகளுக்குக் காவல் காப்பதற்கும் பராமரிப்பதற்கும் முக்கியத்துவம் தந்துள்ளமையை அறியமுடிகின்றது. கடம்பர் எனும் இனத்தவர் கடல் கொள்ளையில் ஈடுபட்டுக் கடற் போர் மேற்கொண்ட பல்வேறு செய்திகளை நம் சங்க இலக்கியங்களின் வழி அறியலாம்.

அவ்வகையில் கடல்மேல் சென்று போர் புரிந்து கடல் எல்லைகளையே நாட்டின் எல்லைகளாக இடம்பெற்றிருந்ததனைச் சங்கப்பாடலின் வழியே அறிய முடிகின்றது. அவ்வகையில் போற்றப்படக்கூடிய மன்னனாகக் கடல் சிறப்பினால் புகழப்படக்கூடிய மன்னனாகக் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்பவன் புகழப்படுவதைப் புறநானூற்றின் பாடல்வழி அறியலாம்.

***உவவு மதி உருவின் ஓங்கல் வெண் குடை***
***நிலவுக் கடல் வரைப்பின் மண்ணகம் நிழற்ற*** [83]

மேற்கூறிய பாடல் வரி இடம்பெற்றுள்ள ***நிலவுக் கடல்*** என்னும் சொல்லானது நிலைத்த கடல் பரப்பைக் குறிப்பதாகும். ஆகவே நில எல்லைகளைப் பாழ்படுத்தலாம்; கடல் எல்லைகளைச் சேதப்படுத்த இயலாது;

ஏனெனில் அவை வலிமை மிக்கவை. ஆகவேதான் மேல் கூறப்பட்ட ***நிலவுக்கடல்*** என்னும் சொல்லாட்சி கடலின் சிறப்பியல்போடு குறிப்பிடப்படுகின்றது. தொல்காப்பியப் பாயிரத்தில்,

***வடவேங்கடம் தென்குமரி***
***ஆயிடை***
***தமிழ் கூறும் நல் உலகத்து***[84]

என்றவாறு தமிழகத்தின் கடல் எல்லையை வரையறுத்திருப்பதைக் காணலாம். இவ்வுலகமானது கடலினை எல்லையாகக் கொண்டது என்கின்ற பாடல் கருத்தை பின் வரும் புறநானூற்று பாடல் குறிப்பிடுவதனைக் காணலாம்.

***ஒருவீர் ஒருவீர்க்கு ஆற்றுதிர்; இருவீரும்***
***உடன் நிலை திரியீர்ஆயின், இமிழ்திரைப்*** [85]

என்ற பாடல்களில் உலகின் எல்லைப் பரப்பாகக் கடல் அமையப்பெறுவதை மேற்கண்ட பாடல் சுட்டுகின்றது.அது மட்டுமின்றிக் கடலைத் தெய்வமாகக் கருதி அதற்கு விழா எடுத்தமை குறித்த செய்தியினையும் புறநானூற்றுப் பாடல்களில் காணமுடிகின்றது.

# தொகுப்புரை

- சங்க இலக்கிய அகப் பாடல்கள் நீரியல் சார்ந்த காதல் உறவை மையப்படுத்த புறப்பாடல்கள் சங்ககால மக்களின் புறவாழ்வு செய்திகளான நாகரிகம், பண்பாடு என்ற நிலைகளில் நீரியல் சார்ந்த ஒழுக்கத்தை மையப்படுத்தி விளக்குகின்றது.
- புறப்பாடல்களின் வழியாக நீரியல் சிந்தனை குறித்த பதிவுகளை விருந்தோம்பல் பண்புகளிலும் நீர்நிலை குறித்த சடங்குகளிலும் வழிபாடுகளில் புலவர்கள் எடுத்தாண்டுள்ளமையைக் காணமுடிகின்றது.
- நீரில்லாக் காலங்களில் கலங்கிய சேற்றுநீரையும் நன்னீராக மாற்றுவதற்கு மேற்கொண்ட நீரியல் நுட்பச்சிந்தனை குறித்தும், அடிப்படைத் தேவைகளுக்கு உப்பு நீரையும், கிணற்று நீரையும் பயன்படுத்திய பாங்கு குறித்தும், தமக்கு ஏற்பட்ட தாக மிகுதியால் சங்கத்தமிழர்கள் மேற்கொண்ட நீர்மேலாண்மை சிந்தனை குறித்த செய்திகளையும் பெறமுடிகின்றது.
- மன்னன் போர் மேற்செல்வதற்குரிய காலப்பொழுதினை அறிவதற்குக் குடிநீர் கன்னல் என்ற கருவிகொண்டு நாழிகை கணக்கர் தவறாது கணித்து வந்த செய்தியினையும் உணரமுடிகின்றது .
- சங்ககால மன்னர்களும் மக்களின் அடிப்படை வாழ்வியலுக்கும் மற்ற உயிரினங்களுக்கும் நீரே அடிப்படை ஆதாரம் என்பதை உணர்ந்து, பல ஏரி,

குளம் நீர்நிலைகளை ஏற்படுத்தி அதன்வழியாகத் தங்களது நிலைத்த புகழை ஏற்படுத்திக்கொண்ட செய்தியினையும் காணமுடிகின்றது.

- மன்னனின் புகழ்மிக்க ஆட்சித்திறனை எடுத்துரைப்பதற்கும், மன்னர் என்பவன் பஞ்ச பூதங்களைக்காட்டிலும் பெருமைக்குரியவனாகப் போற்றப் பெறுவதோடு, நீரைவிடவும் இனிமை மிக்கவனாகவும், மென்மை மிக்கவனாகவும் மன்னன் அறியப்படுகிறான்.
- தண்ணீரும் உணவும் ஆகிய இரு மருந்தை மக்களுக்கு அளித்து நாட்டைக் காக்கும் மன்னவன் என்று புகழப்படுவதனையும் காணமுடிகின்றது.
- தம் செல்வ வளங்களையெல்லாம் பகையரசர்கள் கவர்ந்து செல்ல இயலாதவாறு கங்கை நதிக்கரையில் சுருங்கை அமைத்துப் பதுக்கி வைத்திருந்தனர் என்ற செய்தியினையும் அறியமுடிகின்றது.
- பாண்டியன் நெடுஞ்செழியன் மதுரை மூதூர் குளத்தில் நீராடிய பின்பு தன் குடிக்கு அரிதாகிய அடையாள பூவாகிய வேப்பம்பூ மாலையை தலையில் சூடிக் கொண்டு போர்க்களத்திற்கு வந்திருக்கிறான் என்ற செய்தியைப் பெறமுடிகின்றது.
- மழைக்காலங்களில் குளங்களில் ஏற்படுகின்ற கரை உடைப்புதனைச் சரி செய்வதற்காகக் காவலர்கள் பணியமர்த்தப்பட்டு பராமரிக்கப்பட்ட செய்தியினையும் உணரமுடிகின்றது .
- மண்ணாசை காரணமாகப் போர் மேற்செல்லும் மன்னன் எதிரிநாட்டு வளங்களை அழிப்பதில், நீர்நிலைகள் பெற்றிருந்த முக்கியத்துவத்தினையும் நீரியல் குறித்த சிந்தனையாகப் புறப்பாடல்களில் வெளிப்படுவதைக் காணமுடிகின்றது.

**அடிக்குறிப்புகள்**

1. தமிழர் நாகரீகமும் பண்பாடும் ப:1
2. மேலது , ப:1
3. லக்ஷ்மி தரன் இலக்கு மிதரன் பாரதி நமது சமூகம் ப:108
4. ஞா தேவநேயன் பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும் ப:8
5. குறள்:81
6. பெரும்பாண்: பா ;வரி:96-100
7. மேலது ,பா ;வரி - 266-274
8. ஐங் 28:1
9. அகம் 198 ; 16-17
10. அகம். 207:1
11. கலித். 101:13-14
12. பரி. பா. 10 : 85 -86
13. பரி. பா. 6: வரி :11
14. புறம், பா 143: 1-5
15. ஐங்குறு 251: 1-2
16. தொல். மெய்ப். 11
17. குறள் - 298
18. ஐங்குறு பா: 84 :3-5

19. நற், பா: 80;4
20. புறம் பா: 11:1-7
21. பெரும்பாண்: பா ;வரி:236-241
22. புறம் பா:147:5-6
23. குறுந், பா: 113:4-5
24. பெரும்.315:1-5
25. அகம் 86: 1-10
26. அகம் 136;7-9
27. சி பாலசுப்பிரமணியன் தமிழ் இலக்கிய வரலாறு ப. 31
28. சிறுபாணா : 68-71
29. சிறுபாணா ;178-181
30. புறம் 319:1-3
31. புறம் 331:1-5
32. புறம் 3;17-20
33. குறுந், பா; 274 4-5
34. அகம் பா 271 6-7
35. அகம் பா 265 15 -16
36. குறுந் பா 209:1
37. மலைபடு. பா. 136
38. அகம். பா 335 5-6

39. அகம். பா 257 14- 16

40. புறம். பா 392 :13

41. அகம். பா. 295 11-12

42. மலைபடு. பா. 250 - 252

43. புறம். பா ;150 15 -16

44. புறம். பா 204 5-9 .

45. புறம். பா 325: 1-5

46. குறுந். 277: 4-5

47. அகம். பா 336: 6-7

48. முல்லை. பா. வரி : 55 - 58

49. புறம். பா. 280: 6 - 7

50. புறம். பா.,186 1-2

51. இளவழகனார், சங்க இலக்கியத்தின் கவித்திரட்டு, ப. 13

52. பதிற். பா. 24 : 15 - 16

53. பரி. 16 : 1

54. நற். 190 : 2 - 4

55. மதுரைக். பா. 725 - 727

56. புறம். பா. 3 : 14 - 21

57. மேலது. பா. 7 : 11 - 13

58. மேலது பா;105:4-8

59. மேலது. பா. 389 : 1 - 5

60. புறம். பா. 14 : 1 - 9

61. மேலது. பா. 42 : 1 - 7

62. மேலது. பா. 51 : 1 - 4

63. மேலது. பா. 118 : 1 - 5

64. பெரும். பா. 23 - 28

65. பெரும்பாண். பா. 246- 248

66. புறம். பா .142:1-6

67. புறம். பா. 18 : 28 - 30

68. மேலது. பா. 8-10

69. மேலது பா:186:1-2

70. மதுரைக். பா. 245 - 250

71. குறுந். பா.  59 : 1 - 3

72. அகம். பா.177 அடி - 16

73. அகம். பா. 91 : 13 - 14

74. அகம். பா. 265 : 4 - 6

75. புறம். பா. 79 : 1 - 6

76. மேலது. பா. 118 : 2 - 3

77. மேலது. பா.132 : 3

78. புறம். பா. 31 : 13 - 17

79. ஞா. தேவநேயன், பழந்தமிழ் ஆட்சி,  ப. 101

80. பொற்கோ, பிபிசி தமிழோசை, இயல் ப- ள் 23 34

81. சங்க காலத் தமிழர் வாழ்வு,  ப. 48

82. புறம். பா; 15 ;9-10

83. மேலது .பா 3; 1 -2

84. தொல். சிறப்புப் பாயிரம் – 1 - 3

85. புறம். பா. 58:  20 - 21

# சங்க இலக்கியத்தில் நீரியல் மேலாண்மையும் தொழில்நுட்பமும்

**முன்னுரை**

பண்டைய தமிழர்கள் இயற்கையின் மீது பேரார்வம் கொண்டு இனிய வாழ்வு வாழ்ந்தனர். சங்க இலக்கியங்களைப் பாடிய புலவர்கள் ஐம்பூதங்களின் சிறப்புகளையும் அவற்றின் பண்புகளையும் தம் பாடல்களில் எடுத்துரைத்துள்ளனர். அவற்றுள் நீர்வள சிந்தனை குறித்த பாடல்கள் பெரும்பான்மை அமையப் பெற்றுள்ளன. சங்ககாலத்தையடுத்து தோன்றிய பிற்கால இலக்கியங்களில் குறிப்பாகப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் நீர்த்தொடர்பான செய்திகளும் அறத்தின் வழியே வலியுறுத்தி வந்துள்ளதனை இலக்கியத்தின்வழி அறியமுடிகின்றது. நீர் இல்லையேல் இவ்வுலகம் இல்லை என்பதை உணர்ந்து சங்ககால மக்கள் நீர்வள ஆதாரத்தைப் பெருக்கி அடுத்தத் தலைமுறையினருக்கும் வழங்கியுள்ளனர். செயற்கை நீர்நிலைகள் வழியாகவும் இயற்கை நீர்நிலைகளைப் பாதுகாத்த நிலையையும் உணரமுடிகின்றது. மனிதன் வாழ்வதற்கு நீர் அவசியம் என்பதை உணர்ந்தே பழந்தமிழர்கள் நீர்நிலைகளைப் பராமரித்தும், நீர்நிலைகளை மேலாண்மை செய்ததை இலக்கியங்கள் வழி அறிய முடிகின்றது.

நீரின் பயன்பாடு என்பது இன்றைய காலகட்டத்தில் நாளுக்குநாள் மிகுதியாகிக் கொண்டே வருகின்றது. அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள நீர்த்தேவையாகிறது. இச்சூழலில் நீர்நிலைகளை உரியமுறையில் பயன்படுத்தி

உலகிலுள்ள ஏனைய உயிரினங்களுக்கும் பயனளிக்கும் வகையில் நீரினை மேலாண்மை செய்வது இக்காலகட்டத்தில் அவசியமான மிக முக்கியமான தேவையாகும்.

அறிவியல் தொழில்நுட்பம் மிகுந்த இவ்விருபத்தியோராம் நூற்றாண்டில் கூட இயற்கை பேரிடர்கள் பற்றிய அச்சம் என்பது இன்றளவும் இருந்து வருகின்றது. அவ்வகையில் மனிதனுக்குத் தன் வாழ்வில் இடரைக் கொடுப்பதில் நீருக்கு மிகுந்த பங்குண்டு எனலாம். அத்தகைய நீர்தான் மக்கள் வாழ்க்கைக்கு அத்தியாவசியம் ஆகும். இவ்வுலகிலுள்ள ஏனைய பொருட்களின் வாழ்வாதாரத்திற்கு மூல காரணியாகவும் விளங்குகின்றது.

சங்ககால மக்களின் வாழ்வியலில் நீர் பெறும் பங்கானது அகவாழ்விலும் புறவாழ்விலும் எண்ணற்ற நிகழ்வுகளை நிகழ்த்தியுள்ளது எனலாம். சங்க இலக்கியத்திலுள்ள நீர் மற்றும் நீர்நிலைகள் குறித்த செய்திகளையும் நீர்நிலைகளை மேலாண்மை செய்த பாங்கினையும் எவ்வித அறிவியல் தொழில்நுட்பம் வளராத அக்காலத்தில் கிடைத்த பொருட்களைக்கொண்டு, வலுவான நீர்நிலைகளை அமைத்த தொழில்நுட்பங்களைப் பற்றி ஆராய்வதற்கு முன், உலகத்தோற்றம் மற்றும் நாகரீக மாற்றத்திற்கு நீர் ஆற்றிய பெரும்பங்கு குறித்தும், சங்க கால நீர் மேலாண்மை பற்றிய பொதுமைச் செய்திகளையும் வேளாண்மையில் மேற்கொண்ட நீர் மேலாண்மை மற்றும் நீர்நிலை பராமரிப்பு, பாதுகாப்பு உள்ளிட்ட சங்ககால மக்கள் பயன்படுத்திய தொழில்நுட்பச் செய்திகளையும் ஆராய்வதாக இவ்வியல் அமையப்பெறுகின்றது.

**தொல்காப்பியரின் நீரியல் சிந்தனை**

பழந்தமிழரின் தொன்மை வரலாற்றை எடுத்துரைக்கும் விளங்கும் சங்க இலக்கியத்திற்கு முன்பாக இயற்றப்பட்ட தமிழரின் வாழ்வியலுக்கும் இலக்கணம் வகுத்த பெருமையினைக்கொண்ட தமிழுக்குக் கிடைக்கப்பெற்றிருக்கும் முதல் நூலாகக் கருதப்பெறும் தொல்காப்பியத்தில் நிலங்களை ஐந்து வகையாகப் பிரிக்கும் தொல்காப்பியர், அதில் பாலைத்திணையை ஒழித்து நானிலமாக இவ்வுலகைப் பகுக்கலாம் என்று கூறுகின்றார். அவற்றுள்,

*நடுவண் ஐந்திணை நடுவணது ஒழிய*
*படு திரை வையம் பாத்திய பண்பே*[1]

இவ்வாறான நிலப்பகுதி ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் போன்றவற்றையும் குறிப்பிடுகின்றார்.

*முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே*
*நுவலும் காலை முறை சிறந்தனவே*
*பாடலுள் பயின்றவை நாடும் காலை*[2]

தொல்காப்பியர் குறிப்பிடும் ஏழு வகையான கருப்பொருள் வரிசையில் ஒன்றாக நீர் என்ற ஒன்றும் அமையப்பெறுகிறது. இந்நீரே முதற்பொருளையும், உரிப் பொருளையும் மற்றைய கருப்பொருள்களை நிர்ணயிக்கும் காரணியாகவும் விளங்குகின்றது. உலக உயிர்கள் உயிர் வாழக்கூடிய காரணியாகத் திகழ்வது நீரும் நிலமும் ஆகும். ஏனெனில் நிலங்களுக்குத் தக்கவகையில் தாவரங்களும்

தன்நிலையில் மாறுபடுகின்றன. நீர்வளம் நிறைந்த பகுதிகளில் வளரும் மரம், செடி, கொடி, பயிர்கள் போன்றவைகூட நீரற்ற நிலத்தில் வளருவதில்லை. இவை மட்டுமின்றி விலங்குகளும் பறவைகளும் மனிதர்களும் சூழ்நிலைக்கேற்பத் தங்கள் வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்கின்றனர்.

இச்சூழல்களைக் கருத்தில்கொண்டே தான் இயற்றிய நூற்பாவில் தொல்காப்பியர், இவ்வுலகம் நிலை பெற்றிருப்பதற்கு முதல் ஆதாரமாய் விளங்குவது நீரே என்று எடுத்துரைப்பதை உணரமுடிகின்றது.

**நீரின் இன்றியமையாமை**

மனித வாழ்க்கைக்கு நீர் அடிப்படையானது. இவ்வுலகில் அனைத்து உயிரினங்களுக்கும் நீரே அடிப்படையானது. நீரின் வழியேதான் முதல் உலக உயிர் தோன்றியது. நீரை வாழ்வாதாரமாகக் கொண்டுதான் ஏனைய உயிரினங்கள் வாழ்கின்றன. இயற்கை நமக்குப் பல வளங்களைக் கொடுத்துள்ளது. அவற்றில் முக்கியமானது நீர்வளம் அனைத்து உயிர்களும் வாழ்வதற்கு நீர்த் தேவை. நீர் மனித வாழ்வில் பெறும் இந்த முதன்மை கருதியே இலக்கியங்களும், சமூக வழக்குகளும் நீரின் இன்றியமையாமையை வலியுறுத்துகின்றன. இதனை உணர்ந்தே திருவள்ளுவரும்,

*நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்*

*வான்இன்று அமையாது ஒழுக்கு*[3]

என்று நீரின் அவசியத்தினை உணர்த்துகின்றார்.

மனிதன் உயிர்வாழ காற்று, நீர், உணவு ஆகிய மூன்றும் அடிப்படைத் தேவைகளாகும். காற்று இயற்கையாகவே அதிக அளவில் கிடைப்பதால் அதில் இடர்பாடுகள் ஏதுமில்லை. நீர் அப்படி கிடைப்பதில்லை. நம் நாட்டின் தனிநபர் நீர்வளம் குறித்த ஆய்வுச் செய்தி இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

*ஒரு மனிதனுக்கு தினமும் 16 கிலோ கிராம் காற்றும் 2.5 லிட்டர் நீரும் 3.5 கிலோ கிராம் உணவும் தேவை. மனிதனால் உணவின்றி 35 நாட்கள் உயிர் வாழ முடியும். ஆனால் நீரின்றி 5 நாட்கள்தான் உயிர் வாழமுடியும் என்றால் நீரின் முக்கியத்துவத்தைப் பற்றிக் குறிப்பிட வேண்டுமா என்ன? தற்போது நம் நாட்டின் தனிநபர் நீர் வளம்1035 லிட்டர் ஆகும். ஆனால் நாளொன்றுக்கு தனிமனிதனுக்கு 100 லிட்டர் நீரே போதுமானது. எனவே மீதமுள்ள 935 லிட்டர் நீரை ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு ஆக்க வேலைகளுக்குப் பயன்படுத்த வேண்டும்[4].*

நீர் பூமியின்மீது எங்கும் காணப்படும் பொருளாகும். புவியின் பரப்பில் 70 விழுக்காட்டிற்கு மேல் இது பரவியுள்ளது. நீர் இல்லாமல் உயிர் வாழ்க்கை இல்லை. நம் உடலில் 65 விழுக்காடு நீர் உள்ளது.

உயிரின் ஆதாரம் நீர். உடலின் அனைத்து உறுப்புகளும் செயல்பட நீர் உதவும். உடல் உறுப்புகள் நன்கு செயல்படத் தினந்தோறும் குறைந்தது மூன்று லிட்டர் நீர் குடிப்பது அவசியம். விலங்குகளும் மனிதர்களும் உணவு செரிப்பதற்காக உணவுடன் நீரும் பருகவேண்டும். இரண்டு மாதங்கள் வரை மனிதன் உணவின்றி உயிர் வாழமுடியும். ஆனால் நீரின்றி அவனால் ஒருவாரம் கூட உயிர்வாழ இயலாது என்ற

கருத்துக்களெல்லாம் நீரின் இன்றியமையாமையை வலியுறுத்துவதாக அமையப் பெறுவதனை அறியமுடிகின்றது.

**புவி வரலாற்றில் நீர்**

இவ்வுலகின் தோற்றம் பற்றி ஆராயும் அறிஞர்கள் ஒவ்வொரு காலத்திற்கு ஏற்றவாறு பலவிதமான கருத்துகளைக் கூறி வந்துள்ளனர். அவ்வகையில் உலகத் தோற்றம் பற்றிய ஆய்வு என்பது இன்றளவும் கணிப்பு நிலையிலேயே உள்ளது. சுமார் 450 கோடி ஆண்டு முதல் 500 கோடி ஆண்டுகளுக்கு முந்தைய 'உலகின் தோற்றம்' இருந்திருக்கலாம் என கணித்துள்ளனர்.

*சுமார் 500 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் சூரியனிடமிருந்து பிரிந்து வந்த வாயு வளையம் சுமார் 100 கோடி முதல் 200 கோடி ஆண்டுகள் வரை எரியும் நெருப்புக் கோளமாக இருந்துள்ளது. அதன்பின்னர் சுமார் நூறுகோடி ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து மழை கொட்டி இருக்கலாம் என்றும், அந்தத் தொடர்ச்சியான மழையால் பூமி கொஞ்சம் கொஞ்சமாக குளிர்ந்து இன்றைய நிலையை அடைந்து இருக்கலாம் என்றும் கருதப்படுகின்றது. இரவு, பகல் என்றில்லாமல் 100 கோடி ஆண்டுகளாக மழை பெய்து அழிவடைந்த பின்னும் சில கோடி ஆண்டுகளாக பூமியில் எந்தவிதமான உயிரினங்களும் தோன்றவில்லை என அறிஞர்கள் தெரிவிக்கின்றனர்[5].*

இவ்வாறு உலகில் உயிரினங்கள் பிறப்பதற்கு முந்தைய காலகட்டத்தில் புவிக் கோளத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. அதன்படி தொடர்ந்து பெய்த கனமழையின் காரணமாக புவிக்கோளத்தின் வெளிப்பகுதி போன்று இறுகிக் காணப்பட்டது.

பூமியின் உட்பகுதியும் நீரால் நிரம்பப்பெற்றது. ஆரம்ப காலத்தில் நீரால் நிரம்பியதாகவே பூமி காணப்பட்டு இருக்கவேண்டும். பின்னரே நிலம் என்ற அமைப்பு தோன்றியிருக்க வேண்டும். இக்கூற்றினை உறுதிப்படுத்தும் வகையில் பின்வரும் பாடலடிகள் சுட்டுகின்றன.

*மா நிலம் இயலா முதல் முறை அமையத்து*
*நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய*[6]

அதாவது நீரின் நடுவில் தோன்றிய மிகப்பெரிய நிலப்பரப்பு தோன்றாத காலம் என்று இப்பாடல் உணர்த்துகின்றது என்பதன் வழி பூமி நீரால் நிரம்பி இருந்ததையும் அதன் பின்னரே நிலம் தோன்றியிருக்க வேண்டும் என்பதையும் அறிய முடிகின்றது. இக்கருத்தினை, மேலும் உறுதிப்படுத்தும் வகையில் நீரிலிருந்து நிலம் தோற்றம் பெற்றதனைப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*கரு வளர் வானத்து இசையின் தோன்றி*
*உரு அறிவாரா ஒன்றன் ஊழியும்*
*உந்து வளி கிளர்ந்த ஊழ் ஊழ் ஊழியும்*
*செந் தீச் சுடரிய ஊழியும்;பனியோடு*
*தண் பெயல் தலைஇய ஊழியும்; அவையிற்று*
*உள் முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு*
*மீண்டும் படு உயர்பு ஈண்டி அவற்றிற்கும்*
*உள்ளீடு ஆகிய இருநிலத்து ஊழியும்* [7]

பரம்பொருளாகிய மூலப்பொருளிலிருந்து வானம் தோன்றி வானத்திலிருந்து உலகப் பொருள்களை இயங்கச்செய்யும் காற்று தோன்றியது. காற்றிலிருந்து தீயும் அதிலிருந்து நீர் தோன்றி பனியும் குளிர்ந்த மழையும் உருவானது. பின் மழை வெள்ளத்தில் மூழ்கி மறைந்து கிடந்த நில அணுக்கள் தம் சிறப்பாற்றலால் சேர்ந்து திரண்டு முன்தோன்றிய நான்கு பூதங்களுக்கும் உள்ளீடாகிய பெரிய நிலம் தோன்றியது என்று பரிபாடல் குறிப்பிடுகின்றது. இக்கருத்தை ஆராயும்போது நீருக்குள் ஒடுங்கியிருந்ததே நிலம் என்பதும் நீரே முதலில் தோன்றியதையும் அறியமுடிகின்றது.

**உயிர் தோற்றத்தில் நீர்**

பூமித்தோற்றம் நிலத்தோற்ற முறை அமர்வுகளில் நீர் எத்தகைய இன்றியமையாமை வாய்ந்த முதன்மைகொண்ட பொருளாகத் திகழ்கின்றதோ அதுபோல உயிரினத் தோற்றத்திலும் நீர் முதன்மைத் தன்மையைப் பெறுகின்றது. இவ்வுலகில் நீரில்தான் உயிர்கள் முதன்முதலில் உற்பத்தியாகி இருக்கவேண்டும் என்பது அறிவியலாளர்கள் கருத்து.

***இவ்வுலகத்தில் நீரே முதலில் தோன்றியது. இதனைத் தொடர்ந்து நிலம் தோன்றியது. உயிர்கள் முதலில் நீரை உற்பத்தி ஆயின என்பது அறிவியல் உண்மை*[8]*.***

நீர் இல்லையேல் உலக உயிர்கள் தோற்றம் பெறாமல் போயிருக்கும். ஆகவே உலகில் முதலில் ஒரு செல் உயிரி தோன்றியிருக்க வேண்டும் என்றும் பின்னர்

அச்செல் படிப்படியான பரிணாம வளர்ச்சி நிலையை அடைந்து பல செல்கள் கொண்ட உயிரினங்கள் தோன்றியிருக்க வேண்டும் என்பதே அறிவியலாளர்கள் அறிந்த உண்மையாகும். இக்கருத்தையே தொல்காப்பியம் தம் நூற்பாவில் பின்வருமாறு சுட்டுகின்றது.

*ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே*
*இரண்டு அறிவதுவே அதனொடு நாவே*
*மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே*
*ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே* [9]

மேற்கூறிய நூற்பாவின் செய்திகளில் ஒவ்வொரு உயிரிகளின் இயல்பினை அவை கொண்டிருக்கக்கூடிய உணர்வினைத் தொல்காப்பியர் எடுத்துரைக்கின்றார். ஆகவே ஓரறிவு உடைய உயிர்கள் ஆயினும் நீரில் இருந்தே தோற்றம் பெற்றன என்பதை வள்ளுவரும் தம் குறட்பாவில் தெரிவிக்கின்றார்

***விசும்பின்துளிவீழின்அல்லால்மற்றாங்கே***
***பசும்புல் தலைகாண்பு அரிது***[10]

விண்ணிலிருந்து மழைத்துளி விழாவிடில் பூமியில் ஓரறிவுடைய பசும்புல் கூட துளிர்க்காது என்பதன்வழி ஓரறிவு உயிர்களின் தோற்றத்திற்குக்கூட நீர் இன்றியமையாதது என்பதை உணரமுடிகின்றது.

**நீர் நாகரீகம்**

உலகளவில் மற்ற உயிரினங்களைக் காட்டிலும் மேம்பட்ட உயிரினமாக மனிதன் விளங்குகின்றான். மனிதனின் சமூகம் சார்ந்த நாகரீகப் பண்பாட்டு நிலைகளில் நீரின் பங்கு என்பது இன்றியமையாததாக இடம்பெற்றுள்ளது. உலகின் பழைய மனித நாகரீகங்கள் அனைத்துமே ஆற்றங்கரைகளில் தோன்றி வளர்ந்து வந்துள்ளன.

***சிந்து நதி படுகையின் சிந்துவெளி நாகரிகம்; டை கிரிஸ் ,யூஃரெட்டிஸ் என்ற இரு நதிகளின் படுகையில் வளர்ந்த சுமேரிய நாகரீகம்;ஆப்பிரிக்கக் கண்டத்தின் வட கிழக்குப் பகுதியில் நைல் நதியின் படுகையில் வளர்ந்த எகிப்திய நாகரிகம்;இன்றைய ஈராக், ஈரான், துருக்கி, கிரீஸ், ஜோர்டன் ,இஸ்ரேல், எகிப்து இவ்வளவையும் உள்ளடக்கிய பார்சீயப் பேரரசு ஆண்ட காலத்தில் வளர்ந்த பார்சீய நாகரிகம்; ஆசிய கண்டத்தின் வடகிழக்குப் பகுதியை வளப்படுத்தி வரும் யாங்டை ,ஹையோங்கோ ஆறுகளின் படுகையில் வளர்ந்த சீன நாகரிகம் என ஆசிய கண்டத்தின் பல்வேறு இடங்களில் நாகரிகப் புதுமைகளும் வேறுபாடுகளும் வளர்ந்திருந்தன[11].***

மேற்கூறிய அனைத்து நாகரீகமும் ஆற்றங்கரையோர சமவெளிகளில் தொடங்கி வளர்ச்சியடைந்துள்ளன. மனிதனின் நாகரிக வளர்ச்சியின் தொட்டிலாகக் காணப்படும் நகரங்கள் அனைத்துமே ஆற்றங்கரை சமவெளிகள் வாயிலாக ஒட்டியே வந்தவையாகும். எனவே மனித நாகரிக வளர்ச்சிக்கும் நீர் முக்கியப் பங்காற்றி இருந்து வந்துள்ளதை அறியமுடிகின்றது.

தமிழகக் கடல் ஆய்வு அறிஞர்கள் மேற்கொண்ட ஆய்வுகளில் மிகக் குறிப்பிடத் தக்கதாகக் கருதப்படும், பூம்புகார் கடல்பகுதியில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வில் பழந்தமிழரின் மிகச்சிறந்ததாகிய நாகரீகம் ஒன்று கடலில் மூழ்கியமைக் குறித்து கண்டறியப்பட்டுள்ளது. இந்நாகரீகமே தமிழர்களின் பழமையான நாகரீகம் எனக் கருதலாம் என்கின்றனர் கடலாய்வு அறிஞர்கள். எனவே மனித நாகரிக வளர்ச்சிக்கும் மேம்பாட்டிற்கும் முழுமையான முக்கியக் காரணியாக நீர் அமைந்துள்ளது என்பது தெரிய வருகின்றது.

**உலக நீர்வளம்**

புவியின் மேற்பரப்பிலும் நிலத்தடியிலும் பரவிக் கிடக்கின்ற நீரானது திட, திரவ, ஆவி என்ற மூன்றுநிலைகளில் நிலத்திலும், வளிமண்டலத்திலும் ஒன்றோடொன்று கலந்துள்ளன. திரவநிலையில் பூமியிலும், நிலத்தடியில் திடநிலையில் துருவப்பகுதியில் பனிக்கட்டியாகவும், நீராவியாக வளி மண்டலத்திலும் நீரின் செயல்பாடுகள் நிகழப்பெற்றுள்ளது. நீர் ஒரு நிறமும் சுவையும் அற்ற ஒரு திரவமே ஆயினும் நீரினைப் பல நிலைகளில் ஆராய்ந்து கூறி, அதன் இயல்பினைக்கொண்டு திகழ்கின்றது எனலாம்.

*புவியில் நீர் பரவலின் விழுக்காடு கடலில் 97.2 விழுக்காடாகவும் பனிப்பாறையாக 02.0 விழுக்காடாகவும் நிலத்தடி நீர்மட்டமாக 0. 62 விழுக்காடாகும். தூய நீர் ஏரிகளில் 00. 009 விழுக்காடாகவும் கடல் கழிமுகப் பகுதி மற்றும் உப்பு ஏரிகளில் 00.008 விழுக்காடாகவும் வளிமண்டலத்தில் 00.001*

*விழுக்காடாகவும் ஆறுகளில் 00.01 விழுக்காடாகவும் மொத்தம் 99.81 விழுக்காடாகவும் உள்ளது[12].*

இவ்வுலகில் நீரானது நிலத்தைக் காட்டிலும் மிகுதியாகக் காணப்படுகின்றது. நான்கில் மூன்று பங்கு நீராலானது. உலகில் நீர் மிகுதியாகக் காணப்படின் மனிதனுக்கு பயன்படக்கூடிய நன்னீரின் அளவு என்பது குறைவாகவே உள்ளது. கடல் நீர், உவர் நீர் உலகில் அதிகமாகக் காணப்படுகின்றது. நீரானது நீர்நிலைகளில் நீராகவும், கிணற்றில் நிலத்தடியில் நீராகவும் மண்ணில் உரிய ஈரமாகவும் காற்றில் ஈரப்பசையாகவும் போன்ற தோற்றத்துடன் நீர் அமையப்பெறுகின்றது.

*உலகிலுள்ள மொத்த நீரில் 97.3% கடலிலுள்ள உப்பு நீராகவும் மீதமுள்ள 2.7 சதவீதம் பனியாறு, பனிமலை ஏரி மற்றும் ஆறு குளங்களில் தண்ணீராகவும் உள்ளது. இந்த 2.7 விழுக்காட்டை 100 விழுக்காடு எனக்கொண்டு கணக்கிட்டால் 77 விழுக்காடு பனிக்கட்டியாகும். 22 விழுக்காடு நிலத்தடி நீராகவும் ஒரு விழுக்காடு ஆறு ஏரி மற்றும் குளங்களிலும் உள்ளது[13].*

உலகிலுள்ள மொத்த நீரின் அளவைப் பி. பாலு, *கடல்கள் 97.2 சதவீதமும் பனியாறுகள் 2.15 சதவீதமும் நிலத்தடி நீர் 0.62 நன்னீர் ஏரிகள் 0.009 உப்பு நீரை ஏரிகள் நீர் ஏரிகள் 0.008 மண் நீர் 0.001 ஆற்று நீர் 0.001. இதைத் தவிர ஆறுகள் ஏரிகள் சதுப்பு நிலங்களில் உள்ள நீர் மேற்பரப்பு நீர் ஆகும். இவற்றில் பாதி உப்பு நீராகும். ஓடைகள் மற்றும் ஏரிகளிலுள்ள நன்னீரின் அளவு மிகக் குறைவு*[14] என்று கூறுகின்றார்.

புவிப்பரப்பில் நீரின் அளவினை, *பூமியின் மேற்பரப்பில் உள்ள தண்ணீர் 140 கோடி கன கிலோ மீட்டர் ஆகும். இதில் 97 விழுக்காடு கடல் நீர் ஆகும் 36 கோடி கன மீட்டர் மட்டுமே தூய தண்ணீர் நிரம்பியுள்ளது. இதில் 2.8 கோடி கன கிலோ மீட்டர் அண்டார்டிக் கடல் பகுதியாகவும் கிரீன்லாந்து கடல் மிகுதியாகவும் உறைபனியாகவும் பயனற்ற நிலையில் உள்ளது. ஏரிகள், ஆறுகள், நிலத்தடி நீர் ஆகியன மொத்தத் தண்ணீரில் 80 லட்சம் கிலோமீட்டர் மட்டுமே உள்ளன. எனவே இயற்கையிலேயே நமக்குக் கிடைக்கும் தூய தண்ணீரின் அளவு 0.5 சதவீதம் மட்டுமே*[15] என மல்லிகா குறிப்பிடுகின்றார்.

மனித உடல் ஐந்து அடிப்படைகளைக் கொண்டது. நீர், காற்று, நெருப்பு, மண் மற்றும் ஆகாயம் உடம்பில் 75 சதவிகிதம் நீரால் ஆனது. இயற்கைக்கும் நீரே ஆதாரம். உலக பரப்பில் 70% நீரால் சூழப்பட்டு இருந்தாலும் 2.5% குடிநீராகும். உலக அளவில் இந்தியாவில் உள்ள குடிநீர் ஆதாரம் 4 சதவிகிதமே. ஒரு சதவீதம் குடிநீர் அளவிற்கே ஏரிகளிலும் நதிகளிலும் கிடைக்கிறது. நாம் பயன்படுத்தும் குடிநீரில் 70 சதவிகிதம் விவசாயத்திற்குப் பயன்படுகிறது. மனிதர்களுக்கு நீர் எவ்வளவு அவசியம் என்று எவ்வளவு உணர்ந்தாலும் நாட்டின் பல பாகங்களில் நீர்ப் பற்றாக்குறை மிகுந்தும் அதிகரித்து வருவது கண்கூடு.

**நீர் அறிவியல்**

அறிவியல் மொழியில் கூற வேண்டுமெனில் நீர் என்பது $H_2O$. ஓர் உயிர் வளி அணுவும் இருநீரியல் ஹைட்ரஜன் அணுக்களும் இணைந்ததே $H_2O$. நிலமும் நீரே நிலத்தில் வாழும் உயிரும். நீரே தாவரங்கள் விலங்குகள் அனைத்துமே நீராலானது.

*தாகம் தணிக்கும் வெள்ளரியில் உள்ள நீரின் அளவு 96%, தக்காளியில் 95%, தர்பூசணியில் 93%, பாலில் 87%, முட்டையில் 74%, நிலவாழ் பெரு விலங்கான யானையின் உடல் என்பது 70% நீர். நிலத்துள் வாழும் சின்னஞ்சிறு மண் புழுவின் உடல் 80% நீர். நீர்நில வாழ்வியான தவளை என்பது 78% நீர், கடலில் மிதக்கும் ஜெல்லி மீன் 95% நீர். நம் உடல் கூட 65% நீர்தான். இது மனிதருக்கு மனிதர் வேறுபடலாம். ஒல்லியான மனிதர் தன் உடல் எடையில் 70% நீராகக் கொண்டிருக்கலாம். அதே வேளை பெண் தன்னுடலில் சேமிப்பான கொழுப்பின் காரணமாக உடல் எடையில் 52% நீரை மட்டுமே கொண்டிருக்க கூடும். இதையெல்லாம் சிந்திக்கும் நம் மூளை என்பது 74.5% நீர். உடலில் ஓடும் குருதியில் 83% நீர். நுரையீரல் என்பது 70% நீர் .சிறுநீரகம் 82.7% நீர். தசை என்பது 75.6% நீர். ஒருவரை எலும்பும் தோலுமாய் இருக்கிறார் எனக் கேலி செய்வோமே, அத்தோலில் இருப்பது 64% நீர்; எலும்பும் கூட 22% நீரே. நம் உடலில் உள்ள டி.என்.ஏ. மூலக்கூறும் நீராலானது. பல நூறு கோடிக் கணக்கான நீர் மூலக்கூறுகள் அதில் உள்ளன[16].*

நீர் தட்டுப்பாடு மிகப்பெரிய இடர்ப்பாடு. உலக நிலப்பரப்பில் 2.4 சதவிகிதம் அளவு கொண்ட இந்தியாவில் உலகமக்கள் தொகையில் ஆறில் ஒருபங்கு மக்கள் வசிக்கின்றனர். இது அல்லாமல் உலக அளவிலேயே அதிக எண்ணிக்கையில்

ஐம்பத்தி ஒன்று கோடிக்கும் மேற்பட்ட கால்நடைகளும் உண்டு. ஆகவே மேற்கூறப்பட்ட துறைகளில் முன்னேற்றங்கள் அடைந்தும் மக்களின் உயர்ந்து வரும் எதிர்பார்ப்புகளை நிறைவு செய்வதில் பல குறைபாடுகளையும் உலகளாவிய நெருக்கடிகளையும் இந்தியா சந்தித்து வருகிறது. அவற்றில் நீர் பற்றாக்குறையும், அது சார்ந்த உணவுப் பாதுகாப்பும் மிகவும் அவசர கவனத்தை ஈர்ப்பனவாகும். ஏனெனில் மக்கள் தொகை பெருகிக்கொண்டே போகும் நேரத்தில் நகர்ப்புற மக்களும் தொழில் மயமாக்கலும் உள்கட்டமைப்பு வசதிகளும் விரிவுபடுத்தப்பட்டு மேம்படுத்தப்படும் விவசாயமும் காட்டு வளங்கள் குறைவதும் காடுகள், புல்வெளிகள், நதிகள் உள்ளிட்ட நீர்ப்பரப்பு மிகுதி. நீர்நிலைகள் மற்றும் கடலோர சுற்றுச்சூழல் உள்ளிட்ட இயற்கை வளங்கள் குறைவதும் அதிகரித்துக்கொண்டே போவதால் மக்களின் தேவைகளுக்கும் கிடைக்கும் பொருட்களுக்கும் இடையேயுள்ள இடைவெளி அதிகரித்துக்கொண்டே போவதுடன் இதனால் பாதிக்கப்படக்கூடிய பருவநிலை மாற்றங்களும் ஏற்படுகின்றன.

***நீரியல் சுழற்சி***

பூமிக்குத் தேவையான தண்ணீர் நீரியல் சுழற்சி மூலம் கிடைக்கின்றது என்பது அறிவியல் உண்மையாகும். கடல் நீர் ஆவியாகி மழையாகப் பொழிந்து நீர் நிலைகளை அடைகிறது. பிறகு மீண்டும் ஆவியாகி மழையாக உருப்பெறுகிறது. இதுவே நீரியல் சுழற்சி. இந்த நீரியல் சுழற்சி குறித்த கிரேக்க அறிஞர்களின் விளக்கத்தைப் பார்ப்போம்.

*நிலத்தடியில் உள்ள டாட்டாரஸ் எனும் குகை வாயில் வழியாகவே கடல், குளம், ஆறு ஊற்று ஆகிய அனைத்துக்கும் நீர் வருகிறது*[17] என்றார் பிளாட்டோ.

*அரிஸ்டாட்டில் வானைப் போலவே நிலத்தடியிலும் முகில்கள் செல்கின்றன. அம்மழை அடிப்பகுதிக்கு வந்ததும் ஊற்றுக்களாக மாறி சுரக்கின்றன என்றார். பித்தாகரசின் ஆசிரியரான தேல்ஸ் என்பவரோ கடலிலிருந்து நிலத்தடி பாறை பிறப்புகளின் வழியாக கடல்நீர் ஊடுருவி மலைகளின் அழுத்தத்தால் தரையிலிருந்து ஊற்று நீராக வெளியேறி அருவியாகிறது என்று கண்டுபிடித்தார்*[18].

இதனைப் பட்டினப்பாலை இவ்வாறு குறிப்பிடுகிறது.

*வான் முகந்த நீர்மலைப் பொழியவும்*
*மழை பொழிந்த நீர் கடல் பரப்பவும்*
*மாரி பெய்யும்பருவம் போல் நீர்*
*இன்றும் நிலத்தில் ஏற்றவும்*
*நிலத்தினின்று நீர் பரப்பவும்*
*அளந்துஅறியபலபண்டம்'*[19]

அதாவது காவிரிப்பூம்பட்டினத்தில் துறைமுகத்தில் ஒருபுறம் ஏற்றுமதி பொருட்களை வரிசையாக ஏற்றுவர். மறுபுறம் இறக்குமதி பொருட்களை வரிசையாக இறக்குவர். இரண்டையும் ஒருசேர கண்ட புலவருக்கு அக்காட்சியை, ஒரு அறிவியல் காட்சியாகிறது. இதனைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார். கடல்நீர் வானிற்குச் செல்வதும் பின் நிலத்தில் மழையாகப்பொழிவதும் அந்நீர் ஆறுகளில் ஓடி மீண்டும் கடலை அடைவதுமான நீரியல் சுழற்சி இந்த அறிவியல் காட்சி என்கிறார்.

*கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த வராகமிகிரர் எழுதிய ஒரு நூலில் சூரியன் மழையைப் பெற்றெடுக்கிறது என்று குறிப்பிடுவார். இது நீரியல் சுழற்சியைக் குறிப்பதாக* வட இந்திய வானியல் அறிஞர் ஜிக்யாச வாஸ் வானி பெருமை கொள்வார்[20].

ஆனால் இத்தகைய நீர்ச்சுழற்சி என்பது பல நூற்றாண்டுகளுக்கு முன்பே நிகழ்ந்துள்ளது. அதனைப் பின்வரும் புறநானூற்றுப் பாடல் எடுத்தியம்புகின்றது.

*உரு கெழு ஞாயிற்று ஒண் கதிர் மிசைந்த*

*முளி புல் கானம் குழைப்ப, கல்லென*

*அதிர் குரல் ஏறொடு துளி சொரிந்தாங்கு*

*..............................................*

*நீர் சூழ் நிலவரை உயர, நின்*

*சீர் கெழு விழுப் புகழ் ஏத்துகம் பலவே*[21]

எனக் கூறுவதிலிருந்து மழைக்குக் காரணம் வெப்பக்கதிர்களே என்பதை உணரமுடிகிறது.

இந்த நீரியல் சுழற்சியில், நீராவி குளிர்ந்து மேகமாக மாறுகிறது. காற்று இம்மேகங்களை எடுத்துச்சென்று உலகம் முழுவதும் நீராவியைப் பரவச்செய்கிறது. மேகங்களால் ஈரப்பதத்தைத் தாங்கிக் கொள்ளமுடியாதபோது அது மழை அல்லது பனிவடிவில் விடுவிக்கப்படுகிறது. இந்நீர் நிலத்தினடியில் ஊடுருவிச்சென்று தண்ணீர் பற்றாக்குறையை நிவர்த்தி செய்கிறது. அல்லது நேரடியாக ஏரிகள், ஓடைகள் மற்றும் ஆறுகளில் கலக்கிறது. நல்லந்துவனார் என்னும் புலவர்

*நிறை கடல் முகந்து உராய், நிறைந்து, நீர் துளும்பும் தம்*

*பொறை தவிர்பு அசைவிடப் பொழிந்தன்று, வானம்* [22]

மேகங்கள் நீர் நிறைந்த கடலில் இருக்கும் நீரினை முகந்துகொண்டு வானில் எங்கும் பரவி நீர் நிறைதலால் தளும்பும். தம் பாரம் தீர்ந்து இளைப்பாறும் பொருட்டு பெய்வதைப்போல் மழை பொழிந்தது என்கிறார்.

மற்றொரு பாடலில்

*திரை இரும் பனிப் பௌவம் செவ்விதா அற முகந்து,*
*உர உரும் உடன்று ஆர்ப்ப, ஊர் பொறை கொள்ளாது,*
*கரை உடை குளமெனக் கழன்று, வான் வயிறு அழிபு,*
*வரைவரை தொடித்த வயங்கு வெள் அருவி* [23]

என்கிறார். இப்பாடலின் வாயிலாகக் குளத்தின் கரை உடைந்தால் எவ்வாறு பெருவெள்ளம் ஏற்படுமோ அதுபோல கடலில் நீரை மொண்டு ஆவியாகிய மேகம் குளக்கரை உடைவதுபோல் தன் வயிறு கிழிந்து மழையைக் கொட்டுகின்றது என்று நயம்படப் பாடியுள்ளார்.

மேகமானது கடலிலிருந்து நீரை மொண்டு வந்து அக்கடலிலேயே மழையாகப் பெய்யாவிடில் பெரிய கடலும் தன் வளம் குறைந்துபோகும் என்பதைத் திருவள்ளுவர்,

*நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி*

*தான்நல்கா தாகி விடின்*[24]

என்றும்

*வான்நின்று உலகம் வழங்கி வருதலால்*
*தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று*[25]

என்று குறிப்பிடுகையில் உலகமக்களுக்கு அமிர்தமாக இருப்பது மழையாகும் என்றும், மழையானது ஆவியாகிப் பொழியும் அறிவியல் உண்மையை இன்றைய நவீன கருவிகள் எதனையும் கண்டிராத பழந்தமிழர்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே உணர்ந்து இலக்கியங்களில் பதிவு செய்துள்ளனர்.

தமிழன் மழை பற்றிச் சிந்தித்த சம காலத்தில் வாழ்ந்த கிரேக்க உரோமானிய அறிஞர்களின் கருத்துக்களை அறிந்தால்தான் தமிழர்களின் அறிவியல் சிந்தனை எவ்வளவு உயர்ந்தது என்பதை அறியமுடியும்.

*கணிதமேதை பிதாகோரசுக்கு ஆசிரியராக இருந்தவர் தேல்ஸ் ஆவார். இவர் கி.மு 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் மழையில்லாத காலங்களில் ஆற்றுநீர் தரும் ஊற்றுக்கு, நீர் கடலிலிருந்து, நிலத்துக்கு அடியிலுள்ள பாறைகளிலுள்ள குகை வழிகள் மூலமாக மலைப்பகுதி வரை சென்று மழையின் அழுத்தத்தால் மேலெழுந்து ஊற்று நீராக வருகிறது என்று விளக்கினார்*[26]*.*

கிட்டத்தட்ட அவருக்குப்பின் இரண்டரை நூற்றாண்டுகள் கடந்து வாழ்ந்த சாக்ரடீசின் மாணவரான பிளேட்டோ இந்த புதிர் பற்றிச் சிந்தித்தார். பேடன் என்ற தலைப்பில் வரும் உரையாடலில் இவருடைய கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. நிலத்துக்கடியில் டாட்டரஸ் எனப்படும் பெரிய குகை வாயில் இருக்கின்றன என்றும், இவற்றின் வழியாகக் கடல் குளம், ஆறு, ஊற்று ஆகிய அனைத்திற்கும் நீர் வருகின்றது என்றும் அவர் குறிப்பிடுகின்றார்.

மேலும் இவருடைய மாணவர் அரிஸ்டாட்டிலும் இது பற்றி சிந்தித்து தன் கருத்தை வெளியிட்டுள்ளார். கடல் நீர் ஆவியாக மாறுகிறது. அது ஆகாயத்தில் மேகமாகச் செல்வது போலவே நிலத்தின் அடியிலும் மேகமாகச் செல்கிறது. மலையின் அடிப்பகுதிக்கு வந்ததும் வெண்மேகம் நீராக மாறி ஊற்றுகள் வழியாக சுரக்கிறது என்பது அவரின் கருத்தாகும்.

கி.மு. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த பிளினி, செனகா போன்ற உரோமானியத் தத்துவ அறிஞர்களும் கிட்டத்தட்ட கிரேக்க அறிஞர் தங்களைப் போலவே கருத்துகளைத் தெரிவித்துள்ளனர். இவ்வாறு உலகம் பயன்படுத்தும் நீர் முழுவதற்கும் தோற்றுவாய் மழை ஒன்றுதான் என்று உறுதியான தெளிவு பிறக்க நீண்ட நாட்கள் ஆகின.

மேற்கண்ட பாடற்கருத்துக்களின் வழியும் அறிஞர்களின் கூற்றுக்களின் வாயிலாகவும் பண்டைத்தமிழரின் நீரியல் சுழற்சி சிந்தனையை உணரமுடிகின்றது

**கடல் நீர்**

கடலும், மணலும் பெரும் பகுதியாகக் கொண்டதே நெய்தல் நிலம் ஆகும். சங்க இலக்கியத்தில் கடற்கரை, சோலை, உப்பங்கழிகள் மரங்கள் முதலியவை பற்றிய செய்திகள் பேசப்படுகின்றன. நாவாய் புலால் நாற்றம் வீசும் அலைகளையுடைய பெரிய கடல் நீரினிடையே பிரிந்துகொண்டு போவதை உலகமே கிளர்ந்து எழுவதைப் போன்று விளங்குவதை,

*உலகுகிளர்ந் தன்ன உருகெழு வங்கம்*

*புலவுத்திரைப் பெருங்கடல் நீர்இடைப்போழ*

*இரவும் எல்லையும் அசைவுஇன்று ஆகி*

*விரைசெலல் இயற்கை வங்கூழ் ஆட்டக்*

*கோடுஉயர் திணிமணல் அகன்துறை நீகான்*

*மாட ஒள்ளரி மருங்குஅறிந்து ஒய்ய* [27]

என மதுரை மருதனிள நாகனார் பாடலடிகளின் மூலமாகச் சித்திரிக்கின்றார்.

**மேலாண்மை**

இக்காலகட்டத்தில் மேலாண்மை என்ற சொல் பல துறைகளில் பயன் படுத்தப்பட்டு வருவதைக் காணமுடிகின்றது. மருத்துவத்துறை தொழிற்சாலை, வணிக நிறுவனம், கல்வி நிலையம் உள்ளிட்ட துறைகளில் மேலாண்மை என்பது முக்கியப் பங்காற்றுகின்றது. இதற்கு அனைத்துவிதமான நெறிப்படுத்தப்பட்ட முயற்சியின் முக்கிய இடுமானமாக விளங்குகின்றது. இன்றைய காலகட்டத்தில் நீர் மேலாண்மை, திடக்கழிவு மேலாண்மை ஆகிய துறைகளிலும் இச்சொல் பயன்பாட்டில் இருந்து வருவதைக் காணமுடிகின்றது.

இன்று மேலாண்மை என்பது என்ன? என்ற வினாவிற்குக் கலை சார்ந்ததா? அறிவியல் சார்ந்ததா? என்ற வினாவிற்கு விடையாக, டெய்லர் பின்வருமாறு விளக்கம் அளிக்கின்றார்.

*நிர்ணயித்த விதிகள் நெறிகள் கொள்கைகள் ஆகியவற்றைக் கொண்டு அமைந்திருக்கும் உண்மையான அறிவியல்தான் மேலாண்மை*[28]

மேலாண்மை என்பதற்கு அறிஞர் பலரும் தரும் கருத்துக்களும் குறிப்பிடத்தக்கது.

*தொழிலின் நோக்கத்தை அடைவதற்காக அதன் பலவித நடவடிக்கைகளுக்கு வழிகாட்டுவதிலும் அவற்றைக் கட்டுப்படுத்துவதிலும் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளும் பணியே மேலாண்மை ஆகும்*[29] என்று வில்லியம் ஸ்பிரீகால் கூறுகிறார்.

F.W. டெய்லர் மேலாண்மை என்பது, *சிறப்பாகவும் சிக்கனமாகவும் எதைச் செய்ய விரும்புகிறார்கள் என்பதைப் பற்றி அறிந்துகொள்ளும் கலை*[30] என்று கூறுகிறார்.

மேலாண்மைக்கான சிறந்த கொள்கைகளில் மருத்துவர்களுள் முக்கியமானவராகக் கருதப்படும் ஹென்றி பயல் ஆவார். அவர் மேலாண்மை குறித்து கூறும் கருத்து வருமாறு, ***திட்டமிடல், ஒழுங்குபடுத்துதல், ஒன்று கூட்டுதல், ஒருங்கிணைத்தல், கட்டுப்படுத்துதல் ஆகியவற்றை உள்ளடக்கியது*** [31] என்று குறிப்பிடுகிறார்.

அறிஞர்களின் கூற்றுகளை ஆராயும்போது மேலாண்மை என்பது சமூகத்திற்கும் தனி மனிதனுக்கும் நன்மையளிக்கக்கூடிய சிக்கனமான முழுமையான பலனைத் தரக்கூடிய நடவடிக்கையை ஒன்றிணைக்கப்பட்ட குழு மூலம் பெறுவது என்பதை அறியமுடிகின்றது.

**நீர் மேலாண்மை**

நீர்த் தேவையை முழுவதுமாகப் பூர்த்தி செய்வதென்பது எளிதான காரியம் அல்ல. நீரினை உருவாக்கம் செய்ய இயலாது. ஆகையால் கிடைக்கின்ற நீரை

எம்முறையில் பராமரித்துப் பங்கிட்டு அனைவருக்கும் நீர் பற்றாக்குறையைச் சரி செய்வதே நீர்வள மேலாண்மை ஆகும்.

நீர் மேலாண்மை என்பதற்கு வெ. இறையன்பு அவர்கள், ***முயற்சியின்றி இயற்கையின் கொடையாகக் கிடைக்கும் மழைநீரை வீணடிக்காது அளவாகப் பயன்படுத்தவும். மிகுதியான நீர் தேவையைக் குறைத்து மிக்க பயன்களைப் பெறவும் அமைக்கப்பெற்ற அறிவியல் துறையே நீர்வள மேலாண்மை*** [32] என்று குறிப்பிடுகிறார்.

இயற்கை மனிதனுக்கு அளிக்கும் பெரும் கொடையாக இருப்பது மழை நீரே ஆகும். அத்தகைய மழைநீரை வீணாக்காமல் தேவையான அளவு பயன்படுத்திக் குறைவான நீர் செலவில் முழுமையான வசதிகளைப் பெருக்குதல் ஆகிய ஆய்வுகளில் ஈடுபட்டுள்ள அறிவியல் துறையாக நீர் வள நிர்வாகம் (water management) என்னும் துறை அமைந்துள்ளது. சமூகத்தின் வளமான வாழ்வாதாரங்களில் ஒன்றாக விளங்கும் நீரைப் பராமரிக்கும் நோக்கில் நீர்மேலாண்மை என்பது இன்றைய காலத்தில் பயன்படுத்தப்பட்டு வருகின்றது.

நீர் மேலாண்மை என்பது, ***நீரை உபயோகமான முறையில் பயன்படுத்து வதற்காகத் திட்டமிடுவது விருத்தி ஆக்குவது, விநியோகம் செய்வது, நிர்வாகம் செய்வது, ஒழுங்குபடுத்துவது ஆகிய கொள்கைகளைக் கொண்டது***[33].

நீர் மேலாண்மைக்கு விளக்கமளிக்கும் நிலையில் நீராதாரங்களை வளப்படுத்த மேற்கொள்ள வேண்டிய குறிப்புகள் பகுதிகள் பின்வருமாறு கூறப்படுகின்றது.

1. நீர்வள பாதுகாப்பு
2. நீர் நிலைகளை உருவாக்கல்
3. நீர்நிலைகளை நிர்வாகம் செய்தல்
4. நீர்ப்பாசன முறைகளை மேம்படுத்துதல்
5. நிலத்தடி நீர் மட்டத்தை உயர்த்துதல்

மேற்கூறிய முறைகளை நடைமுறைபடுத்துகின்றபோது நீர் பிரச்சினைகளுக்கு ஓரளவிற்கு முடிவுகாண இயலும். நீர்ப்பிரச்சினை என்பது முழுவதுமாக தீர்க்க இயலாத ஒன்று. ஏனெனில் நீரை உற்பத்தி செய்ய இயலாது. தண்ணீரை சிக்கனமாகப் பயன்படுத்திப் பாதுகாக்கலாமே ஒழிய, வேறு எத்தகைய முறையில் இதற்குத் தீர்வு என்பது காண இயலாது.

சமீப காலத்தில்தான் நீர் மேலாண்மை குறித்த யோசனைகள் ஏற்பட்டு நீரைப் பாதுகாக்க வேண்டியதன் முக்கியத்துவம் உணரப்பட்டு வருகின்றது. நீர் மேலாண்மை குறித்த இரு கருத்தாக்கங்கள் உலக நாடுகளிடையே நிலைபெற்றுள்ளன. அவை,

- கிடைக்கும் நீரை வைத்துக்கொண்டு வேண்டியதைத் தேவையானவரை பெற்று சமாளிக்க முயற்சிப்பது.
- இயற்கையில் கிடைக்கும் பொருளையும் அதன் தனித்தன்மையையும் பயனையும் ஆராய்ந்து அறிந்து அதனை சிக்கனமாகப் பயன்படுத்துவது போன்றவையாகும்.

இத்தகைய நிலைகளை உலக நாடுகள் அனைத்துமே செயல்படத் துவங்கியுள்ளன. அதுமட்டுமின்றி பலவிதமான திட்டங்களை வகுத்துக் கொண்டிருப்பதும் நீர் வளங்களைப் பாதுகாத்து நிலத்தடி நீர்மட்டத்தை உயர்த்தி நீர் தேவையில் தன்னிறைவான நிலையைப்பெற துவக்கிவிடக்கூடிய வகையில் உலகளாவிய பல்வேறு நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டு நாட்டுமக்களிடம் விழிப்புணர்ச்சி ஊட்டப்படுகிறது.

**வானியல் சிந்தனை**

நீரியல் சுழற்சி என்பது இடைவிடாது நடைபெற்றாலும் எல்லாக் காலங்களிலும் மழைபெய்யும் என்று உறுதியாகக் கூற இயலாது. மழை பொழிவதற்கான சில நிகழ்வுகள் பற்றிய வானியல் சிந்தனைத்திறனை சங்ககாலத் தமிழர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். எனவே மழையின் வருகையை வானியல் அறிவுகொண்டு ஆராயப் புகுந்தனர். அதன்படி கோள்களின் நிலையை வைத்தும், மேகத்தின் இயக்கத்தைக் கொண்டும், காற்று வீசும் திசையை நோக்கியும், மழை வருவதற்கான சில நிமித்தங்களைக்கொண்டு கணிக்கும் திறன் சங்ககால மக்களிடம் மிகுதியாகக் காணப்பட்டது.

**கோள்களின் இயக்கத்தைக் கொண்டு கணக்கிடல்**

மழைப்பொழிவு நிகழ்வதைச் சங்ககால மக்கள் கோள்களின் இயக்கத்தைக் கொண்டு கணித்துள்ளனர். அவ்வகையில் சங்க இலக்கியங்களில் மழைக்குரிய கோளாகச் சுட்டப் பெறுவது வெள்ளிக்கோள் ஆகும். வெள்ளிக்கோள் செல்லும்

திசையை நோக்கி வானியலைக் கணித்துள்ளனர். இச்செய்தியினைச் சங்க இலக்கியப் பாடல்களில் பல இடங்களில் கூறப்பட்டுள்ளன.

*வயங்கு கதிர் விரிந்து வானகம் சுடர்வர,*

*வறிது வடக்கு இறைஞ்சிய சீர் சால் வெள்ளி*

*பயம் கெழு பொழுதோடு ஆநியம் நிற்ப*

*கலிழும் கருவியொடு கை உற வணங்கி,*

*மன் உயிர் புரைஇய வலன் ஏர்பு இரங்கும்*

*கொண்டல் தண் தளிக் கமஞ் சூல் மா மழை*[34]

மேற்கூறிய பாடல் அடியில் வடக்கே சாய்ந்துள்ள வெள்ளிக்கோளானது ஏனைய கோள்களுடன் இணைந்து காணப்பட்டால் மழைக்குரிய நல்ல அறிகுறியாகத் தென்பட்டது என்றும், இதனால் நீர்த்துளிகளால் நிறைந்த சூலுற்ற மேகமானது வலமாகச் சுழன்று எழுந்ததன் காரணமாக கார்காலத்திற்கான மழைத் தோற்றம் ஏற்படத் தொடங்கியது என்று குறிப்பிடுவதன் வழி வெள்ளிக்கோள் மற்ற கோள்களுடன் வடக்கே சாய்ந்து காணப்படின் மழைப்பொழிவு நிகழும் என்பது தெளிவாகின்றது.

இதில் குறிப்பிடப்படும் ***வடக்கு இறைஞ்சிய*** என்னும் தொடர் வெள்ளிக்கோள் வடக்கு சாய்ந்து இருப்பதால் மழை வளம் நிகழும் என்பதைக் குறிக்கிறது. இதனைச் சிறப்பிக்கும் வகையில் ***சீர்சால் வெள்ளி*** என்றும் அடையாளப்படுத்தப்பட்டுள்ளது.

*பயம் கெழு வெள்ளி ஆநியம் நிற்ப,*

*விசும்பு மெய் அகல, பெயல் புரவு எதிர*[35]

மேற்குறிப்பிட்ட பதிற்றுப்பத்து பாடலில் செய்தியினை வலுப்படுத்தும் விதமாக வெள்ளிக் கோளானது மற்ற கோள்களுடன் இணைந்து மழையின் அறிகுறிகள் தோன்றக் காரணமாக விளங்கிற்று என்று குறிப்பிடுகின்றது. எனவே வெள்ளிக் கோள் அதற்குரிய நிலையில் நின்றதனால் பருவமழை உண்டாயிற்று என்பதை அறியமுடிகின்றது.

மழைக்குரிய வெள்ளிக்கோளானது தனித்துத் தென்திசையில் இயங்கினாலும் அல்லது செவ்வாய் கோள் சென்ற திசையில் பயணித்தாலும் மழை பொய்க்கும் என்று கண்டறிந்துள்ளனர்.

*அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது*

*மழை வேண்டு புலத்து மாரி நிற்ப,*[36]

மேற்குறிப்பிட்ட பதிற்றுப்பத்து பாடலடி செவ்வாய்க்கோள் சென்று இயங்கும் திசையில் மழைக்கான வெள்ளிக்கோள் இயங்காமல், இயல்பாகத் தன் திசையில் இயங்கியதால் மழைப்பொழிவு நிகழவில்லை என்பதைக் குறிப்பிடுகின்றது. மேலும் வெள்ளிக் கோளானது தென்திசையில் இயங்கினால் மழைப்பொழிவு நிகழாது என்று பெரும்பாணாற்றுப்படையில் காவிரியின் சிறப்பு பற்றிப் பேசும் இடத்தில் புலவர் குறிப்பிடுகிறார்.

*வசையில்புகழ் வயங்குவெண்மீன்*

*வசை இல் புகழ் வயங்கு வெள் மீன்*

*றிசைதிரிந்து தெற்கேகினுந்*

*திசை திரிந்து தெற்கு ஏகினும்*

*தற்பாடிய தளியுணவிற்*

*தன் பாடிய தளி உணவின்*

*புட்டேம்பப் புயன்மாறி*

*புள் தேம்ப புயல் மாறி*

*வான்பொய்ப்பினுந் தான்பொய்யா* [37]

அதாவது வெள்ளிக்கோள் தான் நிற்றற்குரிய திசையாகிய வடக்கே நிற்காமல் தென்திசை நோக்கிச் சென்றமையால் மழைப்பொழிவு நிகழவில்லை என்று குறிப்பிடுகின்றது. தென்திசையில் வெள்ளிக்கோள் இயங்கினால் வறட்சி ஏற்படும் என்ற கருத்தைக்கூட பொய்ப்பிக்குமாறு சில நேரங்களில் மாறி வெள்ளிக்கோள் தென்திசையில் இயங்கினாலும் மழை பொழியும் என்று கணித்துள்ளனர் என்பதை மதுரைக்காஞ்சி பாடல் குறிப்பிடுகின்றது.

*கல் காயுங் கடுவேனி லொடு*

*இரு வானம் பெயலொ ளிப்பினும்*

*வரும் வைகல் மீன் பிறழினும்*

*வெள்ளமா றாது விளையுள் பெருக*[38]

மலைகள் காயும் அளவு மிகுந்த முதுவேனில் காலத்தில் மேகம் தன்னிடத்து மழையை மறைத்துக்கொண்டாலும், வெள்ளி என்னும் கோள்மீன் தான் தோன்றுவதற்குரிய நாளில் தோன்றி தனக்குரிய திசையில் இயங்காது, திசைமாறி தென்திசையில் திரிந்தாலும், ஆறுகளில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது என்று

குறிப்பிடுவதன் வழி வெள்ளிக்கோள் தென்திசையில் சென்றாலும் மழை நிகழும் என்பதை உணரமுடிகின்றது.

**மேகத்தின் இயக்கத்தைக்கொண்டு கணக்கிடல்**

சங்ககால மக்கள் மேகத்தின் இயக்கத்தைக் கொண்டும் மழைப்பொழிவு நிகழப்போவதைக் கணித்துள்ளனர். மேகத்தின் இயக்கத்தை உட்கொண்டு மழை பொழிவை குறிஞ்சியில் மக்கள் கணித்ததாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*பல் மர உயர் சினை மின்மினி விளக்கத்து,*

*செல் மழை இயக்கம் காணும்*

*நல் மலை நாடன் காதல் மகளே*[39]

பருவமழை நிகழப்போகிறது என்பதை மேகங்கள் கூட்டமாகச் செல்வதாலும் அது இயங்கும் திசையை உணர்ந்தும் மழைப்பொழிவை அறிந்தனர். அதுமட்டுமின்றி காற்று வீசுகின்றபோது மேகமானது வலமாகச் சுழன்றால் மழை கண்டிப்பாக பொழியும் என்பதை அறிந்திருந்தனர். இதனை,

*............. ........... ........... வலன் ஏர்பு*

*அம் கண் இரு விசும்பு அதிர ஏறொரு*

*பெயல் தொடங்கின்றே வானம்*[40]

என்ற ஐங்குறுநூறு பாடல் வரிகள் வான் மேகமானது வலமாக எழுந்து கரிய வானம் அதிருமாறு இடி இடித்து மழையைப் பொழிந்ததாகக் குறிப்பிடுகிறது. இக்கருத்தையே பின்வரும் பாடல் சுட்டுகின்றது.

*வையகம் பனிப்ப வலன் ஏர்பு வளைஇ*

*பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென* [41]

என்கின்ற பாடல் வரிகளும் மேகங்கள் வலமாகச் சூழ்ந்து எழுந்தால் மழை நிச்சயம் பொழியும் என்றும் மேகமானது எத்திசையில் தோன்றினாலும் கிழக்கு நோக்கிச் செயல்பட்டால் நிச்சயம் மழை பொழியும் என்றும் கணித்துள்ளனர்.

**காற்றின் திசையைக் கொண்டு கணக்கிடல்**

மேகத்தின் இயக்கத்தைக் கொண்டும் கோள்களின் நிலையைக் கொண்டும் மழை பொழிவை உணர்ந்த சங்ககாலத் தமிழர்கள், காற்று வீசும் திசையைக்கொண்டும் மழைப்பொழிவு நிகழப்போவதை உணர்ந்திருந்தனர். காற்று வலமாகச் சுழன்று வீசினால் மழை தப்பாது பொழியும் என்றும் கணித்தகாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*மலை நாறிய வியன் ஞாலத்து*

*வல மாதிரத்தான் வளி கொட்ப . . .* [42]

நீர் நிலையிலிருந்து நீருண்ட மேகங்களைக் காற்றானது ஒன்று திரட்டி வலமாகச் சுழன்று வீசிற்று. இச்செயலால் மேகக்கூட்டமானது ஓரிடத்தில் அடர்த்தி அதிகமாகி மழைப்பொழிவு நிகழ்ந்தது என்று கூறுவதன் வழியாகக் காற்றின் திசையைக் கொண்டு வானியல் அறிவினைப் பெற்றவர்கள் நம் தமிழர்கள் என்பதை உணரமுடிகின்றது. எனவே காற்றும் மேகங்களும் வலமாகச் சுழன்று வீசினால்

கண்டிப்பாக மழை பெய்யும் என்பதை அனுபவ அறிவால் நன்கு உணர்ந்தவர்கள் நம் சங்ககாலத் தமிழர்கள்.

**பருவமழை சிந்தனை**

ஓராண்டில் குறிப்பிட்ட கால பருவங்களில் மட்டும் தொடர்ச்சியாக மழையைக் கொடுப்பவற்றை பருவமழைக்காலம் என்ற பெயரால் அழைக்கின்றோம். சங்க இலக்கியக் காலத்திலும் இத்தகைய பருவமழைக் காலங்கள் இருந்தன என்பதையும் இலக்கியத்தின்வழி அறியமுடிகின்றது. இக்காலத்திலும்கூட நம் தமிழகத்திற்கு மழைவளம் கொடுக்கக் கூடிய காலகட்டத்தை இரண்டு பிரிவாகப் பிரிக்கின்றோம்.

**வடகிழக்குப் பருவமழை**

சங்க இலக்கிய காலந்தொட்டு இன்று வரையிலும் தமிழகத்திற்கு மிகுதியான மழையைக் கொடுப்பது வடகிழக்குப் பருவமழை. வடகிழக்குப் பருவமழை நிகழக்கூடிய நிலையினைச் சங்ககால மக்கள் எவ்வகையில் கணித்தனர் என்பதைக் குறிப்பிடுகையில், கிழக்குத் திசையிலிருந்து காற்று வீசத் தொடங்கியதன் காரணமாக மழை பொழிகிறது என்றும் இத்தகைய கிழக்குத் திசைக்காற்றை ‘ *கொண்டல்’* என்ற பெயரால் அழைத்துள்ளமையை சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது.

> *கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்,*
>
> *திரைப் பிதிர் கடுப்ப முகடு உகந்து ஏறி,*
>
> *நிரைத்து நிறை கொண்ட கமஞ் சூல் மா மழை*[43]

மேற்குறிப்பிட்ட பாடல் வாயிலாகக் '*கொண்டல்*' கீழைக் காற்று வீசுவதால் வானத்தில் செறிவுற்ற மேகங்கள் மழையின் உச்சியை அடைந்தமையால் வரிசையாக சூல் கொண்டதாகவும் பின்னர் மேகமானது நிறைந்த மழையைப் பொழிந்ததாகவும் இது பருவமழைக்கான அறிகுறி என்றும் சுட்டுகின்றது.

இக்காலத்திலுங்கூட கிழக்குத் திசையிலிருந்து வீசும் காற்றினை வடகிழக்குப் பருவக்காற்று என்ற பெயரால் அழைக்கின்றோம். மேற்கூறிய கருத்தினையே பின்வரும் பாடலும் உணர்த்துகின்றது. அதாவது மிகுதியான அளவில் மழையைக் கொடுக்கக்கூடிய திசையைக் '*குணதிசை*' என்று பெயரிட்டு அழைத்துள்ளனர். இதனை,

*குண கடல் முகந்து குடக்கு ஏர்பு இருளி*
*மண் திணி ஞாலம் விளங்க, கம்மியர்*
*செம்பு சொரி பானையின் மின்னி எவ் வாயும்*
*தன் தொழில் வாய்த்த இன் குரல் எழிலி* [44]

இப்பாடல் வழி கீழைக் கடலிலிருந்து நீரை முகந்து கொண்ட மேகங்கள் நன்கு இருண்ட பின்பு மழையைக் கொடுத்ததாகக் கூறுகின்றது. இங்கு ***கீழைக் கடல்மேகம்*** என்பது வடகிழக்குப் பருவமழையைக் கொடுக்கும் மேகமாகக் கருத இடமுண்டு.

இவ்வகை மழையைக் குறித்துப் பரிபாடல் கூறுகிறது.

*நிறை கடல் முகந்து உராய் நிறைந்த நீர் துத்தம்*
*உழைத்தவர் தவிர்*[45]

வற்றாத கடல்நீரை முகில்கள் மேல் எடுத்துச் சென்று வான் எங்கும் பரவி, சுமை தாங்காது நிலப்பகுதிகள் அனைத்தையும் மறைப்பது போல மிக்க நீரைப் பொழிந்தன என்றும் இதன் அறிவியல் விளக்கம் முகில்கள் மலைமீது மோதாமல் நிலத்தில் புரிந்ததை விளக்கும். இது வடகிழக்குப் பருவமழையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். காரணம் பருவமழை மலைகள்மீது மோதாது உள் நிலத்தில் புகுந்து சென்று வலுவிழக்கிறது. தவிர புயல் மழையாகவும் உள்ளது. பொதுவாக வடகிழக்குப் பருவமழை நம்பகத்தன்மை அற்றது. பல நேரங்களில் பொய்த்து விடும். இலங்கைத் தீவு மறைப்பதால் இராமநாதபுரம், தூத்துக்குடி, திருநெல்வேலி போன்ற மாவட்டங்களுக்கு இம்மழை அவ்வளவாகப் பலன் தருவதில்லை.

எனவே தற்கால வடகிழக்கு பருவமழைக்காலம் அக்டோபர் மாதம் முதல் டிசம்பர் மாதம் வரையிலான காலம் ஆகும். இருப்பினும் சங்க இலக்கியத்தில் இவ் வடகிழக்கு பருவமழை குறித்த காலங்கள் ஏதும் குறிப்பிடப்படவில்லை. எனினும் சங்ககாலம் முதல் இன்று வரை தமிழகத்திற்கு மிகுதியான மழை நீர்வளத்தைத் தருவது வடகிழக்கு பருவமழையே எனக் கருதலாம்.

**தென்மேற்கு பருவமழை**

சங்க இலக்கியத்தில் தென்மேற்குப் பருவமழையை ***மலைத்தடுப்பு மழையாகக்*** குறிப்பிடுகின்றனர். அதாவது மேகத்தின் இயக்கம் மலையினால் தடுக்கப்பட்டு மலைப்பிரதேசங்களில் மழை வளத்தைக் கொடுக்கும் மலைத்தடுப்பு மழை பற்றிய

குறிப்புகள் சங்க இலக்கியத்தில் காணப்படுவதாக அறியமுடிகின்றது. இதனை மேகத்தின் இயக்கத்தினை மலையினால் கட்டுப்படுத்தப்படுவதை,

*ஆடுமழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை*[46]

என்ற பாடல்வரியில் இயங்குகின்ற மேகத்தைத் தன் உயரத்தால் தடுக்கும் பயன் மிக்க மலை என்று குறிப்பிடுகின்றது. இதன்வழி மேகத்தின் இயக்கத்தை மலை கட்டுப்படுத்துவதை அறியமுடிகின்றது. மேலும் மேகமானது ஓரிடத்தில் கூடி அதனால் ஏற்பட்ட சரிவின் காரணமாக, அடர்த்தி அதிகமாகி மலையில் மழைப்பொழிவு நிகழ்ந்ததாகப் பின்வரும் பாடல் சுட்டுகின்றது.

*வாய்த்து வரல் வாரா அளவை, அத்தக்*
*கல் மிசை அடுக்கம் புதையக் கால் வீழ்த்து,*
*தளி தரு தண் கார் தலைஇ,*[47]

இவ்வாறான பாடல்களின் செய்திகள் வழியே தென்மேற்குப் பருவமழை யாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்பதை, மேற்கூறிய பாடலின் வழி அறிய முடிகின்றது. தற்கால வானியல் அறிஞர்கள் பெருமழையை மூன்றாகப் பிரிக்கின்றனர்.

*குளிர்ந்த காற்று கணிசங்களும் வெதுவெதுப்பான காற்று கணிசங்களுடன் மோதுவதால் பெய்வது முகப்பு பெருமழை, நிலப்பரப்பு அல்லது நீர்ப்பரப்பின்மீது ஏற்படும் வெப்பச் சலன த்தினால் பெய்யும் இடி மின்னல் பெருமழை எனப்படுகிறது. மலையின் பெருமழை மலைத் தொடர்களின்மீது காற்று கணிசம் மோதி மேல்*

*எழுவதால் காற்று குளிர்ச்சியடைவதன் மூலம் உண்டாகிறது* [48] என்று மழையை வகைப்படுத்தியுள்ளனர்.

எனவே தற்கால வானியல் அறிஞர்கள் பகுக்கும் மழையின் வகையினைச் சங்ககாலப் புலவர்கள் பாடல் வழியே சுட்டிச் சென்றுள்ளனர் என்பதை மேற்கூறிய கருத்தின் வாயிலாக அறிய முடிகின்றது. தென்மேற்குப் பருவமழையின் தன்மையைப் பரிபாடல்,

*கடல் குறை படுத்த நீர் கல் குறைபட விரித்து*
*உடல் ஏ ரூ உருமீன் அம்ஆர்ப்ப மழை*
*மாலை முற்றும் பெய்து சூல் முதிர் முகில்*[49]

கடலின் நீரை எடுத்து வானுக்குச் சென்று மலைகளில் மோதிப் பொழியும் என்று வர்ணிக்கிறது.

*தென்மேற்கு பருவ மழையை மேற்குத் தொடர்ச்சிமலை தடுப்பதை நாம் இயற்கையின் வஞ்சனையாகக் கருதக்கூடாது. வேறு இரு வழிகளில் தென் மேற்குப் பருவமழையின் பலன் நமக்குக் கிடைக்கிறது. முதலாவது வழி கணவாய்கள். இரண்டாவது ஆறுகள் 24 கி.மீ அகலமுடைய பாலக்காட்டுக் கணவாய், செங்கோட்டைக் கணவாய், ஆரல்வாய்மொழிக் கணவாய் ஆகிய மூன்று திறப்புகள் மேற்குத் தொடர்ச்சிமலையில் அமைந்துள்ளன. பருவக்காற்றின் ஒரு பகுதி இக்கணவாய்களின் வழியே தமிழகத்துள் நுழையும். பெரும் மழை பொழியா விட்டாலும் பலத்த ஈரக்காற்று கிடைக்கும். அதைத்தான் நாம் 'ஆடிக்காற்று'*

*என்கிறோம். இக்காற்றால் வெப்பம் குறைவதோடு மேற்கு மற்றும் நடு மாவட்டங்களில் சிறிது மழையும் கிடைக்கும். இரண்டாவது பலன் காவிரி, வைகை, தாமிரபரணி உள்ளிட்ட ஆறுகள் அனைத்தும் மேற்குத் தொடர்ச்சி மலையின் அன்பளிப்பே"* என்கிறார். தற்காலத்தில் தென்மேற்குப் பருவமழைக்குரிய காலமாக ஜூன் முதல் செப்டம்பர் மாதம் வரையிலான காலங்களைக் குறிப்பிடுவர்.

**நீர்நிலைகள்**

சங்க இலக்கியங்களின் வழியாக நீர்நிலை குறித்த செய்திகளையும் நீர்நிலைகள் எந்நிலத்திற்குரியவை, எத்தன்மையது, அதன் வடிவங்கள் போன்றவற்றை பற்றிய செய்திகளை எல்லாம் சங்க இலக்கியங்களின் வழியே உணர்ந்து கொள்ளமுடிகின்றது. இந்நீர்நிலைகளில் எவையெவை இயற்கை நீர் நிலைகள், செயற்கை நீர்நிலைகள் என்பதை அறிந்துகொள்ள சங்க இலக்கியங்கள் துணைசெய்கின்றன.

சுனை, அருவி, காட்டாறு போன்றவற்றை இயற்கை நீர்நிலைகள் என்றும், மனித முயற்சியால் அமையப்பெறாத இந்நீர்நிலைகள் இயல்பாக அமைந்தவை என்பதால் இவைகள் இயற்கை நீர்நிலை என்றும் மனித முயற்சியால் அமைக்கப்பட்டவற்றை செயற்கை நீர்நிலை என்றும் அழைத்தனர். உலக உயிர்களின் உயிர்ப்பேற்றிற்குக் காரணமாக விளங்கும் நீருள்ள நீர்நிலைகளின் பல்வேறான பெயர்களைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*இலஞ்சி கயங்கேணி கோட்டக மேரி*
*மலங்கன் மடுவோடை வாவி-சலந்தரம்*

*வட்டந் தடாக நளினி மடுப்பொய்கை*

*குட்டங் கிடங்கு குளம்*[51]

இலஞ்சி, கயம், கேணி, கோட்டகம், ஏரி, மலங்கல், மடு, ஓடை, வாவி, சலந்தரம், வட்டம், நளினி, பொய்கை, குட்டம், கிடங்கு, குளம் என்று வகைப்படுத்துவதைக் காணமுடிகின்றது.

**சுனை**

மலையும் மலை சார்ந்த குறிஞ்சி நிலத்தில் அமைந்த இயற்கை நீர்நிலையே சுனையாகும். இதனை ***மலை ஊற்று*** [52] என்று மெய்யப்பன் தமிழ் அகராதி விளக்கம் அளிக்கிறது. சுனை பாறையின்மீது அமைந்ததாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

***மல்லல் அறைய மயிர் சுனை***[53]

வளம்மிக்க பாறையில் தெளிந்த நீரினையுடைய சுனை இருந்ததை அறியமுடிகின்றது.

*நன்கு வரையறுக்கப்பட்ட வெளி முகத்தின் வழியாக ஒரு குறிப்பிட்ட பகுதியில் இருந்து நிலப்பரப்பிற்கு வெளியே நிலநீர் பாய்வது சுனை எனப்படும். இவ்வாறு வெளியில் பாயும் நீர் சொட்டு சொட்டாகவும் தொடர்ந்துபாயும் நீரோடைகளாகவும் இருக்கும். ஒரு குறிப்பிட்ட பகுதியிலிருந்து நீர் பூரித்ததனால் வெளியாகும் நிலையில் உள்ள நீர்க்கசிவு*[54] என்று கே. ஆர். திருவேங்கடசாமி குறிப்பிடுவதிலிருந்து சுனை என்பதன் சிறப்பினை உணரமுடிகின்றது. பாறையின் இடுக்குகளில் குறுகிய வடிவத்தில் சுனைகள் காணப்பட்டன என்பதனை,

*எறும் பயளையிற் குறும்பல் சுனைய*
*உலைக்கல் அன்ன பாறை ஏறிக்* [55]

என்ற பாடலினடியில் மிகப்பரந்த பாறையில் சிறிது சிறிதாக குறுகிய பல சுனைகள் காணப்பட்டதாகவும் அச்சுனைகள் பார்ப்பதற்கு எறும்பு புற்றுகள் போல் இருந்ததாகவும் ஓதலாந்தையார் குறிப்பிடுகின்றார்.

அதுமட்டுமின்றி பாறையின்கண் போன்று காணப்பட்டதாகச் சங்கப்புலவர்கள் குறிப்பிடுகின்றனர்.

*பறைக் கண் அன்ன நிறைச்சுனை பருகி*
*பறைக் கண் அன்ன நிறைச் சுனை தோறும்*[56]

என்ற பாடல்வழி பாறையின் கண்ணை ஒத்ததாக சுனையின் வடிவம் காணப்பட்டதாகக் குறிப்பிடுகின்றது.

**சுனையின் இயல்பு**

சுனையின் இயல்பினை அறிய வேண்டுமாயின் சங்கப்பாடல்களில் அது குறித்த சொலவடைகள் துணை செய்கின்றன. ஆழமானது, குறுகியது, நீண்டது, அகலமானது ஆகிய இயல்பினைக் கொண்டவையாக சுனைகள் இருந்தன.

*பாறை நெடுஞ்சுனை*[57]

*நீர் கொள் நெடுஞ் சுனை அமைந்து பார்த்து*[58]

*பாறை நெடுஞ் சுனை*[59]

இப்பாடலடியில் அணைகள் நீர் நிரம்பிய நீண்டவையாகக் காணப்பட்டதாகக் குறிப்பிடுகின்றனர். அதுபோல சுனைகளும் இருந்ததை,

*குறுஞ் சுனைக் குவளை அடைச்சி*[60]

மேலும் ***அகன்ற இடம்*** என்னும் பொருளில் சுனை இருந்ததை நற்றிணைப் பாடல் பின் வருமாறு குறிப்பிடுகின்றது.

*சூருடை நனந்தலை சுனை நீர் மல்க*[61]

இதில் ***நனந்தலை*** என்பது அகன்ற இடம் என்ற பொருளில் மலையின் மேல் சுனைகள் இருந்ததற்கு அடையாளமாக அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. சுனை நீர் மிகவும் இனிமை வாய்ந்தது என்பதை அறிய சங்க இலக்கியப் பாடல் ஒன்று அதற்கான விளக்கத்தை எடுத்தியம்புகின்றது.

*பழுமிளகு உக்க பாறை நெடுஞ்சுனை*
*முழுமுதற் கொக்கின் தீம் கனி உதிர்ந்தென*
*புள் எறி பிரசமொடு ஈண்டி பலவின்*
*நெகிழ்ந்து உகு நறும் பழம் விளைந்த தேறல்*[62]

வறுத்த மிளகு சிதறிக் கிடக்கின்ற கற்பாறையில் மேலுள்ள நீண்ட சுனையில் பெரிய அடியை உடைய மாவின் இனிய பழங்கள் உதிர்ந்து உள்ளன. அப்பழத்தாலும் பலாவின் விரிந்து தேன் சிந்தும் நறிய உண்டாகிய கள்ளின் தெளிவு நிரம்புதலால் தன்னை நுகரும் தேனீக்களைத் தேனடைகள் உகுத்தத் தேனுடன் கலந்து, சுனை

நீர்மிக்க இனியதாக இருந்துள்ளது. மேலும் மலர்களும் பழங்களும் தேனும் மூலிகைகளும் சுனை நீரில் கலந்து உள்ளதால் இனிய நீராகச் சுனைநீர் விளங்கிற்று.

இத்தகைய சுவைமிக்க சுனைநீர் மலைசார்ந்த பகுதிகளில் வாழ்கின்ற மக்களுக்கும் விலங்குகளுக்கும் நீராதாரமாக விளங்கியமையோடு நீராடவும் வேளாண் தொழில் புரியவும் பயன்பட்டது. குறிஞ்சிநில மக்களின் வேளாண்மைக்கு முக்கிய நீராதாரமாகச் சுனைநீர் விளங்கிற்று.

அருவி

குறிஞ்சி நிலப்பகுதியின் மற்றொரு நீர்நிலையாகக் கருதப்படுவது அருவி ஆகும். மலையிலிருந்து விழும் வெள்ளிய நீர் தொடரே இவ்வருவி ***மழையின்வீழ் ஆறு***[63] என்று அருவினை, கதிர்வேல் பிள்ளையின் தமிழ்ச்சொல் அகராதி குறிப்பிடுகின்றது. மழையின்றி அருவிகள் இல்லை என்பதனை,

*கழை நரல் வியல் அகம் வெம்ப மழை மறந்து*
*அருவி ஆன்ற வெருவரு நனைந்தலை*[64]

என்ற பாடலடியில் மழை இல்லாததால் அருவி இல்லை ஆயின என்று கூறுவதிலிருந்து அருவி தோன்றுவதற்கு அடிப்படையாக மழையே என்பது புலனாகின்றது.

மேலும் அருவிகள் கூதிர் காலத்தில் மட்டுமே விழும் முன்பனிக் காலத்திலோ பின்பனிக் காலத்திலோ அருவிகள் வீழாது நிற்கும்.

*அம்ம வாழி தோழி நம் மலை*

*வரை ஆம் இழிய கோடல் நீட*

*காதலர்ப் பிரிந்தோர் கையுற நலியும்*

*தண் பனி வடந்தை அற்சிரம்*[65]

மேற்குறிப்பிட்ட பாடலில் குளிர்காலத்தில் விழுந்த அருவிகள் பனிக்காலம் வந்ததும் நின்று விடும் என்பது இயல்பு. ஆனால் அருவிநீர் நிற்பதற்கு முன்னே தலைவன் வந்துவிட்டான் என்று கூறுவதிலிருந்து பனிக்காலத்தில் அருவிகள் விழா தன்மையை உணரமுடிகிறது. அருவியானது கற்களை மோதி உடைத்து வீழ்கின்ற தன்மையை,

*கல்பொருது இரங்கும் கதழ்வீழ் அருவி* [66]

இதில் *கதழ் வீழ் அருவி* என்பது அருவியைச் சிறப்பிக்கும் சொலவடை ஆகும்.

*இழுமென இழித்தரும் பறைக் குரல் அருவி*

*முழுமுதல் மிசைய கோடுதொறும் துவன்றும்*[67]

அருவி விழுந்து எழுப்புகின்ற ஓசை மக்களின் இசை தோன்றும் பறையோசை போன்றும் காணப்படுவதாக மேற்குறிப்பிட்ட பாடல் சுட்டுகின்றது

சில மலைப்பகுதிகளில் காணப்படும் அருவியானது தொடர்ந்து வற்றாது விழுந்து கொண்டே இருக்கும் தன்மை கொண்டது காரணம், மலைப்பகுதியில் மழை வளமே ஆகும். இக்கருத்தை வேங்கடசாமி இவ்வாறு குறிப்பிடுகிறார்.

*மலையானது அடர்ந்த கானகம் கொண்டது. இக்கானக நிலப்பரப்பின் மீது விழுந்த இலை, சுள்ளி, விலங்குகளின் எச்சம், உடற்பகுதிகள் மக்கி, பஞ்சுபோல்*

*மெத்தென இருக்கும். பெய்த மழையின் ஒரு பகுதியை பஞ்சு போன்ற காணபரப்பு உட்கொண்டு நீரைச் சேமிக்கும். மழைக் காலத்திற்குப் பிறகு இந்நீர் மலையின் மேற்பகுதியிலிருந்து கீழ்ப்பகுதிக்கு உயிர்ப்பு ஆற்றலினால் பாயும். இதனால் மழைநீர் செல்வம் வங்கியாயிற்று. எனவே அடர்ந்த கானகம் மறையும் நீர்வளமிக்கவை. இப்பகுதி மழைக்காலத்திலும் அதனை அடுத்த கோடைக்காலத்திலும் நீர் வழங்கும் ஆற்றல் உடையதாகும்*[68].

மேற்கூறப்பட்ட செய்தியின்வழி மலை சார்ந்த குறிஞ்சி நிலப்பகுதியில் இயற்கை நீர்நிலைகளான அருவி, சுனை என்பன தொடர்ந்து நீர்வளம் பெற்று இருப்பதற்கான காரணம் யாதெனில் மலைப்பகுதிகள் நீரை உறிஞ்சிக்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக வெளிவிடும் இயல்பினைக் கொண்டவையே என்பதை அறிய முடிகின்றது.

**படு**

சங்க இலக்கியங்களில் படு பற்றிய நீர்நிலைக் குறிப்புகள் காணப்படுகின்றன. படு என்ற சொல்லிற்கு மதுரைத் தமிழ் பேரகராதி *குளம்* என்றும் பொருள் விளக்கம் அளிக்கிறது. இது குளம் போன்ற நீர்நிலையாகும். இதனை மடு என்றும் அழைப்பர். ஞ. தேவநேயன் *மடுவு என்பதனை அருவி விழும் கிடங்கு*[69] என்று குறிப்பிடுகிறார்.

இந் நீர்நிலை பற்றிய பாடல் புறநானூற்றில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

*தெண் நீர்ப் படுவினும் ..............*[70]

தெளிவான நீர்நிலையைக் கொண்டதாகப் படு வான் அது இருந்தது என்று குறிப்பிடுகிறார். நீர்நிலை பாலைநிலத்தைச் சார்ந்தது என்றும் வறண்டு காணப்படும், பாலைநிலத்தில் ஆறலைக் கள்வர்கள் நீர்வேட்கையால் நீர்அருந்தி தங்கள் தாகத்தைத் தணித்துக் கொண்டனர் என்பதை நற்றிணைப் பாடல் பின்வருமாறு,

*கல்லுடைப் படுவில் கலுழி தந்து*
*நிறை பெயல் அறியாக் குறைத்து ஊண் அல்லில்*
*துவர்செய் ஆடைச் செந் தொடை மறவர்*
*அதர் பார்த்து அல்கும் அஞ்சு வரு நெறியிடை*[71]

அதாவது பொலிவிழந்து காணப்படும் கல்லினை உடைய குழிகளிலுள்ள நீர், கலுழி நீர் என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளது. மழைக்காலத்தில் தேங்கிய அதிகப் படியான வெள்ளநீர் வறட்சிக் காலத்தில் பாறைகளில் குழிகளில் சிறிதளவு நீர்த் தேங்கியிருக்கும். அதனை வறட்சிக்காலத்தில் பயன்படுத்திக் கொண்டனர். இந்நில மக்கள் இந்நீர்நிலை சேர்க்கை நீர்நிலையே என்பதை உறுதிப்படுத்தும் விதமாக அகநானூற்றுப் பாடல்,

*கல்லறுத்து இயற்றிய வல்உவர்ப் படுவில்*[72]

என்ற பாடல் வரியில் கருங்கல்லினை சரியான அளவில் அறுத்தெடுத்து குழி அமைத்ததாகக் கூறுகின்றது. இதன் வாயிலாக குறிஞ்சிநில அருவியைத் தேக்கி வைக்க, பாறைத் தன்மைகொண்ட வன்னி நிலத்தை உடைத்து. அதனைக் குழியாக்கி

நீரைச் சேமித்த குறிஞ்சிநில மக்களின் தொழில்நுட்பச் சிந்தனை வியக்கும் வகையில் உள்ளது.

இந்நீர்நிலையின் அடி நிலப்பகுதியை மண் அல்லது கல்லாகி இருப்பதால் நீர்நிலையின் நீர் தெளிவாகவே காணப்படுகிறது.

**கான்யாறு**

இயற்கை நீர்நிலையாகச் சுட்டப்பெறும் முல்லைநில நீர்நிலை கான்யாறு ஆகும். பருவமழைக் காலங்களில் மட்டுமே இவ்வாறானது தோன்றும். பருவமழை முடிந்த அடுத்த சில நாட்களிலேயே கான்யாறு வற்றிவிடும். குறிஞ்சி, முல்லை ஆகிய நிலங்களில் உள்ள ஏனைய நீர்நிலையிலிருந்து வரும் நீரானது சிறு சிறு ஒடைகளாகச் சேர்ந்து இந்த கான்யாறு உருவாகின்றது. மலையின் உச்சியில் மீதுள்ள சுனையானது மழை நீரினால் நிரம்பப் பெற்றும் மலைகளிலுள்ள அருவிகள் மிகுந்து ஒலிக்கும் வண்ணம் கற்களைக் உருட்டிக்கொண்டு ஓடி வரும் வேகம் மிக்கது இந்தக் கான்யாறு என்று நற்றிணை பாடல் எடுத்துரைக்கின்றது.

*சூருடை நனந்தலைச் சுனை நீர் மல்க*
*பெருவரை அடுக்கத்து அருவி ஆர்ப்ப*
*கல் அலைத்து இழிதரும்கடு வரற் கான்யாற்று*[73]

மலைப்பகுதியில் சுனையானது வழிந்து பின்பு அருவியில் பாய்ந்து நீரோடைகளும் இணையும்போதுதான் கான்யாறு தோன்றுகின்றது. ஆகையால் இதனைச் சுனையின் நீட்சியாகவும் கருதமுடியும்.

மேலும் புறநானூற்றுப்பாடல் மின்னலுடன் கூடிய குளிர்ந்த மழை பொழியும்போது கல்லை உருட்டிக்கொண்டு காட்டாறு வந்ததாகக் கூறுகின்றது.

*வானம் தண் தலைஇ ஆனாது*

*கல் பொருது இரங்கும் மல்லல் பேர் யாற்று*[74]

பெருக்கெடுத்து வரும் காட்டாறு உயர்ந்து அலைகளோடு விரைந்து வந்து தரையை மோதுவதை,

*பொரு திரை நிவப்பின் வரும் யாறு அஞ்வல்*[75]

பெருகிவரும் காட்டாறு மூன்று விதமான முக்கியப் பணிகளைச் செய்கிறது.

1. **நிலத்தை அரித்தல்**
2. **அரித்த பொருட்களைக் கடத்துதல்**
3. **கடத்திய பொருட்களைப் படியச் செய்தல் போன்றவையாகும்[76].**

இத்தகைய நிகழ்வினைப் பற்றிய குறிப்புகளும் சங்கப்பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

*உயர்கரைக் கான் யாற்று அவிர்மணல் அகன் துறை*[77]

மேடான கரைகளைக்கொண்ட காட்டாற்றின் ஒளிமிக்க மணல் பரப்பினைக் கொண்ட துறை என்று கூறப்பட்டுள்ளது. இத்தகைய கரைகள் மக்களால் உருவாக்கப் பட்டதன்று. பன்னெடுங்காலமாக மண்ணரிப்பு கொண்டு பள்ளத்தில் நீர் ஓடுவதால்

அதன் கரைகள் உயர்ந்துள்ளன. ஆகவே இவை உயர்கரை என்ற சிறப்பான அடைமொழியால் குறிப்பிடப்படுகிறது.

**கேணி**

கோவலர்கள் என்பவர்கள் ஆனிரை மேய்ப்பவர்கள். அவர்களால் தோண்டப் பெற்ற இந்நீர்நிலையே கேணி என்ற கிணறு. இக்கேணி நீரைத் தோண்டுவதற்கான காரணம், நீரைப் பாதுகாத்த விதம், நீரை வீணாக்காமல் பயன்படுத்திய நுட்பம் போன்றவை பற்றிய செய்திகளைச் சங்க இலக்கியங்களில் பாடல் வழியே அறியமுடிகின்றது. முல்லையும் குறிஞ்சியும் திரிந்த வறட்சியான வழியில் தோண்டப்பட்டது இக்கேணி என்னும் நீர்நிலை.

> *வறன் பொருந்து குன்றத்து உச்சிக் கவாஅன்*
> *வேட்டச் சீறூர் அகன்கண் கேணிப்*
> *பயநிரைக்கு எடுத்த மணிநீர்ப் பத்தர்*
> *புண்தலை மடப் பிடி கன்றொடு ஆர*
> *வில் கடிந்து ஊட்டின பெயரும்*[78]

மேற்குறிப்பிட்ட பாடல் வழி கேணி என்பது குறிஞ்சி நிலத்திற்கு அடுத்துள்ள முல்லை நிலப்பகுதி என்பதை அடையாளப்படுத்தும் விதமாக வறட்சி கொண்ட மரத்தின் உச்சியில் ஒரு பக்கத்திலுள்ள வேட்டுவர் சிற்றூரை அடுத்த அகன்ற வாயினையுடைய கிணறு என்னும் நீர்நிலை முல்லைநில மக்கள் வாழக்கூடிய நிலப்பகுதி ஆகும். மேலும் அகன்கண்கேணி என்பதன் வழி கிணறு ஆழமாக இருந்துள்ளதை உணரமுடிகின்றது.

*கையினாலும் அல்லது எந்திரத்தின் உதவியால் கிணறு தோண்டப்படும் பொதுவாகக் கிணறு வட்டமாக இருக்கும் எனினும் நாற்சதுரமாகவும் நீள்வட்டமாகவும் இருப்பதும் உண்டு. நிலநீர் தளம் அமைந்த ஆழத்தைப் பொறுத்து கிணற்றின் ஆழம் சில மீட்டரிலிருந்து 100 மீட்டருக்கும் மிகுதியாக இருக்கும் அதன் விட்டம் ஒரு மீட்டரிலிருந்து பத்து மீட்டர் வரை இருக்கும்*[79] என்று குறிப்பிடுகிறார் திரு கே. ஆர். திருவேங்கடசாமி.

ஆநிரைகளின் நீர் வேட்கையைப் போக்குவதற்காகத் தோண்டப்பட்டது கேணி என்னும் நீர்நிலை. ஆழமான அகலமான நீர்நிலையாகக் கேணி அமையப் பெற்றிருப்பதால் ஆநிரைகள் நீரினை அருந்த முடியாது. எனவே கேணிக்கு அருகிலேயே சிறுகுழியை அமைத்து அக்குழியில் நீரை ஊற்றியுள்ளனர் கோவலர்கள். இதனை *நீர்ப் பத்தர்* என்றழைப்பர். இந்நீர் தெளிவாக இருப்பதனால் *மணி நீர் பத்தர்* என்றும் அழைத்துள்ளமையை அறியமுடிகின்றது. இதற்கு மூடிட்டுப் பாதுகாத்து வந்துள்ளனர். தாகம் மிகுதியால் இப்பகுதியிலுள்ள யானையானது நீர் பத்தரை திறந்து தானும் தன் கன்றும் நீர் அருந்தியதாக மேற்கூறிய பாடல் குறிப்பிடுகின்றது. இவ்வாறு நீர்நிலைக்கு மூடிட்டு ஆநிரைகளின் தாகத்தைத் தணிப்பதற்குக் கோவலர்கள் மேற்கொண்ட இந்த தொழில்நுட்ப நுண்ணறிவு மிகவும் போற்றுதலுக்குரியது ஆகும்.

**கூவல்**

முல்லைநில நீர்நிலையே கூவல் ஆகும். இது சிறு கிணற்றினைக் குறிக்கும். காட்டின் இடத்தே அமைந்துள்ள பாறைகள் நிறைந்த இடத்தில் அமைந்துள்ள சிறு கிணறுதான் இக்கூவல். வன்மையான நிலத்தைத் தோண்டி அமைக்கப்பட்ட நீர்நிலையைக் கூவல் என்பதனைக் கதிரைவேற்பிள்ளைத் தமிழ்ச் சொல்லகராதி கூவல் என்பதற்கு, ***கூவல் என்பதற்கு பூமி என்றும் வன்மையான அல்லது வள்ளிய என்று பொருள்***[80] அளித்து மேற்சுட்டிய விளக்கத்தைக் கூறுகிறது.

செடி, கொடி, மரங்கள் உள்ள இடங்களில் இருக்கும் நீர் உட்புகும் இடம் அதிகமாக இருக்கும். மரங்கள் இல்லாத இடத்தைவிட மரங்கள் உள்ள பகுதியில் நீர் உட்புகும் அளவு இருபத்தி ஐந்து மடங்காக இருக்கும் என்று கண்டுள்ளனர். அதிலும்

*செத்தை சருகுகள் உதிர்ந்து கிடந்தால், அவை மக்கி பூதங்களால் இணைக்கப்பட்டு உடன் இணைந்த எமிகளாக நிலத்தின் மேலிருக்கும். இவை வழிந்து ஓடும் நீரோட்டத்தை நன்கு கட்டுப்படுத்தி நீரை உட்புகச் செய்யும். சரியில்லாத இடத்தைவிட செத்தை சருகுகள் சிதறிக் கிடக்கும் இடங்களில் மூன்று மடங்கு நீர் உட்புகும் எனவும் கண்டுள்ளனர். மேலும் மழை பெய்யும்போது முதலில் பெய்யும் மழை நீரையெல்லாம் மிச்சத்தைச் சருகுகள் உறிஞ்சிக்கொண்டு நிதானமாகக் கீழ்ப்பகுதிக்கு கசிந்திடும்*[81] என்று பி. எஸ். மணி கூறுகிறார்.

எனவே காடுகளின் நிலத்தடி நீர்மட்டம் உயர்ந்ததாக எண்ணப்படுகிறது. ஆகையால் இந்நிலப்பகுதியை சிறிதளவு தோன்றினாலே ஊற்றானது தென்படும்.

இதுவே கூவல் என்ற பெயரால் அழைக்கப்பட்டது.  வன்மையான நிலத்தை தோண்டி அமைக்கப்பட்டதே கூவல் என்னும் நீர்நிலை என்பதைப் பின்வரும் பாடல் சுட்டுகின்றது.

*சுரன் முதல் வருந்திய வருத்தம் பைபய*

*பா வலி சிறு கூறலின் தணியும்*[82]

தலைவன் தலைவியைப் பிரிந்து பொருளீட்டக் கருதிப் பாலைநிலத்தை நோக்கி கடந்து செல்கின்றான். அச்சமயத்தில் அவனுக்கு ஏற்பட்ட மிகுதியால் பாறைகளின் ஊடே சூழ்ந்திருந்த நீரைப்பெற்று நீர்வேட்கையைப் போக்கினான் என்பதை அறிய முடிகின்றது.

இந்நீர்நிலையை முதன்முதலில் தோண்டியவர்கள் கோவலர்களே. ஏனெனில் நீண்ட நேரம் மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்லும் கோவலர்கள் ஆநிரைகளின் நீர்த் தேவையைத் தணிப்பதற்காகக் தோண்டப்பட்டது கூவல் ஆகும். இந்நீர்நிலையை கோவலர்கள் தன் கையில் இருந்த கோலினைக் கொண்டே தோண்டியதாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகின்றது.

*வெயில் வெய்துற்ற பரல் அவல் ஒதுக்கில்,*

*கணிச்சியில் குழித்த கூவல் நண்ணி,*

*ஆன் வழிப் படுநர் தோண்டிய பத்தல்*

*யானை இன நிரை வௌவும்*

*கானம் திண்ணிய மலை போன்றிசினே*[83]

கணிச்சி என்னும் குந்தாலி கொண்டு நிலத்தைத் தோண்டியதாக

*கடற்று அடை மருங்கின் கணிச்சியின் குழித்த*

*உடைக்கண் நீடு அமை ஊறல் உண்ட,*

*பாடு இன் தெண் மணி, பயம் கெழு பெரு நிரை*[84]

குறிப்பிடுகின்றது. பசுக்களின் தாகத்தைத் தணிப்பதற்காகக் கோவலர்கள் மலன் காட்டினைச் சார்ந்த இவர்கள் பகுதியில் குந்தாலி என்ற கருவியால் குழியைத் தோண்டினர் என்றும், அக்குழியில் கோவலர்கள் இனிய ஓசையையுடைய மணிகளைக் கொண்ட பசுக்களுக்கு நீர்க்குழிகள் அமைத்ததை மேற்சுட்டிய பாடல் வழி அறியமுடிகின்றது.

கூவல்நீர் உப்புத் தன்மை உடையதாக அமைந்திருந்தது என்பதனை,

*பிணர் அழி பெருங் கை புரண்ட கூவல்*

*தெண் கண் உவரிக் குறைக் குட முகவை,*

*அறனிலாளன் தோண்ட, வெய்து உயிர்த்து,*

*பிறைநுதல் வியர்ப்ப, உண்டனள் கொல்லோ* [85]

என்ற பாடலடியில் பாலைநிலத்தில் தலைவியோடு உடன்போக்கு சென்ற தலைவன், தலைவியின் தாகத்தைத் தணிப்பதற்காகக் கூவலைச் சிறிது தோண்டுகிறான். அப்பொழுது உவர் நீரானது தென்படுகிறது. உவர் நீரைத் தலைவி குடிக்கிறாள். இதன்வழி பாலைநிலத்திலுள்ள கூவல் நீரானது உப்புத் தன்மை மிக்கது

என்பதை அறியமுடிகின்றது. மேலும் கூவல் நீரானது வழிச்செல்வோரின் நீர்த்தேவையையும் பூர்த்தி செய்ததாகக் கீழ்க்கண்ட பாடல் குறிப்பிடுகின்றது.

*கல்லுடை அதர கானம் நீந்தி,*

*கடல் நீர் உப்பின் கணம் சால் உமணர்*

*உயங்கு பகடு உயிர்ப்ப அசைஇ, முரம்பு இடித்து அகல் இடம் குழித்த அகல் வாய்க் கூவல்*

*ஆறு செல் வம்பலர் அசை விட ஊறும்* [86]

இப்பாடலடியில் உப்பு விற்கச் செல்லும் உமணர் கூட்டம் பாலைநிலத்தைக் கடக்கின்றபோது உப்பின் சுமையால் இழுத்து வந்த எருமைகள் இளைப்பாறும் பொருட்டு ஓரிடத்தில் தங்க வைக்கின்றனர். அப்பொழுது பாலைநிலத்தில் நன்கு ஊறிய அகன்ற வாயையுடைய கூவல் என்ற நிலையிலிருந்து உமணர்கள் நீரைப்பெற்று எருதுகளின் தாகத்தையும் தணிக்கக் கூடியதாக அமைந்தது. இத்தகைய கூவல் நீரினை யானைகள் அருந்திவிட்டுச் சென்றதாக,

*களிறு பொரக் கலங்கு, கழல் முள் வேலி,*

*அரிது உண் கூவல், அம் குடிச் சீறூர்* [87]

புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது.

நீரின் வேட்கை மிகுதியால் மலைப்பகுதியிலிருந்து கீழிறங்கும் யானைகள் பாலைநிலத்தில் உள்ள கூவல் நீரினைக் குடிப்பதற்காக நீர்நிலையைக் குழப்பிக் கலக்கி காணப்பட்டதாகக் குறிப்பிடுகின்றது.

ஆநிரைகளின் நீர் வேட்கையைத் தணிக்க வேண்டும் என்கின்ற விருப்பத்தின் காரணமாக உருவாக்கப்பட்டதே கிணறு போன்ற கூவல். இத்தகைய நுட்பச்சிந்தனை பழந்தமிழர்களுக்கு மேற்குறிப்பிட்ட சங்கப் பாடல்களின் வழி அறியமுடிகின்றது. கிணறு அமைக்கவேண்டிய தொழில்நுட்பச் சிந்தனையைப் பற்றி, உயிரியல் வல்லுநர்கள் குறிப்பிடுவதைப் பற்றி திரு கே. ஆர். திருவேங்கடசாமி குறிப்பிடுவதைக் காணலாம்.

*கிணறு அமைக்கும் இடத்தைச் சுற்றிய பகுதிகளில் நீர்மை இயல் பற்றித் தீவிரமாக ஆய்வு மேற்கொண்ட பிறகே அதற்கேற்ற உழைப்பு, சாதனத்தைத் தேர்வு செய்ய வேண்டும். குண்டுகள் பகுதியிலும் இறுகிய பாறையிலும் சூழல் துறை கருவியைப் பயன்படுத்த முற்படுவது பொதுவாக நிகழும் பிழையாகும். கிணறு அமைக்கும் பகுதியின் அருகிலுள்ள ஆற்றுப்படுகையை ஆழ்ந்து நோக்கினால் அங்குள்ள பதிவுகளை அறிந்து கொள்ளலாம் என்று கிணறு அமைக்கும் நுட்பத்தினைப் பற்றி தன் நூலில் குறிப்பிடுகிறார்*[88]*.* ஆற்றுப்படுகை நோக்கிக் காவலர்களுக்குக் கிணறு அமைக்கும் தொழில்நுட்பம் தெரிந்திருக்க வேண்டும். இது அவர்களின் நீரியல் சிந்தனைக்கு எடுத்துக்காட்டாகும்.

**கயம் (அ) குளம்**

செயற்கை நீர்நிலையாகக் கருதப்பெறும் கயம் என்பது குளத்தைக் குறிப்பதாகும். பண்டைய தமிழரின் நீர்த்தேவையைப் பூர்த்தி செய்வதில் குளத்திற்கு முக்கியப்பங்கு இருந்தது. ஏனெனில் மழையற்ற காலங்களில் இந்நிலையே மக்களுக்கு

உதவியது. தங்களுக்கான நீர்த்தேவையைத் தாங்களே பூர்த்தி செய்துகொள்ள பண்டைய தமிழர்களால் அமைக்கப்பட்ட செயற்கை நீர்நிலையே குளம். குளம் ஆகிய நீர்நிலை குறிஞ்சித்திணைக்கு மட்டும் உரியதன்று. முல்லை, நெய்தல், மருதம் ஆகிய நிலங்களுக்கும் குளங்கள் இருந்ததாகச் சங்கப்பாடல்கள் தெரிவிக்கின்றன. ஆற்றின் குறுக்கே கரையை அமைத்து ஆற்று நீரினை வாய்க்கால் வழி குளங்களில் சேமித்து உள்ளனர். குளத்திலுள்ள நீரைக் குடிக்கவும் குளிக்கவும் பயன்படுத்திக்கொண்டனர். பாசனத்தினை மேற்கொள்வதற்காகப் போதுமான அளவு நீரைத் திறந்து விடுவதற்கேற்ற தொழில்நுட்பமாகப் புதவு, மதகு போன்ற தொழில்நுட்ப அமைப்புகள் மூலம் தண்ணீரை உரிய அளவில் பயன்படுத்திக் கட்டுமானத் தொழில்நுட்பங்கள் பயன்படுத்தியதை அறியமுடிகின்றது. ஆற்றில் வெள்ளநீரை குளங்களில் தேக்கி, கரை அமைத்த இச்செய்தியினை இன்னொரு பாடல் சுட்டுகின்றது.

*துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி*

*நுரைத்தலைக் குறைப்புனல் வரைப்பகம் புகுதொறும்* [89]

நுரையைக் கொண்ட ஆரவாரம் பொருந்திய வெள்ளநீர் சூழ்ந்த குளங்களில் நிரம்பியதைப் பொருநராற்றுப்படை வரிகள் தெரிவிக்கின்றன. பெருக்கெடுத்து வரும் வெள்ளநீரினைப் புலன்களுக்கும் தீர்க்கும்போது நீர்வரத்து அதிகரித்து குளத்தின் கரைகள் உடைந்துவிடாமல் இருக்க, சில நுட்பங்கள் பயன்படுத்தியுள்ளதைத் தெரிவிக்கின்றது.

***முடப் பனையத்து வேர் முதலாக்***

***கடைக் குளத்துக் கயம் காய,*** [90]

மேற்குறிப்பிட்ட பாடலில் குளமானது புனர்பூச நட்சத்திரத்தின் வடிவத்தை ஒத்ததாக இருக்க வேண்டும் என்றும், ஏனெனில் நட்சத்திரத்தின் வடிவம் அரைவட்ட வடிவமாகும். ஆகவே அரைவட்ட வடிவில் குளம் அமைக்கப்பட வேண்டும் என்பது மேற்கூறிய பாடல் வழி அறிய முடிகின்றது. மேலும் குளத்தின் ஒரு பக்கம் அரை வட்ட வடிவம் எனில் ஏனைய பக்கங்கள் எவ்வாறு அமையவேண்டும் என்பதனை ஆராயும் பொழுது அதற்கான செய்தியையும் புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது.

*அறையும் பொறையும் மணந்த தலைய*
*எண் நாள் திங்கள் அனைய கொடுங் கரைத்*
*தெள் நீர்ச் சிறுகுளம் கீழ்வது மாதோ*[91]

மேற்கூறிய பாடல் வழியே குளத்தின் கட்டுமானம் அமைப்பினைத் தெளிவாக வரைமுறைப்படுத்துகின்றது. இதில் அறை என்பது பாறையையும் பொறை என்பது சிறு மலையைக் குறிக்கின்றது. இருபக்கமும் மலையும் பாறையும் எட்டாம் நாள் பிறைச்சந்திரன் போன்ற வளைந்த கரைகளையுமுடைய தாக்கியதாக தெளிந்த நீரையுடைய சிறுகுளம் பாதுகாப்பார். இல்லையாயின் உடைந்து போகும் என்று குறிப்பிடுவதன் வழி குளத்தின் கரையானது எட்டாம் நாள் பிறைச் சந்திரனை ஒத்ததாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றது.

குளத்தின் கரைகளை வளைவாக அமைத்த நுட்பத்தினை நோக்கும்போது குளக்கரைகளில், கரைகளை சதுரமாகவோ செவ்வகமாகவோ அமைந்தால் வெள்ளத்தினால் வேகமாக வரும் நீர் மோதிக் கரைகள் உடைந்துவிடும்.

வெள்ளநீரின் விசை வேகம் அதிகரிக்கும்பொழுது இவ்வாறு உடைந்துவிட வாய்ப்பு உண்டு. எனவே கரைகளை வளைவாக அமைத்துள்ளனர். மேலும் நீரின் விசைவேகம் கட்டுப்படுத்தப்படுகிறது. இதனால் உடைந்துவிடாமல் பாதுகாக்கப் படுகின்றது. கட்டுமானத் தொழில்நுட்பத்திறன் வியப்பளிக்கக்கூடிய வகையில் அமைந்திருக்கின்றது. அதுமட்டுமின்றி குளங்களின் பக்கசுவர்களாக மலைகள் மற்றும் பாறைகள் இருக்கும்போது குளத்திலிருந்து நீர்க்கசிந்து வெளியே செல்லாது. இயற்கையான முறையில் அமைந்த மலைகள் மழைக்காலங்களில் குளம் சேதமடையாமல் பாதுகாக்கின்றன. இந்தப் பாறைகளைத் தேர்வு செய்வதன் மூலம் குளங்களைப் பராமரிக்கும் பணி எளிதாகிறது. சுற்றிலும் கரைகள் அமைக்க வேண்டுமெனில் மிகுந்த மனித உழைப்பு தேவைப்பட்டிருக்கும். ஆகையால் கற்பாறைகளைக் கரைகளாகத் தேர்வு செய்தால் மனித உழைப்பும் குறைவு. பொருளாதாரச் சிக்கனம் உண்டு. எனவே சங்கத்தமிழர்கள் சிறந்த கட்டுமானத் தொழில்நுட்ப வல்லுநர்களாக விளங்கியுள்ளனர் என்பது மட்டுமின்றி மேலாண்மை தன்மை நிரம்பியவராகவும் திகழ்ந்துள்ளனர் என்பது அறியமுடிகின்றது.

நீர்த்தேக்கத்தின் அமைவிடம் குறித்து அறிவியல் களஞ்சியம் நூலானது குறிப்பிடுகையில், *மழைக்காலங்களில் தேவைக்கு மேல் பெருகும் நீரை நதியின் குறுக்கே அணை கட்டி உருவாக்கப்படும் சேமிப்பை நீர்த்தேக்கம் என்பர். குறைந்த பரப்பளவில் மிகுந்த ஆழமும் கன அளவும் நீர் தேங்கக்கூடிய கொள்ளளவு உள்ள இடத்தைத் தேர்வு செய்யவேண்டும். மழை மிகுதியாக விழக்கூடிய இடமாகவும்*

*கூடுதலான நீரைச் சேமித்துத் தரும் நிலப்பகுதி உள்ள இடமாகவும் அது அமையவேண்டும். நீர்த்தேக்கத்திலிருந்து பயன்பாட்டுக்குச் செல்லும் நீர் தானாகவே சரிவாக செல்லுமாறு இடத்தைத் தேர்வு செய்ய வேண்டும். நீர்த்தேக்கம் நீர் பயன்பட வேண்டிய இடத்திற்கு அருகில் அமைவது நல்லது. நீர்த்தேக்கம் அமைக்கக்கூடிய இடத்தினருகில் நீர் கசிந்து செல்ல முடியாதவாறு இருத்தல் வேண்டும்* [92]

இவ்வாறு நீர்த்தேக்கம் அமையவேண்டும் என்று குறிப்பிடுகின்றது. சங்கத் தமிழர்கள் குளங்கள் அமைக்கப் பயன்படுத்திய தொழில்நுட்பத்தையே இன்று நாம் மிகப்பெரிய அணைகள் கட்டுவதற்குப் பயன்படுத்தி வருகிறோம். தற்காலத்தில் அணை அமைக்கும்பொழுது மலையிலேயே பக்கங்களாகக் கொண்டு அரைவட்ட வடிவில் அமைக்கின்றனர். தற்காலத்தில் உள்ள இந்த அணைகள் முல்லைநிலத்தில் அமைக்கப்பட்டு இருப்பதாகக் கருதலாம்

குட்டம்

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் நீர்நிலைகளில் ஒன்றாகக் குட்டம் எனும் நீர்நிலை இடம்பெற்றுள்ளது. இது மிகுந்த ஆழமானது என்றும் கூறப்படுகிறது. ரா.தேவநேயன் என்பார் ***கயம் ஆழமான குளம் கூட்டம் குளத்தின் ஆழமான இடம்***[93] என்று குறிப்பிடுகிறார்.

> *கரையவர் மருளத், திரையகம் பிதிர*
> *நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து* [94]

என்பதிலிருந்து குட்டம் என்பது நீராடும் இடமாகும். அத்தகைய ஆழமான இடத்தில் குளிப்பதற்காகக் கரையிலிருந்து திடுமென குதித்து விளையாடி உள்ளனர். இதன்வழி குட்டம் ஆழமானது என்பதை உணரமுடிகின்றது. மேலும் மற்றொரு பாடலில்,

*கூம்பு நிலை அன்ன முகைய ஆம்பல்*

*தூங்கு நீர்க் குட்டத்து, துடுமென வீழும்*[95]

மருதநில நீர்நிலையாகக் குட்டம் இருந்துள்ளது என்பதும், இதில் தூங்கு நீர் குட்டம் என்பது ஆழமான நீரை உடையது என்பது புலனாகிறது.

**இலஞ்சி**

இது மருதநில நீர் நிலையாகும். அமைப்பில் குளம்போன்று ஒத்த தன்மை உடையதாக இந்நீர்நிலை இருந்திருக்க வேண்டும். இந்நீர்நிலை குறித்து வீரமாமுனிவர் தனது சதுரகராதியில் ஏரி, குளம் என்று விளக்கமளிக்கிறார்.

*மள்ளர் அன்ன தடம் கோட்டு எருமை*

*மகளிர் அன்ன துணையோடு வதியும்*

*நிழல் முதிர் இலஞ்சி பழனத்ததுவே* [96]

மேற்கண்ட பாடலில் இலஞ்சி என்பது நிழல் முதிர் இலஞ்சி என்று இனங்காணப் பட்டுள்ளது. இத்தகைய இலஞ்சியில் கரைகளில் நன்கு நிழல் தரக்கூடிய மரங்கள் இருந்துள்ளன என்றும் எருமைகள் தங்குமிடமாகவும் நீர்நிலை உள்ளது என்றும் கூறுகின்றது. மேலும்,

*மணி மருள் மலர முள்ளி அமன்ற,*

*துணி நீர், இலஞ்சிக் கொண்ட பெரு மீன்*[97]

*குண்டு நீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்*

*முது நீர் இலஞ்சிப் பூத்த குவளை*[98]

என்ற பாடலடிகளில் இலஞ்சியில் மீன்களும் மலர்களும் நிறைந்து காணப்பட்டதாகவும் செய்திகள் கிடைக்கின்றன. இதுவும் ஆழமானதாகவும் தெளிந்த நீரை உடையதாகவும் இருந்துள்ளது.

**பொய்கை**

பொய்கை மருதநில நீர்நிலையாக அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. தமிழ் லெக்சிகன் அகராதி பொய்கை என்பதை, ***இயற்கை நீர் நிலை அல்லது குளம்*** என்று விளக்கமளிக்கிறது. சங்க இலக்கியங்களில் பொய்கை பற்றிய செய்தியை ஆராயும்போது அவை குளம் போன்று செயற்கையாக அமைக்கப்பட்ட நீர்நிலையாக இருக்கலாம் என்பது புலனாகின்றது. எனினும் பொய்கை மருதநிலத்து நீர் நிலையாகத்தான் இருக்க முடியும் என்பதைச் சங்கப்பாடல் ஒன்று உறுதி செய்கின்றது.

*ஆம்பல் அமன்ற தீம் பெரும் பழனத்துப்*
*பொய்கை ஊர்க்குப் போவோய் ஆகி*[99]

இப்பாடல் அடியில் மலர்கள் நிறைந்தபெரிய வயல் உடைய பொய்கையும் கொண்ட ஊர் என்று கூறுமிடத்து வயலும் வயல் சார்ந்த பகுதியாக அமையப்

பெறுவது. மருதநிலம் என்பதால் இது மருதநிலத்து பொய்கை என்று உணரப்படுகின்றது.

சங்க இலக்கியங்களில் பொய்கையின் இயல்பினை உணர்ந்துகொள்ளவும் மற்றொரு பாடல் துணைசெய்கின்றது.

*மா நீர்ப் பொய்கை யாணர் ஊர*[100]

என்ற பாடல் வரியில் பொய்கை மிகப் பெரிய நீர்த்தேக்கம் என்றும்

*நெடுநீர்ப் பொய்கை ...........*[101]

*நீள் இ ரும் பொய்கை*[102]

என்கின்ற பாடல் வரியில் பொய்கை ஆழமானதாகவும் மிகப்பெரிய நீர் நிலையாகவும் இருந்ததை உணர முடிகின்றது. மேலும் பொய்கையின் நீரானது இனிமை மிக்கது என கூறுமிடத்து இனிமையின் காரணத்திற்கு அதில் நிறைந்துள்ள பழங்கள் மலர்கள் ஆகும்.

*தீம் பெரும் பொய்கை*[103]

*வாடாப் பூவின் பொய்கை நார்ப்பண்*[104]

*நறு வாடி மா அத்து விளைந்து உகு தீம் பழம்*[105]

இவ்வாறு கனிகளும் மலர்களும் நிறைந்து காணப்பட்டமையால் இனிமை தரத் தக்கதாகப் பொய்கை நீர் விளங்கிற்று என்பதை அறிய முடிகின்றது.

மேலும் பொய்கை என்பது செயற்கை நீர்நிலையாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்பதை உறுதிப்படுத்தும் விதமாக சங்க இலக்கியப் பாடலொன்று பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*பொய்கை வாயில் புனல் பொரு புதவின்*[106]

என்ற பதிற்றுப்பத்து பாடல் வரியே பொய்கையில் இருந்து நீரை வெளியேற்ற புதவு என்ற அமைப்பு இடம்பெற்றுள்ளதைத் தெரிவிக்கின்றது. எனவே பொய்கை சேர்க்கையாக அமைக்கப்பட்ட நீர்நிலையாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்றும் நீர் வந்து மோதுகின்ற புதவு நீர் வருவதற்கான கால்வாய்களும் போன்ற செய்திகளைச் சங்கப்பாடல் தெரிவிக்கின்றது. இப்பொய்கையின் கரையை வலுப்படுத்திய செய்திகளையும் பின் வருமாறு பாடல் தெரிவிக்கின்றது.

*மழை நீங்கிய மா விசும்பில்*
*மதி சேர்ந்த மகவெண்மீன்*
*உரு கெழு திறல் உயர் கோட்டத்து*
*முருகு அமர் பூ முரண் கிடக்கை*
*வரி அணி சுடர் வான் பொய்கை*[107]

என்ற பாடல் குறிப்பிடுகின்ற செய்தி பொய்கை அமைக்கப்பட்ட கரை குறித்ததான செய்தியை விளக்குகின்றது. அதாவது மழை மாசு நீங்கிய பெரிய ஆகாயத்தில் திங்களைச் சேர்ந்து விளங்கும் மகம் என்னும் கோள் மீன் வடிவத்தைப் போன்றதாக வலிமையுடன் அமைக்கப்பட்ட உயர்ந்த கரையைப் பெற்ற நல்ல பொய்கை என்று

குறிப்பிடுதல் வழி பொய்கைக்கரை அமைத்தமையும் பொய்கை கரையும் குளத்தின் கரையில் வளைவாக அமைக்கப்பட்டுள்ளதையும் அறிய முடிந்தது.

**அகழி**

அகழி என்னும் நீர்நிலை குறித்த செய்திகள் சங்க இலக்கியப் பாடல்களில் காண முடிகின்றது. இது ஒரு செயற்கை நீர்நிலை ஆகும். மன்னர்கள் தங்களின் அரண்மனை பாதுகாப்பிற்காக அரண்மனையைச் சுற்றிலும் மதில் அமைத்து மதிலுக்கு அருகில் அகழி அமைத்துள்ளனர். எனவே இது பாதுகாப்பிற்காக அமைக்கப்பட்ட நீர் நிலையாகக் கொள்ளப்படுகிறது. ***மதித்து கிடங்கு***[108] என்று கழகத் தமிழ் அகராதி அகழி என்பதற்கு விளக்கமளிக்கிறது.

> *தேர் வண் சோழர் குடந்தைவாயில்*
> *மாரி அம் கிடங்கின் ஈரிய மலர்ந்த,*[109]

சோழ மன்னனின் குடவாயில் என்கின்ற ஊரில் பெய்த மழையால் அகழி நிரம்பி காணப்படுவதாக இப்பாடல் கூறுகின்றது. இதனைப் பார்க்கும்போது அகழி அமைக்கின்றபோது மன்னர்கள் மழை பெய்கின்ற காலத்தில் மழைநீர் அகழிகளில் தேங்கும் அகழி அமைத்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. மேலும் அகழி அமைக்கும் முறை குறித்து கபிலர் கூறும் பாடல் செய்தி,

> *பார் உடைத்த குண்டு அகழி*
> *நீர் அழுவ நிவப்புக் குறித்து*[110]

பாறை நிலத்தைக் *குந்தாலி* என்னும் கருவியால் இடித்து, குழியாக்கி அமைத்த நீர்நிலையே இந்த அகழி என்றும், இது மிகவும் ஆழமானதாக இருந்ததாகவும் குறிப்பிடுகிறார். இத்தகைய அகழியில் பாதுகாப்பிற்காக முதலைகளையும் வளர்த்துள்ளனர் என்பதை,

*கராஅம் கலித்த குண்டு கண் அகழி,*[111]

முதலைகள் தங்கும் அளவிற்கு ஆழமானதாக இருந்துள்ளது என்றும் அகழி என்பது மன்னன் பாதுகாப்பிற்காக ஏற்படுத்தப்பட்ட நீர்நிலையாக இருப்பினும் மழை நீரைச் சேர்த்து வைக்கும் நிலத்தடி நீர் மட்டத்தினைப் பெருக்கும் வழிமுறையாகவும் என்ற இருநிலைகளில் அகழி அமைக்கப்பட்டுள்ளது என்பதை நோக்குகின்றபொழுது பண்டைய தமிழர்களின் நீர் மேலாண்மை நுட்பம் புலப்படுகின்றது.

*சுழி*

சுழி என்ற நீர்நிலை பற்றிய குறிப்புகள் புறநானூற்றுப் பாடல் மட்டுமே கிடைக்கப்பெற்றுள்ளது. எந்நிலத்தைச் சார்ந்தது, எத்தன்மையது போன்ற செய்திகள் ஏதும் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை.

*அலங்கு கதிர் சுமந்த கலங்கற் சூழி,* [112]

என்கின்ற பாடல் வரிகள் அசைகின்ற சூரியனின் வெயிலைச் சுமந்து நிற்கும் கலங்கிய நீர்நிலை சுழி என்று குறிப்பிடுகின்றது. சுழி என்பதற்கு **நீர்நிலை** என்றே முல்லைத் தமிழ் இலக்கிய அகராதி விளக்கம் அளிக்கின்றது. மேலும் இந்நீர்நிலை பற்றிய குறிப்புகள் வேறு எங்கும் காணப்படவில்லை.

**சங்ககால அணை நீர்த்தேக்க தொழில்நுட்பம்**

சங்க கால மக்கள் குறிஞ்சி மற்றும் முல்லைநிலப் பகுதிகளிலிருந்து பெருக்கெடுத்து வருகின்ற வெள்ள நீரினைத் தடுக்கவும் மழைக் காலங்களில் பெய்யும் மிகுதியான மழையை ஆறுகளில் சென்று, வீணாகக் கடலில் கலக்காதவாறு வேளாண்மைக்குப் பயன்படும் வகையில் தங்கள் அடிப்படைத்தேவைகளை நீர் இல்லாத காலங்களில் நிறைவேற்றிக்கொள்வதற்கு எடுத்த பெருமுயற்சியே இந்த அணை நீர்த் தேக்க தொழில்நுட்பம். அணையைக் கட்டுவதற்கு எவ்வித அறிவியல் தொழில்நுட்பம் இல்லாத அக்கால கட்டத்தில் பல உத்தி முறைகளைக் கையாண்டு காலத்தால் அழியாத கல்லணையைக் கட்டியவர்கள் நம் தமிழர்கள்.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே அணை கட்டும் வழக்கம் இருந்துள்ளது. அதனால்தான் தாம் இயற்றிய தொல்காப்பியத்தில் கல்லாலான அணை நீர்ச்செய்திகளை நூற்பாவில் தெளிவாகக் குறிப்பிடுகிறார். கி. மு. 5ம் நூற்றாண்டைச் சேர்ந்த தொல்காப்பியர் பாடிய பாடல் வரிகள் இவை. இவர் குறிப்பிடும் கற்சிறை என்பது ஒரு அணைக்கட்டு ஆகும். பழந்தமிழர்கள் ஆற்றில் வரும் நீரைக் கற்களால் ஆன கட்டுமானத்தைக் கொண்டு சிறைப்படுத்தி, கட்டுப்படுத்தி பாசனத்துக்குப் பயன்படுத்தினர் என்பதை இப்பாடல் தெரிவிக்கிறது.

*வருவிசை புனலைக் கற்சிறை போல*

*ஒருவன் தாங்கிய பெருமையானும்*[113]

இவர் குறிப்பிடும் கற்சிறை என்பது ஒரு அணைக்கட்டு ஆகும். பழந்தமிழர்கள் ஆற்றில் வரும் நீரைக் கற்களாலான கட்டுமானத்தைக் கொண்டு சிறைப்படுத்தி, கட்டுப்படுத்தி பாசனத்துக்குப் பயன்படுத்தினர் என்பதை இப்பாடல் தெரிவிக்கிறது.

விசையோடு வரும் நீரை ஒரு கற்சிறை (அணைக்கட்டு) தடுத்து நிறுத்துவது போல, வேகமாக முன்னேறி வரும் ஒரு படையை, உறுதியோடு முதலாவதாக முன் சென்று அதனைத் தடுத்து நிறுத்தக் காரணமாவதன் மூலம், ஒரு வீரன் பெருமையடைகிறான் என்பது இதன்பொருள்.

சங்ககால மக்கள் நீரினை அணைகட்டித் தேக்குவதற்கு முயற்சி மேற்கொண்டுள்ளனர். கோடைக் காலங்களில் ஆற்றின் குறுக்காகக் கரையை அமைத்து அந்தக் கரைகளில் கரும்பினை நட்டுள்ளதனைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கின்றது.

*வான் பூங்கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை*
*தீம்புனல் நெரிதர வீய்ந்துக் காஅங்குத்*[114]

பெருக்கெடுத்து வரும் ஆற்றின் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தி அந்நீரினை தேக்குவதற்காக அணை போலக் கரும்பின் கழிகளைப் பயன்படுத்தி உள்ளனர். ஆற்றில் கரை அமைத்து அந்தக் கரைகளை வலுப்படுத்தும் விதமாக கரும்பினைக் கரைகளில் நட்டுள்ளனர்.

கரும்பின் வேறானது மண்ணை இறுக்கிப் பிடித்து மண்ணரிப்பைத் தடுப்பதுடன் கரைகள் வலுவாக அமையவும் ஆற்றின் கரைகளில் கரும்பினை

நடப்பட்டிருக்கலாம். இருப்பினும் மிகுதியான வெள்ளம் வந்தமையால் கரும்பினைக் கொண்டு கட்டப்பட்ட கரையானது, வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டதாகவும், பின் நீரின் பெருக்கத்தை நோக்கும்போது அந்நீரினைத் தடுக்கும் சிறை சிறியதாக இருந்தமையால் வெள்ளை நீரை கட்டுப்படுத்தித் தங்களது தேவையினைப் பூர்த்தி செய்து கொள்வதற்கு அந்நீரினைத் தேக்கி வைப்பதற்கு பல்வேறு நுட்பங்களைச் சங்கத் தமிழர்கள் கையாண்டுள்ளனர்.

*தேம் பாய் மருதம் முதல் படக் கொன்று,*

*வெண் தலைச் செம் புனல் பரந்து வாய் மிகுக்கும்*

*பல சூழ் பதப்பர் பரிய, வெள்ளத்துச்*

*சிறை கொள் பூசலின் புகன்ற ஆயம்*[115]

ஆற்றின் கரையில் மருதமரம் இருந்ததாக மேற்கண்ட பாடல் குறிப்பிடுகின்றது. அம்மருத மரத்தினையும் வெள்ள மிகுதியின் காரணமாக அடியோடு சாய்த்து மெல்லிய நுரையுடன் சிறந்த புது வெள்ளம் எங்கும் பரவியதாகக் குறிப்பிடப்படுகின்றது. வெள்ளத்தினை தடுத்தல் பொருட்டு வைக்கோற் புரிகள் சூழ்ந்த மணல் கோட்டைகளை அமைத்ததாகவும் மூட்டைகளையும் வெள்ளமானது கரைத்ததாகவும் இருப்பினும் மக்கள் அணையினை மூடுகின்ற பணியில் தங்களை ஈடுபடுத்தி கொண்டதாகவும் மேற்கண்ட பாடல் வழி அறிய முடிகின்றது.

ஆற்றின் குறுக்காகக் கரையமைத்து நீரைத்தேக்க முயற்சி மேற்கொண்டுள்ளனர். மண்ணைக்கொண்டு கரைகள் அமைத்தால் அவை நீரினால் அடித்துச் சென்றுவிடும் என்று எண்ணி கரும்பினைக் கரைகளில் நட்டுள்ளனர்.

ஏனெனில் கரும்பின் வேர்கள் மண்ணை இறுக்கிப்பிடிக்கும் தன்மை கொண்டது என்று கருதி அச்செயலில் ஈடுபட்டுள்ளனர். ஆனால் மிகுதியான மழையினால் கரும்பு கழிகளும் நீரில் அடித்துச் செல்லப்பட்டதாகவும் அதற்கு மாற்றாக வலிமையான தடுப்பினை ஏற்படுத்தக் கருதிய சங்ககால மக்கள் மணல் மூட்டைகளைக்கொண்டு வைக்கோற் புரிகளை இறுக்கி மணல் கோட்டைகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

இந்நிகழ்வு இன்றளவிலும் மழை வெள்ளக் காலங்களில் கரையமைக்கும்போது மணல் மூட்டைகளையே தடுப்பாக அமைக்கின்ற பழக்கம் நடைமுறையில் இருந்து வருவதைக் காணமுடிகின்றது.

பெருக்கெடுத்து ஓடிவரும் நீரை ஆற்றின் குறுக்கே தடுப்பணை அமைத்து தடுப்பதற்கு மிகுந்த தொழில்நுட்ப அறிவு தேவைப்படும். ஆற்றுப்படுகையில் பாங்கான இடமாக தேர்ந்தெடுத்து ஆற்றில் நீர்வரத்து இல்லாத கோடைக்காலத்தில் பணியைத் தொடங்கி நீர் வரும் காலத்திற்குள்ளாக அணை அமைக்கவேண்டும். நீர்ப் பெருக்கின்போது அணைக்கட்டின்மீது வழியும் நீருக்கேற்ப ஆற்றின் கரை உயர்த்தப்பட வேண்டும். தமிழ்நாட்டில் உள்ள பண்டைய ஆறுகளில் இத்தகைய கட்டுமானங்களைக் காணலாம்.

*பழந்தமிழர்கள் அணைகளை ஆற்றின் குறுக்கே நேராகக் கட்டாமல் வளைவாகவே அமைத்துள்ளனர். வாத்து அலகு போல் வளைவாக அமைவது சிறந்தது என்று இன்றைய நீரியல் நிபுணர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர். அப்பொழுதுதான் அணையின் செயல் திறன் சிறப்பாக இருக்கும் என்றும் கூறுகின்றனர். இதனை ஆங்கிலத்தில் Duckbill weir என்று அழைக்கின்றனர். இவர்கள் இன்று கண்டுள்ள தொழில்நுட்பத்தைப் பழந்தமிழர்கள் அன்றே செயல்படுத்தியுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது*[116] என்கிறார் முனைவர் மணி. மாறன். எனவே இன்றைய அணை அமைத்தலின் மிகுந்த தொழில்நுட்பத்தினை அன்றே ஆய்ந்தறிந்தவர்கள் நம் சங்ககாலத் தமிழர்கள் என்பதை, மேற்கூறிய நூலாசிரியரின் கூற்றின் வழி அறியமுடிகின்றது.

### குளங்களின் தொழில்நுட்பம்

குளம் நம் ஊர்களைப் பெற்றெடுத்த தாய். குளம் வெட்டிய மண்ணை கரை மீது நிறையே தெருக்கள் அமைக்கப்பட்டன. தெருக்களைத் தொடர்ந்து ஊர் பிறந்தது. பொதுவாகக் குளம் என்பது சிறிய நீர்நிலைகளைக் குறிக்கக் கொங்கு வட்டாரத்தில் அது ஏரியைக் குறித்தது.

குளம் அமைத்தலில் மிக முக்கியமானதாக இடம்பெறுபவை அக்குளத்தின் கரையும் உபரிநீர் வழிந்தோடும் கோடியும் ஆகும். இக்காலத்தில் கோடியே ***கலிங்கல்*** அல்லது ***கலிங்கு*** என்றழைக்கப்படுகின்றது.

இக்கோடியாகிய கலிங்கு இல்லையாயின் குளத்தில் நீர் வழிந்து மண் கரையை உடைத்து நீர் முழுதும் வெளியேறிவிடும். இக்குளத் தொழில்நுட்பச் செய்தியினை மக்களின் வாழ்வியல் அறக்கருத்தோடு ஒப்பிட்டு திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

*அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்*

*கோடின்றி நீர் நிறைந்தற்று*[117]

இவ்வாறு குளம் அமைத்தலில் சங்ககால மக்கள் கண்ட தொழில்நுட்பத் திறனை அறியமுடிகின்றது.

***உலகில் இரண்டு இடங்களில்தான் குளங்கள் நெருக்கமாக அமைந்துள்ளன என்பர். ஒன்று எகிப்து, இன்னொன்று தமிழ்நாடு. நீர் ஓடும் இடமே 'ஓடை'. ஓடை நீர் இயற்கையான பள்ளங்களில் தேங்கினால் அது 'மடு'. இதுவே இயற்கையான குளத்தின் தோற்றுவாய். ஒரு குளக்கரையில் முதுமக்கள் தாழிகள் கண்டெடுக்கப்பட்டால் அக்குளம் சங்க காலத்தைச் சார்ந்தது என்பது பொருள். நம் பண்பாடும் ஒன்றோடு ஒன்று பின்னிப்பிணைந்தவை***[118].

இவ்வாறு தம் நூலில் குளம் பற்றிய செய்திகளை விவரிக்கின்றார் நீர் எழுத்து ஆசிரியர் நக்கீரன்.

ஏரி தொழில்நுட்பம்

ஏரிகள் அமைக்கப் பயன்படுத்திய தொழில்நுட்பங்கள் தண்ணீரைப் பகிர்வதிலும் சிக்கனமாக பயன்படுத்துவதிலும் தமிழர்கள் கடைப்பிடித்த நீர்மேலாண்மைக் கோட்பாடுகள் இன்றைக்கும் பொருந்துவதாக உள்ளன. இன்றும்

பல்லாயிரக்கணக்கான ஏரிகள் குளங்கள் கண்மாய்கள், அணைக்கட்டுகள், வாய்க்கால்கள் போன்ற நீர்நிலைகள் சங்ககாலம் முதல் இன்று வரையிலும் காணப்படுகின்றன.

ஏரியின் கரை நீளம் குறைவாகவும், அதிக நீர் கொள்ளளவு கொண்டதுமான அமைப்பு எட்டாம்பிறை வடிவில் அமைப்பதில் மிகவும் சிக்கனமான வடிவமைப்பு. இத்தகைய உறுதித் தன்மை மிக்கதாக அந்நீர்நிலையானது அமையப்பெறும் எனக்கருதியே வடிவமைப்பினை வடித்ததாகக் கொள்ளலாம். சிறுபஞ்சமூலம் ஏரி அமைக்கப்படவேண்டிய தன்மையை பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

> *குளம்தொட்டுக் கோடு பதித்து வழிசீத்து*
> *உளம்தொட்டு உழுவயல் ஆக்கி - வளம்தொட்டுப்*
> *பாகுபடும் கிணற்றோடு என்று இவ்ஐம்பால் படுத்தான்*
> *ஏகும் சுவர்க்கத்து இனிது*[119]

காரியாசான் கூற்றுப்படி, ஒரு ஏரியைக் கீழ்க்கண்ட ஐந்து அம்சங்களுடன் அமைப்பவன் சொர்க்கத்திற்குப் போவான் என்பது இப்பாடலின் பொருளாகும்.

ஏரிக்கு மூவகை கால்கள், கால்வாய்கள் உள்ளன. ஏரிக்கு நீர் வரும் வழி வரத்துக் கால். ஏரிநீர் வெளியேற உதவும் கால் மறுகால். வயலுக்கு நீரை சேர்க்கவும் கால் அல்லது பாசனக்கால், வாய்க்கால் என்ற இரு சொற்களின் பொருள் வேறுபாட்டுக்குத் தெளிவான வரையறை இல்லை. எனினும் கொடுமுடி சண்முகம் ஒரு விளக்கம் தருகிறார்.

*இயற்கையாக அமைந்தது வாய்க்கால்; இது ஆங்கிலத்தில் சேனல் (Channel) கேனல் எனப்படும். (எ-டு-English Channel).செயற்கையாக வெட்டப்பட்டது கால்வாய்; இது ஆங்கிலத்தில் கெனால் (Canal) என்பர். (எ-டு Bukingam Canal) என்கிறார் அவர். கால்-வழி; நீருறும் இடம். முதன் முதலில் மலை ஊற்றிலிருந்து மூங்கில்களைப் பொருத்தி நீர் கொண்டு வந்தமையால் கால்வாய் என்ற பெயர் உருவானது என்பார்கள் தமிழறிஞர்கள்[120].*

தமிழகத்தில் 39,000க்கும் மேற்பட்ட ஏரிகள் இருப்பதாகக் கணக்கிடப் பட்டுள்ளது. இவை சங்ககாலம் முதல் ஆங்கிலேயர் வரும்வரை கட்டப்பட்டவை. ஏரிப்பாசனத்தில் பல தொழில்நுட்பங்களைப் பழந்தமிழர்கள் பயன்படுத்தி வந்துள்ளனர்.

ஏரிகளில் மண்கரைகள் அமைக்கும்பொழுது, நீர்க்கசிவைத் தடுப்பதற்காக களிமண்ணால் ஆன உட்சுவர் ஒன்றை அமைத்து, பின் அதனை மூடி மண்கரைகள் அமைப்பதுதான் உலகெங்கும் உள்ள நடைமுறையாகும். ஆனால் தமிழ்நாட்டில் உள்ள பழமையான ஏரிகளில் இது போன்ற உட்சுவர் இல்லை. நீர்க்கசிவும் இல்லை. மேலும் அந்தந்த பகுதியில் உள்ள மண்ணைக் கொண்டே ஏரிக்கரைகள் அமைக்கப் பட்டுள்ளன.

பருவமழை இல்லாத காலங்களிலும் பருவமழை பெய்யும் காலங்களிலும் மழைநீரைத் தக்கமுறையில் பயன்படுத்த ஏற்படுத்தப்பட்ட நீர்மேலாண்மை தொழில்நுட்பமே நீர்ப்பாசனக் கட்டுமானத்திற்குத் தோற்றுவாயாக அமைந்தது.

இதனால் அடிப்படை நீர்த்தேவைகளையும் வேளாண் உற்பத்தி நிலைகளிலும் பழந்தமிழர்கள் நிறைவைக் கண்டனர். பாசன வேளாண்மைக்கு நீரினை விளைநிலங்களுக்கு எடுத்துச் செல்ல, கால்வாய்கள் வரத்துக்கால் ஏரி, குளம் போன்ற வழிமுறைகளைத் தக்க முறையில் அமைத்தவர்கள். அணைகளில் தேக்கி வைத்திருக்கும் நீரினைக் கொஞ்சம் கொஞ்சமாக திறப்பதற்கு, மூடுவதற்கு ஏற்ற தொழில்நுட்பங்களையும் கைக்கொண்டனர். அதன் விளைவே மதகு, மடை, குமிழி, புதவு, சுருங்கை போன்ற நீர் தொழில்நுட்பக் கட்டுமான அமைப்புகள் ஆகும்

பழந்தமிழகத்தில் சங்ககாலம் வரை கட்டப்பட்ட ஏரி / குளங்களில் பயன்படுத்தப்பட்ட சில சிறப்புத் தொழில்நுட்பங்களை இங்குக் காண்போம்.

- நீர்த்தேக்கங்கள் கட்டப்படுவதற்குப் பதில் தொடர் ஏரிகள் அமைக்கப்பட்டன.
- ஏரிகள் ஆற்றிலிருந்து நீர் பெற்றதோடு, தங்களுக்கென சொந்த வடிநிலங்களையும் கொண்டிருந்தன.
- வரத்துக் கால்வாய்களும், பாசன வாய்க்கால்களும் பாசன நீரைக்கொண்டு செல்வதொடு, வடிகால் நீரையும் கொண்டு செல்லுமாறு வடிவமைக்கப் பட்டிருந்தன.
- ஏரிகளின் இடத்தேர்வும், வடிவமைப்பும் மட்டுமில்லாது மதகு, கலிங்கு, மண்கரை போன்றவைகளும், மிகச்சிறந்த தொழில்நுட்பத்தையும், மிக உயர்ந்த தரத்தையும் கொண்டிருந்தன. பழந்தமிழகத்தில் சங்ககாலம் வரை பயன்படுத்திய பாசனத் தொழில்நுட்பங்களை அடிப்படையாகக்கொண்டே,

இடைக்காலப் பல்லவ பாண்டிய அரசுகளும், அதன்பின் வந்த பிற்காலசோழ பாண்டிய அரசுகளும் பாசனக் கட்டுமானங்களை உருவாக்கிப் பயன்படுத்தின எனலாம். இந்த பழங்காலத் தொழில்நுட்பங்களை, பழங்கால நிர்வாக முறைகளை அடிப்படையாகக் கொண்டே, ஆங்கிலேயர் காலம் வரை பல புதிய பாசன அமைப்புக்கள் உருவாக்கப்பட்டு நிர்வகிக்கப்பட்டு வந்தன. அதில் அவ்வப்பொழுது காலத்துக்கேற்றவாறு வளர்ச்சிகர தொழில்நுட்பங்களும், புதிய நிர்வாகச் சீர்திருத்தங்களும் புகுத்தப்பட்டன.

**சங்ககால நீர்ப்பாசன கட்டுமான அமைப்புகள்**

சங்ககால மக்கள் மேற்கொண்ட நீர்ப்பாசனக் கட்டுமான அமைப்புகள் கட்டுமான உத்திமுறைகள்,

**புதவு**

புதவு பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து உள்ளிட்ட இலக்கியங்களில் குறிப்புகள் காணப்படுகிறது. அதில் புதவு என்பது நீர் வெளியேறும் அமைப்பு என்கிறது. நீர் மோதக்கூடிய இடமாகச் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றது.

*இழுமென ஒலிக்கும் புனல் அம் புதவின்,* [121]

*நிறைகுளப் புதவின் மகிழ்ந்தனென் ஆகி* [122]

*புனல் பொரு புதவின் உறந்தை எய்தினும்* [123]

*புல்அரைக்காஞ்சிபுனல்பொருபுதவின*[124]

மேற்சுட்டிய பாடல்வழி புதவு பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணக்கிடைக்கின்றது. தமிழகப் பாசன வரலாறு என்ற நூலில் புதவு என்பதற்கு ***தண்ணீர் வெளியேறும் சிறிய வழி*** [125] என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

**சுருங்கை**

நீர்நிலை கட்டுமானங்களில் இடம்பெறும் நீர் வெளியேற்றும் அமைப்புகளில் ஒன்றாகப் புதவு போன்று சுருங்கையும் ஒன்றாகும். எனவே ***சுருங்கை என்பதும் புதவு என்பதும் தண்ணீர் வெளியேறும் சிறிய வழிகள்*** [126] என்றே தமிழக பாசன வரலாறு என்ற நூலில் கோமதிநாயகம் குறிப்பிடுகிறார்.

இன்றைய கால நிலத்தடி நீர் குழாய்களுக்கு முன்னோடியாக இருந்தவையே சுருங்கை சங்ககாலத் தமிழர் கண்டறிந்த மேலாண்மை தொழில்நுட்பச் சிந்தனையில் சுருங்கை முக்கியப்பங்கு வகிக்கின்றது. சுருங்கை என்பதற்குப் பூமிக்கடியில் சுரங்க வழியாக நீரைக்கொண்டு செல்ல மூங்கில் மற்றும் மரங்களால் வடிவமைக்கப்பட்ட ஒரு தொழில்நுட்பமாகும்.

மணிமேகலையின் பன்னிரண்டாம் காதையான அறவணர் தொழுத காதை என்னும் பகுதியில், புத்ததேவன் தோற்றம் பற்றி, கூறவரும் கூலவாணிகன் சாத்தனார்,

*பெருங்குள மருங்கில் சுருங்கைச் சிறுவழி*

*இரும்பெரு நீத்தம் புகுவது போல*

*அளவாச் சிறுசெவி அளப்பரு நல்லறம்*

*உளமலி உவகையொடு உயிர்கொளப் புகும்*[127] (1384 - 87)

என்கிறார். சுருங்கை என்பது பூமிக்கடியில் செல்லும் சிறியகுழாய். அதாவது, பெருங்குளங்களாகிய பேரேரிகளின் ஒருபுறமுள்ள சிறிய சுருங்கை வழியாக, அங்குத் தேக்கப்பட்ட நீர் வெளியேறி மக்களுக்கு அளவிட இயலாத வகையில் பயன்தரும். அதுபோல, செவித்துளை வழியே நல்ல அறக்கருத்துகள் உள்ளத்தைச் சென்றடையும் என்பதே இதன் பொருள்.

1,600 ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தின் ஏரிகளிலும், குளங்களிலும் இருந்து நீர்வெளியேற்றும் மதகு அமைப்பு சுருங்கைகளாக இருந்தன. இந்த மதகு அமைப்பே குமிழித்தூம்பு என்பதாகும். பழந்தமிழர்களின் நீர் மேலாண்மை செயல்பாட்டில் இந்தக் குமிழித்தூம்பு அறிவியல் சார்ந்த மிக நுட்பமான, நேர்த்தியான பயன்பாடுடைய படைப்பாகும்.

**மடை**

பாசன நிலங்களுக்கு நீரினைத் திருப்பி விடுவதற்காக அமைக்கப்பட்ட தொழில்நுட்ப மடையாகும். ஏரி குளங்களில் உள்ள நீரினை விளைநிலங்களுக்குத் தேவையான அளவு வழங்குவதற்காக ஏற்படுத்தப்பட்டது. மடையானது இரும்பு அல்லது மரத்தினால் செய்யப்பட்டிருக்கும். திறக்கவும் மூடவும் இயலும். தேவைப்படும் நீரில் மட்டுமே நீர்நிலைகளிலிருந்து வழங்கிய பின் மூடப்படுகிறது.

வறண்ட காலங்களிலும் பாசன வசதி மேற்கொள்வதற்கு மடை மிகுந்த பங்களிக்கின்றது.

நீர்நிலை கட்டுமானங்களில் அமைக்கப்படும் மற்றொரு அமைப்பு மடை என்பதாகும். மடை குறித்து கோமதிநாயகம் அவர்கள் கூறும் கூற்று நோக்கத்தக்கது. மேற்கோள் *மடை என்பது தண்ணீரை வெளியேற்றும் ஒரு அமைப்பாகும். ஆறு குளம் ஏரி கால்வாய்களில் தண்ணீர் வெளியேற்றுவதற்காக அமைக்கப்படுவது. இந்த மடையில் ஒரு கதவு இருக்கும். கதவைத் திறந்தால் மடை திறந்த வெள்ளம் போல் தண்ணீர் வெளியேறும். இந்த அமைப்பில் வெளியேறும் தண்ணீரின் அளவை கூட்டவோ குறைக்கவோ முடியாது*[128] என்று குறிப்பிடுகிறார்.

மடை பற்றிய செய்தி பரிபாடலில் உள்ளது

*வையை உடைத்த மடை அடைத்த கண்ணும்*[129]

சங்க இலக்கியங்களில் மடையானது செயல்படும் முறை குறித்த செய்திகள் ஏதும் கிடைக்கப்பெறவில்லை.

**மதகு**

சங்ககாலம் முதல் இக்காலம் வரையிலும் இச்சொல்லாடல் வழக்கத்தில் இருந்து வருகின்றது. அதாவது *தண்ணீர் போனால் தொட்டிக்கு என்ன வாட்டம்* என்ற பழமொழி கொண்டு இதன் சிறப்பை உணரலாம். மதகு குறித்த செய்தியினைப் பரிபாடல்,

*நுரையுடன் மதகு தொறு இழி தரு புனல்*[130]

என்ற பாடல், மதகு வழியாகத் தண்ணீர் வெளியேறியது என்ற குறிப்பு காணப்படுகிறது.

மேலும் மதகினைப் பற்றிக் குறிப்பிடுகையில், *மதகு என்பது மடை அதைப் போன்றே அமைக்கப்படுவது. ஆனால் இதன் கதவைச் சிறுகச் சிறுக திறக்கலாம். வெளியேறும் தண்ணீரின் அளவை கூட்டவோ குறைக்கவோ முடியும். இது தற்காலத்தில் மதகு அடைப்பான் என்பதற்கு ஒப்பாகும்*[131] என்று மதகின் அமைப்பினைப் பற்றி வரையறை செய்துள்ளனர்.

குமிழி

குமிழி என்பது குளங்களிலிருந்து வெளியே தண்ணீர் வெளியேற்ற கல்லாலான பெட்டி ஒன்றை அமைத்து, அதில் துளையிட்டு, அதன் வழியாகத் தண்ணீர் புகுந்துவரும் அமைப்பாகும். மரத்தால் செய்யப்பட்ட பட்டை மூலம் இக்குழியின் குமிழித்துறையை அடைப்பார்கள். குமிழின் துளை வழியாக தண்ணீர் போகும்போது ஒரு சுழல் உண்டாகும் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

இக்கருத்திற்கேற்ப மலைபடுகடாம் பாடல் பின்வரும் செய்தியைத் தெரிவிக்கின்றது.

*வனைகலத் திகிரியின் குமிழி சுழலும்*
*துணைசெலல் தலைவாய் ஓஇறந்து விரிக்கும்*
*காணுநர் வயாஅம் கட்குஇன் சேயாற்றின்* [132]

குமிழி வழியாக நீர் பாய்வது என்பது குயவனுடைய மங்கள மண்டலத்தின் சக்கரம் போலக் குளித்துச் சென்று விரைந்த போக்கினையுடைய ஆறு.

வண்டல் மண்ணையும் சேற்றையும் ஏரியில் இருந்து வெளியேற்ற ஒரு தொழில் நுட்பத்தை வைத்திருந்தார்கள். அதற்குப் பெயர் குமிழி. இதுவும் ஏரிநீரை வெளியேற்றும் ஒரு அமைப்புதான். இது ஏரியின் தரைதளத்தில் மதகுகளிலிருந்து 300 அடி தொலைவில் ஏரியின் உட்புறமாக அமைத்திருப்பார்கள்.

**கலிங்கு**

பழந்தமிழ் நூல்களில் இத்தகு நீர்நிலைகளிலிருந்து மிகுநீரை வெளியேற்ற ***கலிங்கு*** என்ற அமைப்பை ஏற்படுத்தியிருந்தனர். இக்கலிங்கு குறித்த தகவல்கள் இலக்கியங்களில் சுட்டிக்காட்டப்படுகின்றன. இத்தகு தொழில்நுட்பம் நம் தமிழகத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே பயன்பாட்டில் இருந்து வந்துள்ளது.

வெள்ள நீரினை வெளியேற்றும் நீர்நிலை கட்டுமான அமைப்புகளுள் ஒன்று கலிங்கு என்பதாகும். கலிங்கு என்னும் சொல் முதன் முதலில் சீவக சிந்தாமணியில் காணப்படுகின்றது.

*அரிவைதன் நெஞ்மெனும் அகன்குளம்*
*நிறைந்த வாள்கன் கரியமை சேறு*
*சிந்திக் கலிங்குகள் திறந்தவன்றே*[133]

மேலும் கலிங்கு குறித்த செய்தினை ***நீர் எழுத்து*** என்னும் நூலில் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிடுகின்றார்.

*கலிங்கு என்னும் சொல் சீவகசிந்தாமணியில் முதலில் காணப்பட்டாலும் இதன் கட்டுமானம் மிகப் பழையது. முன்னர் கற்சிறை என்றும், கோடி என்றும் கலிங்கைக் குறித்துள்ளனர். ஏரிக்கரையின் ஒரு கோடியில் இது அமைந்ததால் 'கோடி' எனப்பட்டது.* சில இடங்களில் *மொட்டை , கலிங்கு* [134] என்று அழைக்கப்பட்டது.

எனவே சங்ககாலத் தமிழர்கள் நீர்நிலைகளில் நீரினைத் தேக்குவதற்கும் தேக்கிய நீரினை வெளியேற்றுவதற்கென கட்டுமான அமைப்புகளைப் பயன்படுத்தியதோடு அதன் வழியே நீர்மேலாண்மை நுட்பச் சிந்தனைகளையும் கொண்டு சங்ககாலத்தமிழர்கள் திகழ்ந்தனர் என்பதை உணரமுடிகின்றது. பழங்காலத் தொழில்நுட்பத்தினையே இக்காலத் தமிழர்கள் புதிய தொழில் கருவிகளைக்கொண்டு சில மாற்றங்களைப் புகுத்தி மேற்கொண்டாலும், சில கட்டுமான அமைப்புகள் எந்த நவீனமயமாக்குதலுக்கும் ஆட்படாமல் அப்படியே இன்றளவும் பயன்பாட்டில் இருந்து வருவதை அறியமுடிகின்றது.

**வேளாண்மையில் நீர் மேலாண்மை**

பண்டைத் தமிழர்களின் வாழ்வியலைக் காட்டும் சங்க இலக்கியங்கள் வேளாண் தொழில் பற்றிய பல்வேறு செய்திகளைத் தருகின்றன. சங்ககாலத்தில் உயிர்காக்கும் தொழிலாகப் போற்றப்பட்டுள்ளது. இயற்கையாகவே வேளாண் தொழிலுக்குத் தேவையான அனைத்தும் சிறப்பாகவே இருந்துள்ளது. வேளாண்மைக்கு மிகவும் அத்தியாவசியமானதாக கருதப்படுவது நிலமும் நீரும். இவைகளின் இணைப்புச் செயலே உணவு பொருள்களின் உற்பத்தி ஆகும். இக்கருத்தினை கூறும்

*உணவெனப் படுவது நிலத்தொடு நீரே*[135]

புறநானூற்றுப் பாடல் வாயிலாக உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே என்று கூறுவதிலிருந்து அறியலாம்.

வேளாண்மைத் தொழில் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழரது உயிர்த் தொழிலாக அமைந்திருந்தபோதிலும், அது பற்றிய முக்கியக் குறிப்பாகத் தருவது சங்க இலக்கியத்திற்கான இலக்கண நூலாகிய தொல்காப்பியம் ஆகும்.

***வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது***
***இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி***[136]

என்று தொல்காப்பிய நூற்பா குறிப்பிடுவதிலிருந்து அக்காலத்தில் வேளாண் தொழில் நடைபெற்றிருந்ததனை அறியமுடிகின்றது. மேலும் வேளாண்தொழில் செய்பவர்களை '**வேளாண் மாந்தர்**' என்றழைக்கப்பட்டனர். அவர்களது அடிப்படை தொழிலான வேளாண் தொழிலை மட்டுமே செய்தல் வேண்டும்.

**குறிஞ்சி நில வேளாண்மை**

குறிஞ்சி நிலமாக வகைப்படுத்தப்பட்ட மலையும் மலை சார்ந்த இடத்தை பற்றிக் கூறும்பொழுது அந்நிலப்பகுதி சிறு சிறு பாறைகளும் மண்ணும் கலந்த பகுதியாக அமைந்துள்ளதாக அறியப்படுகின்றது. மேலும் இந்நில பாகுபாட்டுக்குள்ளும் அதன் வெவ்வேறு இயல்புகள் கருதி வேறுவேறு பெயர்களில் வழங்கப்பட்டுள்ளமையை, சங்க இலக்கியங்களின் வழியே அறியலாகின்றது.

*குறிஞ்சி நிலப்பகுதி மலையும் மலை சார்ந்த பகுதி. இந்நிலத்தில் மண்குன்றத்தை சார்ந்து சிறு சிறு கற்களும் மண்ணும் கலந்த கலவையாக மலை ஏனைய காலங்களில் வறண்டே காணப்படும். மிகுதியாகக் கற்களையே கொண்டிருப்பதால் இந்நிலப் பகுதியில் மண் வளம் குறைவு. ஆகையால் வேளாண் பொருட்களை உற்பத்தி செய்வது என்பது கடினமான பணியாகும். இதனால் இந்நிலப்பகுதியை வன்புலம் என்பர்*[137].

இந்நிலப்பகுதி பயிர்த்தொழில் செய்வதற்கேற்ற நிலமாக அமையப் பெறாததால் பயிரிடுவதற்கு ஏற்றவாறு இந்நிலத்தை திருத்திய செய்தியைப் புறநானூறு பின்வருமாறு கூறுகின்றது.

*கரி புனம் மயக்கிய அகன் கண் கொல்லை*[138]

வேளாண்மை செய்வதற்கு ஏற்றவகையில் புதர்கள் மண்டிக் காட்சியளித்த செடிகொடிகளை வெட்டி எறிந்து, சுட்டு தீக்கிரையாக்கி, பின் நிலத்தை பக்குவப்படுத்திப் பயிர் செய்தனர். ஆகையால் குறிஞ்சி நிலம் புன்செய் நிலம் என்ற பெயரால் அழைக்கப்பட்டுள்ளது.

*இன்றும் சில மலைவாழ் பழங்குடிகளின் இடம் இத்தகைய குறிஞ்சி நில ஆதி வேளாண்மை நடைமுறையில் இருந்து வருகிறது. தர்மபுரி மலைப்பகுதிகளில் விவசாயம் செய்வோர் சாகுபடி தொடங்கும் முன் தமது கொள்ளைகளில் தீயிட்டுக் கொளுத்திய பின் சாகுபடி தொடங்குவர். இது உலகெங்கும் நிலவிய ஆதி வேளாண்மை ஆகும். தீயிட்டுப் பயிர் செய்த நிலம் உழப்படாததாலும்,*

*கால்நடைகளின் மூலமாக உரமிடப்படாததால், சில காலத்திற்குள் பயனற்றதாகி விடும். அதனால் அந்தக் கொள்ளையை விட்டு விட்டு வேறொரு கொள்ளையை பழங்குடிகள் வெட்டி சரிப்படுத்தி தயாரித்துக் கொள்வர்*[139] என்று தேவ. பேரின்பன் கூறுகிறார்.

குறிஞ்சி நில மக்களின் வேளாண் பாசன முறையை நான்கு வகைகளில் பிரித்துக் கூறலாம்.

1. சுனை பாசனம்
2. அருவி நீர்ப்பாசனம்
3. மழை பாசனம்
4. படு நீர்ப்பாசனம்

1) **சுனை பாசனம்**

குறிஞ்சி நிலமக்கள் சுனைநீரைப் பயன்படுத்தி வேளாண் தொழிலை மேற்கொண்டுள்ளனர் என்பதனை நற்றிணைப் பாடல் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*அகல் வாய்ப் பைஞ் சுனை பயிர் கால்வாய்*[140]

என்ற பாடல்வழியாக சுனைகளின் பக்கத்திலேயே விளை நிலங்களை அமைத்து விவசாயம் புரிந்துள்ளனர் என்பதை உணர முடிகின்றது. மற்றொரு பாடலில் சுனை நீரினால் நெல் விளைந்ததாகக் குறிப்பிடுவதனை,

*நிலத்து அன்ன விதைப்புன மருங்கில்*

*மகுளி பாயாது மலிதுளி தாழாலின்*

*அகளத்து அன்ன நிறை சுனைப் புறவின்*

*கௌவை போகிய கருங்காய் பிடிஏழ்*[141]

சுனை நீரைப் பயன்படுத்தி எத்தகைய பாசன முறையை மேற்கொண்டனர் என்பது பற்றியோ நீர் இரைப்பதற்கான கருவிகள் இருந்தமை பற்றிய குறிப்புகளோ ஏதும் சங்கப்பாடல்களில் இடம்பெறவில்லை. எனவே சுனை நீரினால் பயிர்கள் வளர்ந்தன என்பதைக்கொண்டு மலைப்பகுதியில் பயிர் செய்யப்பட்ட நிலையை அறிய முடிகின்றது.

2) அருவி பாசனம்

குறிஞ்சி நிலத்தில்தான் மழைப்பொழிவு நன்கு பொழிகிறது. எனவே அருவியாகிய நீர்நிலைக்கு அருகே விளைநிலங்களை அமைத்துத் தினை கொள், ஐவன நெல் ஆகிய பயிர்களைப் பயிர் செய்து வேளாண்மை நடைபெற்றதை,

*கொய்யா முன்னும் குரல் வார்பு தினையே*

*அருவி ஆன்ற பைங் கால் தோறும்*

*இருவி தோன்றின பலவே .............*[142]

என்ற அகநானூற்றுப் பாடல்வழி அருவிநீர் பாசனம் நடைபெற்றதை அறியமுடிகின்றது. மேலும் குறிஞ்சி நில மக்கள் ஐவன நெல் விதைத்த செய்தியையும் அதில் களைகளை நீக்கியதாகவும் சங்கப் பாடல் தெரிவிக்கின்றது.

*மைப்படு சிலம்பின் ஐவனம் வித்தி*

*அருவியின் விளைக்கும் நாடனொடு* [143]

மற்றொரு பாடலில்

*அருவிப் பரப்பின் ஐவனம் வித்தி*

*பருஇலைக் குளவியொ டு பசுமரல் கட்கும்*

*காந்தள்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென*[144]

3) படு நீர்ப் பாசனம்

கல் தரையைப் பிளந்து அருவிநீர் வழிந்து இயங்குமாறு அமைந்துள்ள நீர்நிலை என்பதாகும். சங்க இலக்கியத்தில் நீர்நிலையில் பெற்ற நீரினைக்கொண்டு வாழை வளர்ந்ததாகப் பின்வரும் நற்றிணை பாடல் குறிப்பிடுகின்றது.

*படுநீர்ச் சிலம்பில் கலித்த வாழை*[145]

மேற்குறிப்பிட்ட பாடலுக்குச் சான்றாக இன்றைக்கும் பழனிமலை போன்ற மலைப் பகுதிகளில் வாழை பயிர் சாகுபடி செய்யும் நிலை காணப்படுகின்றது.

*மலைப் பகுதியில் மட்டுமே நன்கு விளையக் கூடிய வாழை ரகங்கள் உள்ளன. இவை மலைப்பகுதியில் வனப்பகுதியை சரிசெய்து சம உயர வரப்பு அமைக்க வேண்டும், எனவும் மலைப்பகுதிகளில் நன்கு விளையக்கூடிய வாழை ரகங்களாக விருப்பாட்சி, சிறுமலை செவ்வாழை, நம் அரை மனோரஞ்சிதம், லாடன் போன்ற வாழை ரகங்கள் குறிப்பிடப்படுகின்றன*[146] என்று கண்ணையன் ச. நவீன வேளாண் தொழில் நுட்பங்கள் என்னும் நூலில் குறிப்பிடுகின்றார்.

**மழை பாசனம்**

குறிஞ்சி நிலம் வானம் பார்த்த பூமியாதலால் மழையை நம்பியே விவசாயம் நடைபெற்றுள்ளது. மிகுதியான மழை குறிஞ்சி நிலத்தில் பெய்தாலும் நீர் வளம் குறைந்த பகுதியாக இந்நிலப்பகுதி அமையப்பெற்றுள்ளதால், இங்கு பெய்யும் மழையை வேளாண்மைக்கு உதவும் மழையாகவே கருதப்படுகின்றது.

*தொழில்மழை பொழிந்த பானாட் கங்குல்*[147]

என்ற பாடலில் நக்கண்ணையார் குறிஞ்சி நிலத்தில் பெய்யும் மழையை **தொழில் மழை** என்றே குறிப்பிடுகிறார்.

குறிஞ்சிநிலத்தில் குறிப்பிட்ட பகுதியில் வேளாண்மை புரிவதற்கேற்ற விளைநிலமாக ஏனைய பகுதிகளில் பயிரினைப் பயிரிட்டாலும் நிலத்திற்குத் தேவையான நீர் போக, எஞ்சிய நீரை வீணாக்காமல், அப்பயிர்களின் ஊடே ஊடு பயிர்களை விதைத்து அவற்றிற்கு நீர்பாய்ச்சி இரட்டை மகசூலைப் பெற்றனர். இரு வேறுபட்ட பயிர்களைப் பயிரிடுவதன் வாயிலாக புதிய தொழில்நுட்பத்தை வேளாண்மையில் சங்கத்தமிழர்கள் பெற்றனர். இதனை,

*ஐவனம் வித்தி மையுநக் கவினி*
*ஈனல் செல்லா ஏனற்கு இழுமெனக்*
*கருவி வானம் தலைஇ யாங்கும்*[148]

என்ற புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. அதாவது அடர்ந்த புதர் பகுதியில் எரித்து தீக்கிரையாக்கப்பட்ட பின் நீண்ட இடங்கொண்ட கொல்லையில் வேடர்

ஐவன நெல் விதைத்த நிலையில் இடியுடன் கூடிய மழை பொழிந்தது என்ற செய்தியைக் கூறுகின்றது.

இவ்வாறு குறிஞ்சி நில மக்கள் பல்வேறு வகையான பாசனநுட்ப முறைகளை மேற்கொண்டு வேளாண் பொருட்களை உற்பத்தி செய்தனர். மேலும் தங்களுக்கு கிடைக்கப்பெற்ற நீரினைக்கொண்டு ஒரே சாகுபடியில் பல்வேறு பயிர்களை விதைத்துள்ளனர்.

**முல்லை நில வேளாண்மை**

புன்செய் பயிர் விளையும் பகுதியே முல்லை நிலம். செம்மண் பரப்பைக் கொண்ட காட்டுநிலப் பகுதியாகிய முல்லைநிலப் பகுதியில் வேளாண்மை நடைபெற்றதைப் பதிற்றுப்பத்து பாடல் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

*பல்பூஞ் செம்மற் காடு பயம் மாறி*

*அரக்கத் தன்நுண் மணற்கோடு கொண்டு*[149]

முல்லைநிலத்திலும் மழையின்றி விவசாயம் நடைபெறவில்லை என்பதை, குறுந்தொகை பாடல், மழை இல்லாததால் எருதுகள் சோர்வுற்றுக் கிடந்ததாகவும், புள்ளிமான்கள் வறட்சியால் நடுங்கிக் கிடந்ததாகவும், அதன் பின்னே கரிய மேகங்கள் இடியோடு கூடிய மழை பெய்து உழவிற்குப் பயன்பட்டதாக அமைந்தது என்று குறிப்பிடுவதிலிருந்து முல்லைநிலத்தில் மழை பெய்த பின்பே வேளாண் தொழில் நடைபெற்றுள்ளது என்பதை அறிய முடிகின்றது. முல்லை நிலத்திலும் மழை பாசனம் மட்டுமே நடைபெற்றது என்பதை,

*முதல் புறவு சேர்ந்திருந்த*
*புன்புலச் சீறூர், நெல் விளையாதே*
*வரகும் தினையும் உள்ளவை யெல்லாம்*
*இரவன் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன*[150]

மற்றொரு பாடலில்

*சிறுத்தினை கொய்ய கவ்வை கறுப்ப*

*கருங்கால் வரகின் இருங்குரல் புலர*[151]

என்ற பாடல்கள் தெரிவிக்கின்றன. முல்லைநிலத்தில் வரகு, தினை, எள் போன்ற புன்செய் பயிர்கள் மட்டுமே வளர்ந்தன என்றும், நெல் போன்ற பயிர்கள் விளையவில்லை என்று குறிப்பிடுகின்றது.

**மருத நில வேளாண்மை**

வேளாண் தொழிலுக்கு உகந்த நீர் வளமும் மண் வளமும் உள்ள மருத நிலப் பகுதியை மென்புலம் என்பர். வயலும் வயல் சார்ந்த இடம் என்றும் இவற்றை அழைப்பர். குறிஞ்சி, முல்லை போன்ற மேட்டு நிலப் பகுதிகளிலிருந்து வருகின்ற நீரானது, மருத நிலத்திற்கு வருகின்றபோது, மருதநிலம் சமதளப் பரப்பு ஆகையால் மழையால் இம்மருதநிலம் வேளாண்மையில் சிறப்புற்று விளங்குகின்றது. அது மட்டுமின்றி பொய்கை, குளம் போன்ற செயற்கை நீர்நிலைகளை அமைத்தும், வறண்ட காலங்களில் வேளாண் பாசன தொழில்நுட்ப முறைகளை மேற்கொண்டனர். குள பாசனம், பொய்கைப் பாசனம், ஆற்றுநீர்ப் பாசனம் உள்ளிட்டவையும் மேற்கொண்டனர். மருத நிலத்தில் மழை பாசனம் நடைபெற்றதை,

*வானம் மின்னு வசிவு பொழிய ஆனாது*

*இட்ட எல்லாம் பொட்டங்கு விளைய*

*ஆகல் இரு விசும்பின் ஆஅல் போல*[152]

என்ற பாடல் குறிப்பிடுகின்றது,

மருதநிலத்தில் மற்ற நிலங்களைப்போலவே மழை பெய்த பின்னர் உழவுத் தொழில் நிகழ்ந்ததைப் பதிற்றுப்பத்து பாடல் குறிப்பிடுகின்றது.

*காலை மாரி பெய்து தொழில் ஆற்றி*[153]

காலையில் மழை பெய்ததால் உழவுத்தொழில் நடைபெற்றதாகச் சுட்டுகின்றது. நிலத்தில் ஈரம் உலரும் முன் உழுதுவிட வேண்டுமென்றும் அவ்வாறு உழுவதற்கு வலிமை மிக்க எருதுகளையே பயன்படுத்தினர். என்பதை,

*ஈரச் செவ்வி உதவின ஆயினும்*

*பல் எருத்துள்ளும் நல் எருது நோக்கி*

*வீறு வீறு ஆயும் உழவன் போல*[154]

என்ற புறநானூற்றுப்பாடல் குறிப்பிடுகின்றது. வலிமை குறைந்த எருதுகளை உழவுத் தொழில் பயன்படுத்தியதில்லை என்றும், அவற்றின் வலிமை குன்றிவிட்டால் அதனைத் தோட்டத்திலேயே விட்டு விடுவதாகவும் குறிப்பிடுகின்றனர்.

*நல் எருது நடை வளம் வைத்தென உழவர்*

*புல்லுடைக் காவில் தொழில் விட்டாங்கு*[155]

**ஆற்று நீர்ப்பாசனம்**

மருதநில மக்கள் பெருக்கெடுத்து வருகின்ற ஆற்று நீரைத் தேக்கி குளம் ஏரிகளில் நிரப்பிப் பாசன பணிகளுக்காக நீரைத் திறந்துவிட மடை, மதகு போன்ற தொழில்நுட்பங்களுடன் கூடிய ஏரி, குளங்களை அமைத்தனர். ஆற்றுநீர்ப் பாசனம் மேற்கொண்டதைக் குறிப்பிடுகையில், வைகை ஆற்றில் நீரைக் கண்டதும் மருதநில மக்கள் முரசு கொட்டி மகிழ்ந்த நிகழ்வை,

*உழவர் களி தூங்க முழவு பணை முரல*[156]

சுட்டுகின்றது.

*மருதம் வேளாண் உற்பத்தியை ஆதாரமாகக் கொண்டது. இது உபரி உற்பத்தியைத் தோற்றுவிப்பது என்பதால் அது மிகு பொருள் சேமிப்புக்கான அடிப்படை ஆதாரமாக இருந்துள்ளது. எனவே கோடைக்காலம் நீர் வளமிக்க ஆற்றோரப் பகுதியான மருதநிலத்தில் பெரிய வறட்சியை பெரிய மாற்றத்தை ஏற்படுத்தவில்லை*[157] என்கின்ற மாதவையா கூற்று இங்குப் பொருத்தம் உடையதாக அமைகின்றது. எக்காலத்திலும் நீர் வளம் நிரம்பி இருந்ததாகப் பின்வரும் பாடல் குறிப்பிடுகிறது.

*இரும் பணை திரங்கப் பெரும் பெயல் ஒளிப்ப*
*குன்று வறம் கூரச் சுடர் சினம் திகழ*
*அருவி அற்ற பெரு வறற் காலையும்*
*அருஞ் செலற் பேர் ஆற்றுஇருங் கரை உடைத்து*
*கடி ஏர் பூட்டுநர் கடுக்கை மலைய*[158]

எனவே வறண்ட காலத்திலும் நீர்த்தேவையைப் பெற்றுக்கொள்ள மருத நிலத்தவர் மேற்கொண்ட வேளாண்மையில் நீர் மேலாண்மை சிறப்புக்குரியதாகும். அதனால்தான் மருதநிலமானது கோடைக்காலம் ஆயினும் வறட்சியாகக் காட்சி அளிப்பது இல்லை என்பது தெரிய வருகின்றது.

**பொய்கை பாசனம்**

பொய்கைக்கு அருகே விளைநிலங்கள் இருந்ததாக,

> ***ஆம்பல் அமன்ற தீம் பெரும் பழனத்துப்***
> ***பொய்கை ஊர்க்குப் போவோய் ஆகி***[159]

இவ்வாறே நீர்நிலைகளுக்கு அருகிலேயே விளைந்த விளைநிலங்களை அமைத்ததற்கான காரணம் மிகுதியான உற்பத்தியைப் பெருக்குவதே. பொய்கையில் இருந்து நீரைத் திறந்துவிட புதவு போன்ற நீர் தொழில்நுட்ப அமைப்புகள் இருந்துள்ளன. இதன் வழியாக நீரைப் பாசனத்திற்கு திறந்துவிட்டு வேளாண் உற்பத்தியில் தன்னிறைவு கண்டனர் என்று அறிய முடிகின்றது.

வாய்க்கால் முறை நீர்ப்பாசனம் குறித்து கி.ரா. சங்கரன் ***வாய்க்கால் முறை நீர் பாசனம் முறை நீர் பாசனம் ஓர் எளிதான வலைப்பின்னல் அமைப்பு போன்று தோன்றினாலும், சரிவான நிலப்பரப்பின் மேல் ஓடும் நீரின் வேகத்தினை மெல்ல மெல்ல குறைத்துக் கடைசியில் விளைநிலங்களுக்கு ஏற்பப் பாய்ச்சுதல் எளிமையான நுட்பம் அன்று***[160] என்று குறிப்பிடுகின்றார்.

அத்தகைய சிக்கலான வாய்க்கால் பாசன முறையை விருப்பத்துடன் நுட்பத்துடன் எளிமையாகக் கையாண்டவர்கள் நம் சங்கத் தமிழர்கள்.

**நெய்தல் நில வேளாண்மை**

நெய்தல் நிலப்பகுதி கடலும் கடல் சார்ந்த இடமாகக் காட்டப்பட்டுள்ளது. இந்நிலமக்கள் விளைநிலமாகக் கடலையே நம்பி வாழ்ந்து வந்தனர். இவர்களின் வாணிகம் என்பது கடல் மற்றும் கழிமுகப் பகுதிகளில் மீனைப் பிடித்தும் உப்பளங்களில் உப்பினை விளைவித்தும் தங்கள் வாழ்வினை நடத்தி வந்தனர். என்பதனைப் புறநானுற்று பாடல்,

*கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்*[161]

மேலும் ஓரிரு இடங்களில் மழை நீரைப்பெற்று தென்னை மரங்களை வளர்க்கும் வேளாண்மைத் தொழிலைப் புரிந்துள்ளனர். அதுமட்டுமின்றி இவர்கள் வாசனை கமழ்கின்ற மலர்த் தோட்டங்களைத் தோப்புகள் தோறும் தனித்தனியாக தங்கள் இல்லங்களில் சூழப்பெற்றிருக்கும் என்றும் இவர்களை நாடிச் சென்றால் பலாப்பழம், இளநீர், வாழைப்பழம் போன்ற பொருட்களைக் கொடுத்து விருந்தளித்து, பாணனை ஆற்றுப்படுத்தியதாகப் பின்வரும் பாடல் சுட்டுகின்றது.

*தண்டலை யுழவர் தனிமனைச் சேப்பின்*
*தாழ்க்கோட் பலவின் சூழ்களைப் பெரும்பழம்*
*வீழில் றாழைக் குழவித் தீநீர்க்*
*கவைமுலை யிரும்படிக் கவுண்மருப் பேய்க்கும்*
*குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழம்*[162]

என்ற பாடலடியின் வழியே நெய்தல் நிலமக்களின் வேளாண் தொழிலை அறியமுடிகின்றது.

**பாலை நில வேளாண்மை**

இந்த நான்கு வகை நிலங்களுக்கும் அப்பாற்பட்ட ஐந்தாம் வகை நிலமாகப் பாலை நிலம் கருதப்படுகிறது. மண் வளமும் நீர் வளமும் குறைந்த வன்புலம் என்ற ஒரு வகை நிலம் பாலையாகக் காட்டப்பட்டுள்ளது. முல்லையும் குறிஞ்சியும் மழைவளம் இல்லாமல் வறட்சிக்கான நிலையில் இவ்வகையில் சேர்க்கப்படுகிறது. மண் வளமும் நீர் வளமும் நிறைந்த இடத்தை மென்புலம் என்று வகைப்படுத்தப்படுகிறது.

*வான் நோக்கும் புன்புலம்*[163]

புறநானூற்றில் சுட்டப்படுகிறது.

குறிஞ்சியும் முல்லையும் இப்பிரிவில் அடங்கும். மேலும் மென்புலம் கூறும்பொழுது தினை, வரகு முதலாய புன்செய் பயிர் விளையும் நிலங்களையும் வானுக்கும் வறண்ட நிலங்களையும் புன்புலம் என்கின்றனர்.

**நீர்ப் பராமரிப்பு முறைகள்**

சங்ககாலத் தமிழர்கள் நீர்நிலைகளை அமைக்க உகந்த தொழில்நுட்பக் கட்டுமான முறைகளை மேற்கொண்டு நீரை முறையாகப் பாதுகாத்து, பராமரித்து உபயோகப்படுத்தி, தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொள்வதிலும் திறன் மிக்கவர்களாக விளங்கியுள்ளனர். குறிப்பாகக் குடிநீரைத் தேர்ந்தெடுப்பதில் தனிக்

கவனம் செலுத்தி வந்துள்ளனர். உவர் நீர் மிகுதியாகக் காணப்படினும் நன்னீரை மட்டுமே பருகி வந்துள்ளனர். இதனை சங்கப்பாடல் தெளிவுப் படுத்துகின்றது.

*தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்*
*உண்ணார் ஆகுப நீர் வேட்டோரே;*
*ஆவும் மாவும் சென்று உணக்கலங்கிச்*
*சேறொடு பட்ட சிறுமைத்து ஆயினும்*
*உண்ணீர் மருங்கின் அதர்பல ஆகும்*[164]

மிக நீண்ட பரப்புடைய கடல்நீரானது இருப்பினும் நீர் வேட்கையால் அக்காலத்தில் யாரும் கடல்நீரைப் பருகியதில்லை. மற்ற விலங்குகள் கால்நடைகள் உண்டு கலங்கியிருக்கக் கூடிய இடத்திற்கே சென்று சங்க கால மக்கள் நீர் அருந்தி உள்ளனர்.

ஏனெனில் உவர்நீரானது தாகத்தைத் தணிக்கிறது. ஆகையால்தான் நன்னீர் சேற்று நீருடன் கலந்து காணப்பட்டாலும் அந்நீரை அருந்தியதாக அறிய முடிகின்றது.

மேலும் இவ்வாறான கலங்கிய நீரைக் குடிப்பதனால் பல்வேறு நோய்களுக்கு உள்ளாகக் கூடும். நீரினால் நோய்த்தொற்றுகள் ஏற்பட்டு உயிர் இழப்பை சந்திக்கக்கூடும் என்பதை நன்கு அறிந்திருந்தனர். இத்தகைய தூய்மையற்ற நீரை அருந்தியதால் தங்களது வாழ்க்கை **நிறைவடைய வாழ்க்கை** இருந்ததாக சங்க இலக்கியப் பாடலொன்று குறிப்பிடுகின்றது.

*களிறு நீறாடிய விடுநில மருங்கின்*
*வம்பப் பெரும்பெயல் வரைந்து சொரிந்து*
*இறந்தெனக்*

*குழிகொள் சின்னீர் குராஅல் உண்டலின்*

*சேறு கிளைத்திட்ட கலுழ்கண் ஊறல்*

*முறையின் உண்ணும் நிறையா வாழ்க்கை*[165]

மேற்கூறிய பாடலடியில் யானைக் கூட்டங்கள் சுற்றித் திரிந்து கலங்கிய நிலையில் நிலப்பகுதியில் ஏற்பட்ட குழியின் காரணமாக அப்பகுதியில் பெய்த மழையால் சிறிதளவு நீர் காணப்பட்டது. அத்தகைய நீரினை ஆநிரைகளானது உண்டு விட்டு சென்றது. நீர் இல்லா நிலையில் சேற்றைத் தோண்டி குழியாக உள்ள கலங்கிய நீரை வேட்டுவர்கள் உண்டனர் என்று குறிப்பிடுதல் வழி வேட்டுவர்கள் வாழ்க்கை ***நிறையா வாழ்க்கை*** என்னும் குறிப்பில் ஆடுகளும் மாடுகளும் உண்ட அதே நீரை அந்நில மக்களும் அருந்தியுள்ளனர். இத்தகைய கலங்கிய நீரை உண்டதனால் உடல்நலக் குறைபாடு ஏற்பட்டுப் பல நோய்களுக்கு ஆளாகி இருக்கக்கூடும். ஆகையால்தான் வேட்டுவர் வாழ்வு முழுமையடையா வாழ்வு என்ற பொருளில் **நிறையா வாழ்க்கை** என்று இப்பாடல் சுட்டிக்காட்டுகின்றது.

கலங்களற்ற நீரை உண்டு வாழ்ந்த மக்கள் ஒருபுறம் இருக்க, மறுபுறம் தூய்மையான நீரை உண்டு மிகுந்த விழிப்புணர்வோடு வாழ்ந்த மக்களின் நிலைகளையும் சங்கப்பாடல் வழி அறியமுடிகின்றது.

*நல் மரன் நளிய நறுந் தண் சாரல்,*

*கல் மிசை அருவி தண்ணெனப் பருகி* [166]

மலைப்பகுதி நின்றுவிடும் அருவி நீரைமக்கள் பருகி, தங்கள் தாகத்தைத் தணித்துக் கொண்டதாக இப்பாடல் செய்திச் சுட்டுகின்றது. சங்ககால மக்கள்

இக்காலத்தில் உள்ளது போல ஓடுகின்ற நீரில் குளிப்பதும், குடிப்பது உடல் நலத்திற்கு நன்மையைத் தரும் என்பதை உணர்ந்து இருந்ததன் காரணமாக, இத்தகைய அருவி நீரினைப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர். மேலும் ஓடுகின்ற நீரில் கழிவுகள் வேதிப்பொருட்கள் கலந்து இருப்பதில்லை. ஏனெனில் அக்கால கட்டத்தில் ஓடும்நீர் தூய்மையானதாகவே இருந்திருக்கின்றது. தேங்கி நிற்கும் நீரில்தான் உடலுக்குத் தீங்கிழைக்கக்கூடிய வைரஸ்களும், பாக்டீரியாக்களும் கொசுக்களும் நிறைந்து காணப்படும். ஓடுகின்ற அருவிநீரில் இவ்வாறான கேடுகள் விளைவதில்லை.

அதுமட்டுமின்றி குளிர்காலங்களில் குளிர்ந்த நீரை அருந்த விருப்பம் கொள்ளாது சூடான நீரைப் பருகி உள்ளனர்.

*அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்*
*சேம செப்பில் பெறீஇயரோ*[167]

குளிர்காலத்தில் சூடான நீர் குடித்து உள்ளனர். சூடாக்கிய நீரை அதன் வெப்பம் குறையாமல் இருப்பதற்குச் சேமச்செப்பு என்ற களத்தை உபயோகப் படுத்தியதாக அறியமுடிகின்றது. தற்காலத்தில் பிளாஸ்க் பயன்படுத்துவது போன்று அக்காலத்திலும் நீரைத் தூய்மையானதாகவும் ஆரோக்கியம் சார்ந்ததாகவும் பயன்படுத்திக் கொள்வதற்கு நீரைப் பராமரிப்பதில் மிகுந்த கவனம் செலுத்தி உள்ளனர் என்ற செய்தியினை உணரமுடிகின்றது. பனிக்காலத்தில் நீரை வெப்பப்படுத்தி அருந்தியது போல கோடைக் காலத்திலும் நீரைத் தூய்மைப்படுத்தி பருகி உள்ளனர் என்பதை,

*பூவல் படுவில் கூவல் தோண்டிய*

*செங் கண் சில் நீர் பெய்த சீறில்*

*முன்றில் இருந்த முது வாய்ச் சாடி*

*யாம் கஃடு உண்டென, வறிது மாசு இன்று*[168]

கூவல் என்ற நீர்நிலையில் தோண்டிப் பெற்ற சிவந்த தூய்மையற்ற நீரினை இல்லத்தின் முற்றத்தில் சாடியில் ஊற்றி வைத்திருப்பர். நீரினைத் தெளிய வைப்பதற்காகக் கடுக்காயை இட்டு சிறிது நேரம் கழித்து மாசு நீங்கியவுடன் பருகியதாக மேற்சுட்டிய பாடல் குறிப்பிடுகின்றது.

எனவே தூய்மையற்ற நீரைப் பருகுவதற்கு முன் கடுக்காயைப் பயன்படுத்தி பருகியமையும் வயிறு தொடர்பான பல நோய்களை உண்டாக்குவதில் நீருக்கு முக்கிய பங்கு உண்டு. அதனால் கடுக்காயின் மருத்துவக் குணத்தை உணர்ந்து, நீரினால் தோன்றக்கூடிய நோய்களைக் கட்டுப்படுத்துவதற்கு கடுக்காயின் மருத்துவக் குணத்தை பயன்படுத்தியமை அறியமுடிகின்றது. மேலும் கலங்கிய நீர் கிடைக்கப் பெற்றால் அந்நீரை சுத்தப்படுத்துவதற்காகத் **தேற்றான் மரத்தின் கொட்டையைக் கொண்டு** நீரைத் தூய்மை உள்ளதாக மாற்றிப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

*கலம்சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்*

*கலங்கிய நீர்போல் தெளிந்து, நலம் பெற்றாள்,*[169]

என்ற இப்பாடலில் தலைவன் தலைவியின் வாழ்க்கையைக் கூற வந்த புலவர் தேற்றா மரக்கொட்டையைக் கலங்கிய நீருடன் சேர்க்கும்போது நீரானது

தெளிவாகின்றது. அதுபோல தலைவி தலைவனை சேர்ந்து தெளிவடைந்தாள் என்று குறிப்பிடுவதன்வழி நீரைத் தெளியவைக்கும் மருத்துவ குணம் தேற்றான் கொட்டைக்கு உண்டு என்பதை அறியமுடிகின்றது.

**நீர் சேமிப்பும் அதன் பயன்பாடும்**

உலக மக்களுக்கு நீர் சேமிப்பு, அதன் பயன்பாடு பராமரிப்பு போன்றவற்றைப் பற்றிய சிந்தனையை உணரவேண்டும் என்கின்ற நிலையில் ஐக்கிய நாட்டுச் சபை உலக தண்ணீர் தினம் கடைபிடிப்பதற்கான தீர்மானத்தை நிறைவேற்றியது.

அதன்படி *உலக தண்ணீர் தினத்திற்கானத் தீர்மானம் 1992-ஆம் ஆண்டில் ஆண்டு டிசம்பர் 22-ஆம் தேதி நிறைவேற்றப்பட்டது. அந்தத் தீர்மானத்தில் ஒவ்வொரு ஆண்டும் மார்ச் 22ஆம் தேதியை உலக தண்ணீர் தினமாகக் கடைபிடிக்க அறிவுறுத்தப்பட்டது. 1993ஆம் ஆண்டிலிருந்து உலகம் முழுவதும் இத்தினம் கடைபிடிக்கப்படுகிறது. அன்றைய தினம் மக்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்தும் வகையில் கருத்தரங்குகள் மாநாடுகள் விழிப்புணர்வு பேரணிகள் போன்றவை உலகம் முழுவதும் நடத்தப்பட்டு வருகின்றது*[170].

*மத்திய அரசு இந்தியாவில் 11.5 கோடி வீடுகள் குழாய்நீர் இணைப்புகளைக் கொண்டுள்ளதாகவும், 1.53 லட்சம் கிராமங்கள் குடிநீர் வினியோக வசதிகளைக் கொண்டுள்ளதாகவும், உலக தண்ணீர் தினத்தையொட்டி மத்திய அரசு வெளியிட்ட தரவுகளில் தெரிவிக்கப்பட்டுள்ளது. பள்ளிகள், அங்கன்வாடி மையங்கள் உள்ளிட்டவற்றுக்கான குழாய் நீர் இணைப்புக்காக நடப்பு நிதியாண்டில் ரூபாய் 70*

*ஆயிரம் கோடி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. இது 2018 -19 நிதியாண்டில் ஒதுக்கீடுச் செய்யப்பட்ட நிதியைவிட 12 மடங்கு அதிகமாகும்[171].*

மக்கள் தொகை மிகுந்த நாடான இந்தியாவில் நீருக்கான பலவகைத் தேவைகள் இருக்கும் நிலையில் நீர்பராமரிப்பு மிகவும் சிக்கலான காரியமாகும். தேவையற்ற பயன்பாடு, வீணாக்கல், மாசுபடுதல் மற்றும் இதர நடவடிக்கைகளால் நதிகளிலும் நீர் நிலைகளிலும் நீரோட்டமும் இயக்கமும் குறைந்து நிலத்தடி நீர்மட்டம் குறைந்து, நீரை பகிர்ந்தளிக்கும் இடங்களில் மக்களின் கட்டுக்கடங்காத பெரிய கூட்டமும் காணப்படுகிறது.

**நீர் மேலாண்மை அணுகுமுறைத் திட்டங்கள்**

நீர் பராமரிப்பை மேற்கொள்வதற்கு இந்திய அரசு ஒரு முழுமையான அணுகுமுறையை ஏற்றுக்கொண்டுள்ளது. நாட்டின் நீர்வளங்களை மேம்படுத்தவும் முறைப்படுத்தவும் இந்திய அரசு **ஜல்சக்தி அமைச்சகம்** என்ற ஒரு புதிய அமைச்சகத்தை உருவாக்கி நாட்டின் நீர்வளங்களை மேம்படுத்தவும் பொறுப்பு அளிக்கப்பட்டுள்ளது.

- பல திட்டங்களை உருவாக்குதல்,
- நிலத்தடி நீர் வளங்களை மேம்படுத்துதல்,
- நதிகள் மேம்பாடு மற்றும் புத்துயிர் அளித்தல்
- நீர்ப்பாசனம் வெள்ளத்தடுப்பு மாநிலங்களுக்கு இடையேயான நதிநீர்ப் பிரச்சினைகளைத் தீர்த்து நாட்டில் உள்ள நதிகளை இணைத்தல்.

உள்ளிட்ட பிரச்சினைகளை இந்த அமைச்சகம் கவனிக்கும். இதற்காக ஒரு முழுமையான அணுகுமுறையை உருவாக்க இந்த அமைச்சகம் பணிக்கப்பெற்றுள்ளது. இதனடிப்படையில் இந்த அமைச்சகம் **ஜல் சக்தி அபியான்** என்ற இயக்கத்தைத் துவக்கி, நீர் பராமரிப்பு மற்றும் நீர்ப்பாதுகாப்புத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. நீர்ப்பற்றாக்குறை உள்ள மாவட்டங்களில் இந்த இயக்கம் தீவிரப்படுத்தப்பட்டு அதில் பொதுமக்கள் இடம் பெறுவார்கள்.

ஜல் சக்தி அமைச்சகம் அல்லாமல் பிற மத்திய அமைச்சகங்கள் தேசிய மற்றும் மாநில அளவிலான அரசு மற்றும் தன்னார்வ துறைகள், அறிவியல் அமைப்புகள் ஆகியவை சுற்றுச்சூழல் வனப் பாதுகாப்பு வனவிலங்குகள், பாதுகாப்பு விவசாயம், நீர்வளம், நீரியல் வானிலை பருவநிலை மாற்றம், அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் நதிகள் மேம்பாடு நீர்ப்பாசனம், ஊரக வளர்ச்சி மற்றும் நகர்ப்புற மேம்பாடு ஆகிய துறைகளில் பல ஆண்டுகளாகச் செயல்பட்டு நீர்ப் பராமரிப்புக்கான பல வகையான திட்டங்களை மேற்கொண்டு செயல்படுத்தி வருகின்றன.

சர்வதேச நீர்ப்பாசனம், பாசன மற்றும் வடிகால் ஆணையம் கடந்த ஆண்டு டிசம்பர் மாதம் இந்த ஆறு நீர்த்தேக்கங்களுக்கும் வந்து, அங்குள்ள கட்டமைப்பு வசதிகளை விரிவாக ஆய்வு செய்தது. இந்தியாவிலிருந்து நான்கு நீர்த் தேக்கங்களுக்கு உலகப் பாரம்பரிய நீர்ப்பாசனக் கட்டமைப்பு விருது வழங்குவதாக அறிவிக்கப்பட்டுள்ளது .

*இதில் தமிழ்நாட்டிலுள்ள கல்லணை, வீராணம் ஏரி, காளிங்கராயன் அணைக்கட்டு ஆகிய மூன்று கட்டமைப்புகளும் தேர்வு செய்யப்பட்டுள்ளன. தமிழ்நாட்டுக்குக் கிடைத்த மிகப்பெரிய பெருமையாகும். ஒவ்வொரு தமிழனும் தமது பாரம்பரிய கட்டமைப்பை நினைத்துப் பெருமை கொள்ளவேண்டும். மொத்தமுள்ள நான்கு விருதுகளில் மூன்று விருதுகள் தமிழ்நாட்டுக்கும் ஒரு விருது உத்தரப் பிரதேசத்தில் உள்ள நீர்த்தேக்கத்திற்கு வழங்கப்படுவதாக வெளியாகி உள்ளது[172].*

நீரைப் பராமரிக்க அதற்கேற்ற சுற்றுச்சூழலை உருவாக்கி, அதில் பங்குபெறும் அனைவரையும் ஈடுபடுத்தி ஒருங்கிணைக்க வேண்டும். தேவையான சட்டம் மற்றும் ஒழுங்குமுறை அமைப்புகள் வேண்டும் தகுந்த நிதி வசதிகள் வேண்டும். இதற்கு ஒட்டுமொத்த சமுதாயத்தின் ஒப்புதல் வேண்டும். ஒருபுறம் இயற்கை நீர் மற்றும் மக்களிடையே ஒருங்கிணைந்த தொடர்பை ஏற்படுத்துவதில் புதிய சிக்கல்கள் உள்ளன. மற்றொருபுறம் நிலைத்து நிற்கும் நீராதாரங்களை உருவாக்க அணுகுமுறைகளை உருவாக்கி, அதற்கான வழிமுறைகளையும் திட்டங்களையும் நிலைத்து நிற்கும், நீர் மேலாண்மைக்கான அனைத்து அறிவியல் பிரிவுகள் மற்றும் அரசு அமைப்புகளுக்கு இடையே தொடர்பு ஏற்படுத்த புதிய வாய்ப்புகள் ஏற்படும்.

**நீர்வளங்கள் பராமரிப்பு மற்றும் பாதுகாப்புத் திட்டங்கள்**

நீர்நிலைகளைப் பராமரித்து உயிர்ப்பிக்கவும் தொலைந்துபோன நீர்நிலைகளை மீட்டெடுக்கவும் தூர்ந்துபோன நீர்வளங்களைப் புதுப்பிக்கவும் ஒருங்கிணைந்த

முயற்சி தேவை. இந்த நீர்நிலைகள் நிலைத்து நிற்கவும் அவற்றின் நீரைக் கவனமாகப் பயன்படுத்தவும் உயர் அளவு பராமரிப்புத் தேவை.

அதன்படி தமிழகத்தில் ரூபாய் 200 கோடியில் 200 ஏரிகள் புதுப்பிக்கப்படும் என்று நீர்வளத்துறை அமைச்சர் துரைமுருகன் தெரிவித்தார். சட்டப் பேரவையில் நீர்வளத்துறை மானிய கோரிக்கைமீது நடந்த விவாதங்களுக்குப் பதில் அளித்து அவர் வெளியிட்ட அறிவிப்புகள்.

*மத்திய மற்றும் மாநில அரசுகளின் பங்களிப்புடன் பிரதம மந்திரி கிரிஷி சின்சாயி யோஜனா திட்டத்தின்கீழ் எட்டாம் கட்டமாகக் கள்ளக்குறிச்சி, ராணிப்பேட்டை, திருவள்ளூர், திருவண்ணாமலை, ராமநாதபுரம், சிவகங்கை, விருதுநகர், புதுக்கோட்டை ஆகிய 8 மாவட்டங்களில் 100 ஏரிகள் 85 கோடி, 9 ஆம் கட்டமாக ஐந்து மாவட்டங்களில் 100 ஏரிகள் ரூபாய் 114.72 கோடிகளும் புதுப்பிக்கப்பட்டுப் புனரமைக்கப்படும்.*

*டென்மார்க் நாட்டின் நவீன தொழில் நுட்பத்தை பயன்படுத்தி நிலத்தடிநீர் இருப்பு கண்டறியப்படும் சோதனை அடிப்படையில் இந்தத் திட்டமானது முன்னோடித் திட்டமாக மேற்கொள்ளப்படும். நீரின் தரத்தை நீர் நிலைகளிலேயே கண்காணிக்க ஏதுவாக 400 நீர் தன்மை ஆய்வு உபகரணத் தொகுப்பு கொள்முதல் செய்யப்படும்[173].*

இவ்வாறு தமிழக அரசும் ஏரிமீது அக்கறை செலுத்தி மக்களின் அடிப்படை வாழ்வியலுக்குத் துணைபுரியும். நீர்நிலைகளின் அழிவிலிருந்து காப்பதற்கான

புனரமைப்புப் பணிகளையும் நீர்வள அமைச்சகத்தின் வழியாகச் செயல்படுத்தி வருவதனைக் காணமுடிகின்றது.

நாடு மிகவேகமாக வளர்ந்துவரும் நிலையில் சுத்தமான நீரின் குறைபாட்டினால் மேம்பாட்டு பணிகள் தடைபடுகின்றன. தனிமனித பயன்பாட்டிற்கான நீரின் அளவு குறைந்துகொண்டே வருவதால் நாட்டில் நீர்ப்பற்றாக்குறை அதிகரிக்கும் வாய்ப்புள்ளது. பெருநகரங்களிலும் கிராமப் பகுதிகளிலுங்கூட குடிநீருக்கான தட்டுப்பாடு அதிகமாக உள்ளது. நாட்டின் பல இடங்களில் நீர் சார்ந்த வியாதிகளும் மிகுந்து அதனால் உடல் நலக்கேடுகள் அதிகரிக்கின்றன. அடுத்த சில ஆண்டுகளில் நீரின் தேவை பல மடங்கு உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த நிலையில் நீரின் தேவை மிகவும் அதிகரித்து சுற்றுச்சூழல் பாதிப்புகள் உயர்ந்து அதனால் பருவநிலை மாற்றங்கள் பாதிப்பு ஏற்படும் நிலையில் அறிவியல் பூர்வமான நடவடிக்கைகள், புதிய கண்டுபிடிப்புகள், தொழில்நுட்பம் ஆகியவை இன்றைய காலகட்டத்தில் முக்கியமான தேவையாகும். குறைந்து வரும் சுத்தமான தண்ணீர் எல்லோருக்கும் கிடைக்க நாம் நீர் மேலாண்மையை மேற்கொள்ள வேண்டும்

இந்தியா சுதந்திரம் அடைந்து 75 ஆண்டுகள் ஆகியதைக் குறிக்கும் வகையில் அம்ரித் சரோவர் என்ற முன்முயற்சித் திட்டத்தைப் பிரதமர் நரேந்திர மோடி தொடங்கி வைத்த நிகழ்வினைத் தினத்தந்தி நாளேடு தெரிவிக்கின்றது,

*நாட்டின் ஒவ்வொரு மாவட்டத்திலும் 25 நீர்நிலைகளை உருவாக்கி அல்லது மேம்படுத்தி, புத்துயிர் அளிப்பதை நோக்கமாகக்கொண்ட அம்ரித் சரோவர் என்ற*

*முன்முயற்சியை ஏப்ரல் மாதம் 24 ஆம் தேதி காஷ்மீர் ஜம்மு காஷ்மீர் சென்ற பிரதமர் பிரதமர் நரேந்திர மோடி தேசிய பஞ்சாயத்து ராஜ் தினக் கொண்டாட்டத்தில் பங்கேற்றபோது இந்த முன் முயற்சியைத் தொடங்கி வைத்தார். தமிழ்நாட்டிலுள்ள 37 ஊரக மாவட்டங்களிலும், தலா 75 நீர்நிலைகள் என்ற வகையில் 2075 நீர் நிலைகள் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன[174].*

மேலும் தண்ணீர் ஆதாரங்களைப் பாதுகாக்க உதவும் தொழில் நுட்பங்களைக் கண்டுபிடியுங்கள் என்று இந்திய விஞ்ஞானிகளுக்கு ஜனாதிபதி. திரௌபதி முர்மு வேண்டுகோள் விடுத்துள்ளதனை, *தண்ணீர் பிரச்சனை என்பது இந்தியாவுக்கு மட்டுமானது அல்ல. ஒட்டுமொத்த உலகத்துக்குமானது. நமது நாட்டில் 80 சதவீதம் தண்ணீர் வளம் விவசாயத்துக்குதான் செல்கிறது. எனவே தண்ணீரைச் சரியாகப் பயன்படுத்துவதும், நீர்ப்பாசனத்தில் தண்ணீர் மேலாண்மையும், நமது தண்ணீர் பாதுகாப்பில் மிக முக்கியமானவை ஆகும். பெருகிவரும் மக்கள் தொகைக்குத் தூய்மையான தண்ணீர் தருவது, இனி வரும் காலங்களில் மிகப்பெரிய சவாலாக இருக்கும். பொதுமக்கள், விவசாயிகள், தொழிலதிபர்கள், குழந்தைகள் என அனைத்துத் தரப்பினரும் தங்கள் அறநெறிகளில் தண்ணீர்ப் பாதுகாப்பை ஒரு அங்கமாக்கிக் கொள்ளவேண்டும். விஞ்ஞானிகள், நகரத் திட்டம் இடுபவர்கள், கண்டுபிடிப்பாளர்கள் தண்ணீர் ஆதாரங்களைப் பாதுகாப்பதற்கு உதவும் தொழில்நுட்பங்களைக் கண்டுபிடிக்கவேண்டும். தண்ணீர்ப் பாதுகாப்பில் தொழில் நுட்பம் முக்கியப் பங்காற்ற முடியும்*[175] என்ற செய்தியினைத் தினத்தந்தி நாளேடு தெரிவிக்கின்றது.

நிலத்தடி நீர்வளம் காப்பதில் சிறந்த மதிநுட்பம் வாய்ந்தவர்களாகத் சங்கத்தமிழர்கள் திகழ்ந்துள்ளனர். பின்னாளில் நிலத்தடி நீர்வளம் பாதுகாத்தலை முறையாகச் செயல்படுத்தாதன் காரணமாக, நிலத்தடி நீர்வளம் குறைந்து நீர்ப் பற்றாக்குறை மிகுதியாகக் காணப்படுகின்றது.

மழைநீர் பூமியில் தேங்குவதற்கான நீர்நிலைகள் ஏதுமின்றி இன்று அவ்விடங்களில் அடுக்குமாடிக் குடியிருப்புகளும், அரசுப் பணிமனைகளும் காணப்படுகின்ற அவலநிலைகளையும் காணமுடிகின்றது.

நிலத்தடியில் நீர் வளம் குறைவதற்கு மற்றொரு காரணமாகக் குறிப்பிட வேண்டுமெனில் மண் தரைகள், பைஞ்சுதை (சிமெண்ட்) தரைகளாக மாறி வருகின்றன. மேலும் மக்கள்தொகை பெருக்கத்தின் காரணமாக நீர் இறைப்பு என்பது நீர் ஊறும் அளவைக் காட்டிலும் மிகுதியாக அதிகரிப்பதன் காரணமாகவும் குறைந்த அளவில் காணப்படும் நீர் ஆதாரங்களும் சுரண்டடப்பட்டு வருவதனையும் நீர்ப் பற்றாக்குறையின் காரணமாகக் குறிப்பிடலாம். இதன் காரணமாகவே பெரும்பாலான இடங்களில் கடல் நீர் உட்புகுந்து உப்பு நீராக மாறுகின்ற நிலையையும் காணமுடிகின்றது.

பண்டைய தமிழர் நீர்நிலைகளை மாசடையாது தூய்மையாகப் பாதுகாத்ததன் விளைவாக நோயின்றி வாழ்வை வாழ்ந்தனர். ஆனால் இன்று தொழிற்சாலைகளில் இருந்து வெளியேறும் கழிவுநீர் முறையாக சுத்திகரிக்கப்படாமல் நீர்நிலைகளில் கலப்பதால் பல உடல்நலக் குறைபாடுகள் ஏற்படுவதோடு தோல்நோய் பிரச்சனைகளும் ஏற்பட்டு நச்சுநீராகக் காட்சியளிப்பதனையும் காணமுடிகின்றது.

நாம் ஒருமுறை பயன்படுத்தித் தூக்கி வீசப்படுகின்ற நெகிழிகளாலும் நீர்நிலைகளில் நன்னீரின் தன்மை குன்றச்செய்து நீர்வளத்தன்மையும் இழந்து வருவதனை காணமுடிகின்றது.

இந்நிலை மாறவேண்டுமெனில் நிலத்தடி நீர்வளத்தைப் பெருக்குதல், பருவமழை காலங்களுக்கு முன்பாக மழைநீர் சேகரிப்புத் தொட்டிகள் அமைத்தல் குளம், ஏரி போன்ற நீர் ஆதார அமைப்புகளைத் தூர்வாரி தயார் நிலையில் வைத்திருத்தல் வேண்டும்.

இன்று நீர் என்பது வியாபார நோக்கத்தோடு மிகுந்த லாபம் தரும் பெரும் பொருளாகச் சந்தையில் இருந்து வருவதனைப் பார்க்க முடிகின்றது. அடுத்த தலை முறையினருக்கும், குடிப்பதற்கும் அன்றாட வாழ்வியலுக்கும் நீர்நிலைகளைவிட்டுச் செல்லவேண்டும் என்கின்ற சமூகப் பொறுப்புணர்வு மக்களிடம் இருத்தல் வேண்டும்.

காணாமல் போன அல்லது ஆக்கிரமிக்கப்பட்ட நீர்நிலைகளை ஏரி, குளம், ஆறு போன்றவைகளைக் கவனத்தில்கொண்டு தூர்வாரி அவற்றின் வளத்தைக் காப்பதில் விழிப்புணர்வு கொள்ளவேண்டும்.

இன்றைய சூழலில் நீர்வளம் குறைந்து வருவதனைக் குறித்த அக்கறையினை மக்களும், அரசும் விழிப்புணர்வோடு நோக்குவதனைக் காணமுடிகின்றது. இன்று பல இடங்களில் அரசின் குடிமராமத்துப் பணித்திட்டம் மீண்டும் செயல்முறை வடிவம் பெற்றதன் விளைவாக ஏரிகள், குளங்கள், ஆறுகள் கண்மாய்கள் தூர்வாரப்பட்டு நீர் செல்வதற்கான போக்கு வழிகளும் சீரமைக்கப்பட்டு வருவதனைக் காண முடிகின்றது.

மழைநீர் சேகரிப்புத்திட்டமும் இன்றைய பெரும்பாலான இடங்களில் அமைக்கப்பட்டு வருவதனையும் உணர முடிகின்றது.

நீர்நிலைகளைப் பாதுகாத்து, நீரை வீணாக்காது, முறையாகப் பாதுகாப்பதோடு பழைய நீர்நிலைகளை மீட்டெடுத்தும், மழைநீரை நிலத்திற்கு அடியில் செல்லுமாறு செய்தும் நெகிழிகளைப் பயன்படுத்தாமலும், காடுகள் அழிப்பு, புவி வெப்பமயமாதலிலிருந்து தடுத்தல் போன்றவற்றின் மூலமாகவும் நிலத்தடி நீர் வளத்தைப் பெருகச் செய்வதன் வழியாக எதிர் வருகின்ற காலத்தில் நீர் பற்றாக்குறை என்கின்ற பிரச்சனைகளுக்குத் தீர்வு காண இயலும்.

மக்கள்தொகை மிகுந்த நாடான இந்தியாவில் நீருக்கான பலவகைத் தேவைகள் இருக்கும் நிலையில் நீர்ப்பராமரிப்பு மிகவும் சிக்கலான காரியம் என்பதனை உணர்ந்து விழிப்புணர்வுடன் செயல்பட வேண்டும்.

மேற்கூறப்பெற்ற அனைத்து நீரியல் திட்டங்களையும் நீர்நிலைகளின் அழிவிலிருந்து காப்பதற்கான புணரமைப்புப் பணிகளையும் மத்திய அரசும், தமிழக அரசும் இணைந்து நீர்வள அமைச்சகத்தின் வழியாகப் பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருவதனையும் காணமுடிகின்றது.

# தொகுப்புரை

- உலக நிலைப்பேற்றிருக்கு முதல் ஆதாரமாகவும், உலக உயிர்கள் தோன்றுவதற்கும் உயிர் வாழ்வதற்கும், நீரே இன்றியமையாதது என்பதனை அறியமுடிகின்றது.
- ஏனைய கருப்பொருள்களை நிர்ணையிக்கும் காரணியாகவும் நீரே விளங்கப்பெறுவதனை தொல்காப்பியரின் நூற்பாவின் வழி காண முடிகின்றது.
- பூமி நீரால் நிரம்பி இருந்ததனையும் அதன் பின்னரே நிலம் தோன்றியிருக்க வேண்டுமெனவும், காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும் தோன்றி பனியும் குளிர்ந்த மழையும் உருவானதாகச் சங்கப்பாடல்களின்வழி உணர முடிகின்றது.
- மனிதனின் நாகரிக வளர்ச்சியின் தொட்டிலாகக் காணப்படும் நகரங்கள் அனைத்துமே ஆற்றங்கரைச் சமவெளிகளை ஒட்டியே வந்தவையாகும் என்பதும், மனித நாகரிக வளர்ச்சிக்கும் நீர் முக்கியப் பங்காற்றி இருந்து வந்துள்ளதனையும் அறியமுடிகின்றது.
- ஐந்திணைகளில் வேளாண் தொழிலுக்குப் பயன் தந்த, பயன்படுத்தப்பட்ட நீர்நிலைகள் குறித்த பதிவுகளையும், உபரி உற்பத்தி பெருமளவிற்கு வேளாண்மையில் கண்ட சிறந்த மேலாண்மைத் தொழில்நுட்பத் திறத்தினையும் உணரமுடிகின்றது.
- நீரினை அணைகட்டித் தேக்குவதற்கு முயற்சி மேற்கொண்டுள்ளனர். பெருக்கெடுத்து வரும் ஆற்றின் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தி, அந்நீரினை

தேக்குவதற்காக அணைபோல கரும்பின் கழிகளைப் பயன்படுத்தி உள்ளனர். ஆற்றில் கரையமைத்து அந்தக் கரைகளை வலுப்படுத்தும் விதமாக கரும்பினைக் கரைகளில் நட்டுள்ளனர். மிகுதியான வெள்ளம் வரவே வைக்கோல் புரிகள் சூழ்ந்த மணலான மூட்டைகளைக்கொண்டு கோட்டைகளை அமைத்ததாகவும் அதனையும் வெள்ளம் கரைத்ததாகவும் போன்ற செய்திகளை அறியமுடிகின்றது.

- நீர்நிலைகளைச் சுற்றிலும் கடம்பம், கோங்கம், காஞ்சி, மூங்கில் போன்ற மரங்கள் நடப்பட்டு நீர்நிலைகள் பாதுகாக்கப்பட்டன என்ற செய்தியினைக் காணமுடிகின்றது.
- குளம் அமைக்க இயற்கையான முறையில் அமைந்த மலைப்பாறைகளைத் தேர்வு செய்திருந்தனர் என்பதும், கற்பாறைகளைக் கரைகளாகத் தேர்வு செய்வதனால் மனித உழைப்பும் குறைவு என்பதும் பொருளாதார சிக்கனம் உண்டு என்பதையும் உணர்ந்து சிறந்த கட்டுமானத் தொழில்நுட்ப வல்லுநர்களாகச் சங்ககாலத் தமிழர்கள் திகழ்ந்துள்ளனர் என்பதனையும் அறிய முடிகின்றது.
- அணைகளில் தேக்கி வைத்திருக்கும் நீரினைக் கொஞ்சம் கொஞ்சமாகத் திறப்பதற்கும் மூடுவதற்குமான தொழில் நுட்பங்களையும் கண்டறிந்தனர். இதன் விளைவாகவே மதகு, மடை, குமிழி, புதவு, சுருங்கை போன்ற நீர் தொழில்நுட்பக் கட்டுமான அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன என்பதும் ஆய்வின் கருத்தின் வழி தெரியவருகின்றது.

- மக்கள்தொகை மிகுந்த நாடான இந்தியாவில் நீருக்கானப் பலவகைத் தேவைகள் இருக்கும் நிலையில் நீர்ப்பராமரிப்பு மிகவும் சிக்கலானக் காரியம் என்பதனை உணர்ந்து மக்கள் விழிப்புணர்வுடன் இருத்தல் வேண்டும் என்பதனை உணர்த்துகின்றது.
- நாட்டின் நீர்வளங்களைப் பாதுகாக்கவும் பராமரிக்கவும் இந்திய அரசால் ஜல்சக்தி அமைச்சகம் என்ற ஒரு புதிய அமைச்சகத்தை உருவாக்கி அதன்வழி நாட்டின் நீர்வளங்களை மேம்படுத்தவும் முறைப்படுத்தவும் பொறுப்பு அளிக்கப்பட்டுத் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளதனையும் காணமுடிகின்றது.
- நாட்டின் நிலைத்து நிற்கும் நீராதாரங்களை உருவாக்க ஒவ்வொரு மாவட்டத்திலும் எழுபத்தி ஐந்து நீர்நிலைகளை உருவாக்கி அல்லது மேம்படுத்தி புத்துயிர் அளிப்பதை நோக்கமாகக்கொண்ட அம்ரித்சரோவர் திட்டங்களை மத்திய அரசுடன் தமிழக அரசு இணைந்து செயல்படுத்தி வருவதனையும் தற்கால நீரியல் மேலாண்மை குறித்த செய்தியாகவும் மேற்கண்ட ஆய்வியல் கருத்துக்களின் வழியே அறிய முடிகின்றது .

# அடிக்குறிப்புகள்

1. தொல்.பொருள்.அகத்.2
2. தொல். பொருள். அகத். 18
3. வான். குறள். 3
4. நி. கிரேட்டர், நீர் நிர்வாகம், ப. 2
5. ந. ஜெ. சரவணன் தமிழ்ப் பண்பாட்டில் நீர், ப. எ.10
6. பரி.திருமால் 3:91-92
7. பரி.திருமால் 2:5-12
8. கே.ஆர்.திருவேங்கடசாமி வள்ளுவத்தில் நீர்வளமும்
9. தொல். பொருள். 571
10. குறள். 16
11. மோகன கிருஷ்ணன். அறிவியல் தொழில்நுட்ப நூல் வரிசை நீர் இயல், தொகுதி -1 ப. 5
12. சுற்றுச்சூழல் கல்வி, ஏழாம் வகுப்பு, பக்கம். 3
13. ta.wikipedia.org/wiki/water distribution.
14. வி. பாலு, சுற்றுச் சூழல் கல்வி, ப. 74
15. சு.மல்லிகா, தண்ணீர் வேளாண்மை வளம், சக்தி ப. 61
16. நக்கீரன், நீர் எழுத்து, ப. 58
17. மேலது, ப.82

18. மேலது, ப.82

19. பட் ,126-128

20. நீர் நிர்வாகம், ப. 186

21. புறம் பாடல் 160 1-3:29-30

22. பரி,பா;6:1-2

23. மேலது,பா;7:1-4

24. வான் சிறப்பு- அதிகாரம் :குறள்- 8

25. வான்சிறப்புஅதிகாரம்:குறள்:11

26. முனைவர். மணி. மாறன். தமிழரின் நீர் மேலாண்மை ப.எ.12.

27. அகம்.255:1-6

28. இரா.பாஸ்கரசேதுபதி 'நிருவாக வியல் சிந்தனையாளர்கள் ப.எ.16

29. முனைவர். வி. ராதா. மேலாண்மை தத்துவங்கள் ப. 1

30. LM Prasad principles and practics management P.6

31. T.Ramasamy principles of management P.2

32. வெ.இறையன்பு இலக்கியத்தில் மேலாண்மை ப. 36

33. WWW.Vickipedia.com

34. பதிற்:24:24-28.

35. பதிற்:69(12-15)

36. பதிற்று:13:25-26

37. பட்டின:1-5

38. மதுரைக்:106-109

39. நற்:44;10-12

40. ஐங்குறு:469;2-4

41. நெடு:1-3

42. மதுரைக்:4-5

43. நற்:89 :1-3

44. நற்:153:1-4

45. பரிபாடல்6 :1 -3

46. புறம்,153:1-4

47. நற் ,316:7-9

48. தமிழரின் மரபுச் செல்வங்கள் , ப.எ.52.

49. பரிபாடல்20.1 -3

50. நீர் எழுத்து .ப.எ.86.

51. உரிச்சொல் நிகண்டு இடப்பெயர்த் தொகுதி ,நூ.எ .21

52. மெய்யப்பன் தமிழகராதி, ப.எ.539.

53. அகம்,308:10.

54. குறு,193:1-2

55. அகம்,324:6

56. அகம்,178:3.

57. அகம்,2:4

58. அகம்,2:4

59. நற்,273:-7

60. நற்,,204:3.

61. நற்:7:1

62. குறிஞ்சி ,187-190

63. தமிழ்ச்சொல் அகராதி,ப.எ.126.

64. அகம்.,241:7-8.

65. ஐங்,223:1-4.

66. குறுந்,134:5

67. பதிற்,70:24-25

68. வள்ளுவத்தில் நீர்வளமும் வாழ்வியலும் ,ப.எ .12.

69. மதுரைத் தமிழ் பேரகராதி,ப.எ.110.

70. சொல்லாராய்ச்சிக்கட்டுரைகள், ப.எ.49.

71. புறம்.332:7

72. நற்:33:4-7.

73. அகம்,79:4

74. நற் ,7 1-3.

75. புறம்,192:1-8.

76. நற்,114:8.

77. அறிவியல் தமிழியக் கோவை, ப.எ.119

78. ஐங்,361:1,

79. நற்,95:5-8

80. நிலநீர் அறிவியல், தொகுதி -2,ப.எ.568.

81. தமிழ்ச்சொல் அகராதி,ப.எ.511.

82. தமிழகத்தின் நீர் வளம்,ப.எ.121.

83. நற்,41:3-4

84. நற்,240:6-10

85. அகம்,399:6-8

86. மேலது.207:10-13.

87. மேலது.295:8-12

88. புறம்,306:1-2.

89. நிலநீர் அறிவியல்,ப.எ.568.

90. பொருநாராற்று ,238-239.

91. புறம்,229:3-4.

92. மேலது.18:1-3.

93. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப. எ. 49.

94. புறம்,243:8-9.

95. நற். 280:2-3

96. ஐங். 94:1-3.

97. அகம். 236 : 2

98. நற்.160 : 9

99. மேலது. 200 : 6 - 7

100. ஐங்குறு.70 : 3

101. அகம். 246 : 3

102. மேலது. 276 :1

103. ஐங்குறு. 44 :1

104. நற்.16 : 5

105. ஐங்குறு. 61 : 1 - 2

106. பதிற். 27 : 9

107. பட். 34 - 38

108. கழகத் தமிழகராதி, ப. எ. 5

109. நற். 379 : 7 - 8

110. புறம். 14 : 5 - 6

111. மேலது. 37 : 7

112. மேலது. 375 :1

113. தொல்காப்பியம், பொருள்: 65

114. குறுந்.149 : 3 - 4

115. பதிற்று ,30:16-19

116. முனைவர் மணி. மாறன், தமிழரின் நீர் மேலாண்மை ப. எ. 21

117. குறள்: 523

118. நீர் எழுத்து, ப. எ. 110

119. சிறுபஞ்சமூலம், பா. 66

120. நீர்எழுத்து . ப.எ.116.

121. புறம்,176:5.

122. மேலது,376:19-20,

123. அகம்,237:14,

124. மலை ,449.

125. தமிழகப் பாசன வரலாறு,ப.எ.29.

126. மேலது, ப.எ.29.

127. மணிமேகலையின் பன்னிரண்டாம் காதை(1384 - 87)

128. தமிழகப் பாசன வரலாறு,ப.எ..32.

129. பரி,6:28.

130. மேலது ப.எ.2:66

131. தமிழகப் பாசன வரலாறு,ப.எ.32.

132. மலை,474-476.

133. சீவகசிந்தாமணி (2476)

134. நீர்எழுத்து . ப.எ.167.

135. புறம், 18: 21

136. தொல்காப்பியம், பொருள் ;மரபு; 81

137. துரைமாணிக்கம் ,உருக்குலையும் உழவுத்தொழில் ப.எ.2.

138. புறம்,159:16.

139. தமிழர் வரலாறு சில கேள்விகளும் தேடல்களும் ப.72.

140. நற்.5-2

141. மலைப்படு.102-105

142. அகம்.,பா ;28:3-5

143. குறுந்,பா;371:2-3

144. மேலது ,பா ;100:1-3

145. நற்,பா;188:1

146. கண்ணையன் .ச . நவீன வேளாண் தொழில் நுட்பங்கள்தொகுதி 2,ப.6.

147. அகம்,பா; 252:11

148. புறம்,பா;159:17-19.

149. பதிற்.பா ;30:26-27

150. புறம்,பா;328:1-4

151. மதுரைக்காஞ்சி.பா;அடி :271-272

152. மலை,பா;அடி :97-100

153. பதிற்று,பா; 84;21

154. புறம்,பா ;289:1-3

155. நற்,பா ;313: 4-5

156. பரி.பா ;7:16

157. பெ.மாதையன் . சங்க இலக்கியத்தில் குடும்பம் .ப.59.

158. பதிற்று,பா;43:12-16

159. நற்,பா;200:6-7

160. கி. இரா. சங்கரன், தமிழக வரலாற்றில் நீர் உரிமை, ப. 121

161. புறம், பா ;60;7

162. பெரும். பா. அடி - 355 - 360.

163. புறம்,பா;18; 24

164. புறம். பா. 204 : 5 - 9

165. மேலது. பா. 325 : 1 - 5

166. மேலது,பா ; 150:15-16.

167. குறுந். பா. 277:4-5

168. புறம். பா. 319 :1 - 4

169. கலி. பா. 142 : 64 - 65

170. எம். ஆர். ரகுநாதன், தண்ணீர்… தண்ணீர் ப- எ. 56

171. தினமலர், மார்ச் 23 2023

172. தினத்தந்தி தலையங்கம் மே 5-2022

173. தினமணி, ஏப்ரல் 6.2020

174. தினத்தந்தி, செப்டம்பர் 21- 2022

175. தினத்தந்தி, நவம்பர் 2- 2022

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


**அதலிஸ் ஆ. (உ.ஆ.)** - **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2004.

**சோமசுந்தரனார் பொ.வே (உ.ஆ.)** - **குறுந்தொகை**
மறுபதிப்பு கழக வெளியீடு,
சென்னை, 2007.

**சோமசுந்தரனார் பொ.வே. (உ.ஆ.)** - **பத்துப்பாட்டு** (தொகுதி-1)
மறுபதிப்பு கழக வெளியீடு,
சென்னை, 2007.

**சோமசுந்தரனார் பொ.வே (உ.ஆ.)** - **பத்துப்பாட்டு** (தொகுதி-2)
மறுபதிப்பு கழக வெளியீடு,
சென்னை, 2008.

**தட்சிணாமூர்த்தி அ. (உ.ஆ)** - **ஐங்குறுநூறு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2007.

**தட்சிணாமூர்த்தி அ.** - **பரிபாடல்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2007.

**துரைசாமிப் பிள்ளை ஔவை.சு (உ.ஆ.)-** **புறநானூறு**
கழக வெளியீடு,
சென்னை, 1962.

**நச்சினார்க்கினியர் (உ.ஆ.)** - **கலித்தொகை**
கழக வெளியீடு,
சென்னை, 1999.

**நாகராசன் வி. (உ.ஆ.)** - **பத்துப்பாட்டு**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2007.

**பரிமேலழகர் (உ.ஆ.)** - **பரிபாடல்**
டாக்டர். உ. வே. சா நூல் நிலையம்,
சென்னை, 1995.

**பாலசுப்பிரமணியன் கு.வெ.(உ.ஆ.)** - **நற்றிணை மூலமும் உரையும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர், சென்னை - 28
பதிப்பு - 2004

**பாலசுப்பிரமணியன் கு.வெ.(உ.ஆ.)** - **புறநானூறு மூலமும் உரையும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை 2004

**வேங்கடசாமி நாட்டார் ந.மு.** - **அகநானூறு**
மறு பதிப்பு கழக வெளியீடு,
சென்னை, 2007

## துணைமை ஆதாரங்கள்

**அடியார்க்கு நல்லார் (உ. ஆ.)** - **சிலப்பதிகாரம்**
டாக்டர். உ .வே. சா. நூல் நிலையம்,
சென்னை 2008

**அடியார்க்கு நல்லார் (உ. ஆ.)** - **திருக்குறள்**
கழக வெளியீடு,
சென்னை 1982

**அந்தோணிசாமி எல்.** - **தமிழ்நாட்டின் ஆறுகள்**
முதற்பதிப்பு 2008
தமிழ்நாடுச் சுற்றுச்சூழல் கழகம்
திண்டுக்கல்

**ஆசிரியர் கிரேட்டர் நி.** - **நீர் நிர்வாகம்**
இரண்டாம் பதிப்பு
டிசம்பர் 2012
வெளியீடு, நவீன வேளாண்மை
அண்ணாசாலை, சென்னை

**ஆசிரியர் நக்கீரன்** - **நீர் எழுத்து (தமிழகத்தின் தண்ணீர் ஆவணம்)**
காடோடி வெளியீடு
இரண்டாம்பதிப்பு 2020
6 வி.கே.என். நகர்
நன்னிலம் - 610 105

**இலக்குவனார் சி.** - **தொல்காப்பிய ஆராய்ச்சி**
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை 2011

**இறையன்பு வெ.** - **இலக்கியத்தில் மேலாண்மை**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை 2018

**கந்தசாமி சோ. ந.** - **புறத்திணை வாழ்வியல்**
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 1994

**குருநாதன் ராம.** - **குறிஞ்சி வளம்**
வெற்றி மங்கை வெளியீடு,
சென்னை, 1998.

**கோவிந்தராசனார் கா.ர.** - **களவியல் என்னும் இறையனார் அகப்பொருள் மூலம் உரையும்**
சென்னை , பதிப்பு 1939.

**சங்கரன் கி. இரா.** - **தமிழக வரலாற்றில் நீர் உரிமை**
நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ் சென்னை.
முதற் பதிப்பு 2011

**சண்முகப்பிள்ளை மு.** - **சங்கத் தமிழர் வாழ்வியல்**
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 2004.

**சரளா ராச .கோபாலன்** - **சங்க இலக்கியத்தில் தோழி**
ஒளி பதிப்பகம், சென்னை 1986

**சாமி பி. எல்.** - **சங்க இலக்கியத்தில் செடி**
கொடி விளக்கம்,
கழக வெளியீடு ,1967 .

**சிதம்பரனார் சாமி.** - **பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை**
இலக்கிய நிலையம்,
சென்னை, 1973 .

**சிலம்பொலிச் செல்லப்பன் (உ. ஆ.)** - **மணிமேகலை**
பாரதி பதிப்பகம்,
சென்னை, 1998.

**சுப்பு ரெட்டியார் ந.** - **தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை**
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை 1974

**சுப்பிரமணியன் ச.வே.** - **தொல்காப்பியம்**
மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை,
சென்னை, 108. 1998.

**சுப்ரமணியன் கா.** - **சங்ககால சமுதாயம்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2011.

**சுந்தரமூர்த்தி இ.** - **பரிமேலழகர் திருக்குறள் உரைத்திறன்**
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை, 1955.

**ஞானசம்பந்தன் அ. ச .** - **அகமும் புறமும்**
பாரி நிலையம் ,
சென்னை, 1956.

**டாக்டர் பிள்ளை கே.கே.** - **தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்**
உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை, 2015.

**டாக்டர் ஜீவானந்தம் மொ.பெ.** - **பன்னாட்டு நிறுவனங்களின் தண்ணீர் கொள்ளைத் தொகுப்பு**
தமிழகப் பசுமை இயக்கம்
ஈரோடு 2004

**தங்கராசு மு.** - **சங்க இலக்கியத்தில் நிலவியல்**
தமிழ் மலர் பதிப்பகம்.

**தட்சிணாமூர்த்தி அ.** - **தமிழர் நாகரிகம் பண்பாடும்**
மறு பதிப்பு யாழ் வெளியீடு,
சென்னை ,1999.

**திருவேங்கடசாமி கே. ஆர்.** - **நிலநீர் அறிவியல்** (தொகுதி -12)
நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ்,
சென்னை 2006

**திருவேங்கடசாமி கே. ஆர்.** - **வள்ளுவத்தில் நீர்வளமும் வாழ்வியலும்**
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை 2006

**தேவநேயன் ஞா.** - **சொல்ஆராய்ச்சி கட்டுரைகள்**
கழக வெளியீடு
சென்னை 1946

**நமசிவாயம் சே.பா.** - **கழனிவளமும் (பொறியாளர்) காவிரிநீரும்**
முதற்பதிப்பு 1975
வெளியீடு, சென்னை

**பரமசிவன் தோ.** - **பண்பாட்டு அசைவுகள்**
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில், 2010.

**பாஸ்கர சேதுபதி** - **நிர்வாகவியல் சிந்தனை ஆர்வலர்கள்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2007.

**பெருமாங்குப்பம் சம்பத்து கா.** - **நீர் மேலாண்மை**
இரேணுகாம்பாள் பதிப்பகம்
வேலூர் 2016

**பேரா. சந்திரன்** - **தண்ணீர் தண்ணீர் தண்ணீர்**
பாரதி புத்தகாலயம் சென்னை

**பேரா. ஜனகராஜன் எஸ்.** - **தமிழக ஆறுகளின் அவலநிலை**
பாரதி புத்தகாலயம்
சென்னை 2005

**மணி பி. எஸ்.** - **தமிழகத்தின் நீர்வளம்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை 2001

**மாதையன் பெ.** - **சங்க இலக்கியத்தில் குடும்பம்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2010.

**முனைவர். கோமதிநாயகம் பழ.** - **தமிழகம் தண்ணீர் தாகம் தீருமா?**
முதல்பதிப்பு 2010
பாவை பப்ளிகேஷன்ஸ் சென்னை

**முனைவர். கோமதிநாயகம் பழ.** - **நீரின்றி அமையாது நிலவளம்**
முதல்பதிப்பு 2013
பாவை பப்ளிகேஷன்ஸ் சென்னை

**முனைவர். மணி. மாறன்** - **தமிழரின் நீர் மேலாண்மை**
முதல்பதிப்பு , ஆகஸ்ட் 2019
ஏடகம் வெளியீடு, தஞ்சாவூர்

**முனைவர். மனோகரன் இரா.** - **சங்ககால வேளாண்மை**
முதல்பதிப்பு 2017
காவியாப் பதிப்பகம்
கோடம்பாக்கம் சென்னை

**மூதறிஞர் மாணிக்கம் வ. சுப.** - **தமிழ்க்காதல்**
முதல் பதிப்பு 2009
மெய்யப்பன் பதிப்பகம்
3 புதுத்தெரு, சிதம்பரம்

**முனைவர் நடராசன் பா. மு.** - **நீர்மேலாண்மை**
உலகத்தமிழ்ஆராய்ச்சி நிறுவனம்,
சென்னை 2014

**வரதராசன் மு.** - **பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை**
பாரி நிலையம்,
சென்னை, 2006.

**வம்சி. பூவுலகின் நண்பர்கள்** - **மூன்றாம் உலகப்போர் தண்ணீருக்கா?**
சான்றா போஸ்டல் நண்பர்கள் 2010
சென்னை

**ஜீவசுந்தரி பா.** - **தண்ணீர் சந்தைக்கு அல்ல மக்களுக்கே**
(தொகுப்பாசிரியர்) முதற்பதிப்பு 2011
பாவை பப்ளிகேசன்ஸ், சென்னை

**ஜெகாதா** - **தமிழக நீர்ஆதாரமும் நிலத்தடி நீரும்**
முதல்பதிப்பு 2019
ஸ்ரீசெண்பகா பதிப்பகம்
தியாகராயநகர், சென்னை

## அகராதிகள்

**கதிர்வேற்பிள்ளை** - **மதுரைத் தமிழ் பேரகராதி**
முதல் பதிப்பு ,
சந்தியா பதிப்பகம்,
சென்னை, 2004.

**கிருஷ்ணமூர்த்தி** - **சுற்றுச்சூழல் களஞ்சி அகராதி** (தொகுதி 1, 2)
முதல் பதிப்பு,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
சென்னை, 2000.

**சிங்காரவேலு முதலியார்** - **அபிதான சிந்தாமணி**
(ஏசியன் எஜுகேஷனல் சர்வீஸ்)
புது தில்லி ,1952.

**தமிழ்ப்பேரகராதி** - **தமிழ் லெக்சிகன்** (தொகுதி 1-6)
சென்னை பல்கலைக்கழக வெளியீடு,
சென்னை, 1982.

**மூர்த்தி அ.கி .** - **அறிவியல் அகராதி**
முதல் பதிப்பு
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 1997.

**ராமகிருஷ்ணன் எஸ்.** - **கிரியாவின் தற்கால தமிழ் அகராதி**
இரண்டாம் பதிப்பு ,
நர்மதா பதிப்பகம் சென்னை 2008.

## நிகண்டு

**சுப்பிரமணியன் சா.வே .** - **தமிழ் நிகண்டுகள்** (தொகுதி -1, 2)
மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம்,
முதல் பதிப்பு - 2008.

**வலைதளம்**

blogspot.com

vallamai.com

siragu.com

geotamil.com

amp.momress.com

muthukkamalam.com

keetru.com

# சங்ககாலத் தமிழர்களால் தோற்றுவிக்கப்பட்ட நீர்நிலைகள்



மதில் கோட்டையின் புறத்தே அகழ்ந்து அமைக்கப்பட்ட

**நீரரண் என்றழைக்கப்படும் அகழி**

=




கங்கைகொண்ட சோழபுரம்
சுடுமண் உறைக் கிணறு

கீழடித் தொல்லியல் ஆய்வு நிகழ்த்திக் கண்டெடுக்கப்பட்ட **சுடு மண் உறைகிணறு**

கங்கைகொண்ட சோழபுரத்தில் கண்டெடுக்கப்பட்ட **சுடுமண் உறை கிணறு**



சங்ககால மக்கள் அருந்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட **ஊருணி என்னும் குடிநீர் நீர்நிலை**



நிலத்துக்கடியில் இருந்து ஊறி வரும் **ஊற்று என்னும் நீர்நிலை**



ஏரியின்  நீர் தங்கும் உள்வாய் அகன்ற  இடம்  **நீர் நக்கல்**



செங்கல்லால்  உட்சுவர் கொண்டு  எழுப்பப்பட்டிருக்கும்  **கட்டுக்கிணறு**

நெய்தல் நிலப்பகுதியில் வளமான நீர்நிலை **கடல்**





அளவில் சிறியதாக அமையப்பெற்றிருக்கும் **கண்மாய் என்னும் நீர்நிலை**



கல்லாலான நீரூற்று இதனை **கல் ஊற்று** என்பர் அக்காலத்தில் கற்களைக் கொண்டு இவ்வூற்றுக்குத் தடுப்புச்சுவர்களை எழுப்பி இருப்பர்.





சங்ககால நீர்ப்பாசன வசதிக்காக ஏரியின் நீர்த்தேக்கங்களிலிருந்து கற்களைக் கொண்டும் பலகைகளைக் கொண்டும் திறக்கக்கூடியதாய் அமையப்பெற்ற நீர் செல்லும் அமைப்பு இந்த **கலிங்கு என்னும் நீர்த்தேக்கத் தொழில்நுட்பம்.**



முல்லை நிலத்தில் பெருக்கெடுத்து ஓடும் **காட்டாறு அல்லது கான்யாறு**



ஏரிகளில் இருந்து குளத்திற்குத் திறந்து விடுவதற்காக அக்காலத்து ஏற்படுத்தப்பட்ட

**குளக்கால் என்னும் நீர்நிலை**



சங்ககாலமக்களின் சங்ககால மக்கள் பயன்படுத்திய **இறை கிணறு**



குந்தாணி போன்ற கருவிகளைக் கொண்டு அக்காலத்தில் தோண்டப்பட்ட பெருங்குழி

**கூவல் என்னும் நீர்நிலை**



குறிஞ்சிநில மலைப்பகுதிகளில் பாறைகளுக்கிடையே இயல்பாய் அமைந்த சிறிதளவு

நீர்தேங்கும் **ஆழமான நீர்ச்சுனை**



சங்ககால நாற்ப் புறமும் அழகாக அமைக்கப்பட்ட **குளம் என்னும் நீர்நிலை**



இக்காலத்தில் காணப்படுகின்ற **ஏரி என்னும் பெரிய நீர்நிலை**



சங்ககாலத்தில் நீர் தேவைக்காகச் சேமித்து வைக்க பயன்படுத்தப்பட்ட

**தொட்டி என்னும் நீர்நிலை**



கால்நடைகளுக்கு  கல்லாலானத் தொட்டிபோன்று அமைக்கப்பட்ட

**பத்தர் என்னும் நீர்நிலை**



ஏரி நீர் வெளிப்படும் இடத்துக் கட்டப்பெற்ற  **பெரிய மடை அடைப்பும் திறப்பும்**

# சங்க இலக்கியத்தில் நீரியல் சிந்தனைகள்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**ரா. ராஜா**

பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி,
கௌரிவாக்கம், சென்னை – 600073.

**நெறியாளர்**

முனைவர் **ம. பாலு** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி,
கௌரிவாக்கம், சென்னை- 600073



**எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி**
கௌரிவாக்கம், சென்னை – 600073

மே - 2023

# முடிவுரை

**சங்க இலக்கியத்தில் நீரியல் சிந்தனைகள்** என்ற பொருண்மையில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் முடிவுகள் கீழே தரப்பட்டுள்ளன.

- சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் இயற்கையோடு ஒன்றிணைந்த வாழ்வினை நடத்தினர். அவர்கள்தம் வாழ்விற்கும் இயற்கைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை அறியமுடிகின்றது.
- அறிவியல் தொழில்நுட்பம் வளராத சங்ககாலத்தில் அண்டம் குறித்த நம்பழந்தமிழரின் சிந்தனை வியக்கச் செய்கிறது.
- பழங்கால மனிதன் மேற்கொண்ட ஆராய்ச்சிகளுள் வானத்தைப் பற்றிய ஆராய்ச்சியும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.
- ஐம்பூதங்களில் காற்று ஒன்றே முதலாவதாக வைத்து சிறப்பிக்கப்படுகிறது. வானிலிருந்து காற்றும் காற்றிலிருந்து தீயும், தீயிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் தோன்றிய நிலைகளை எடுத்துரைக்கின்றன.
- இயற்கை சக்திகளுள் நீரையும் தீயையும் விட காற்றின் வலிமை மிக்கது என்பதைச் சங்கத் தமிழர்கள் உணர்ந்து இருந்தனர்.
- நான்கு வகையான திசைக்காற்றுகளுள் வாடைக்காற்றே சங்க இலக்கியங்களில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.
- ஐம்பூதங்களில் புவியில் இறுதியாக தோன்றியது நிலமாகும். தமிழகத்தின் நிலப்பரப்பே மிகவும் பழமை வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது.

- உலக உயிரினங்களின் வாழ்வியல் சூழலுக்கு அடிப்படைக் காரணியாகத் திகழ்வது நீரேயாகும். மேலும் ஞாயிற்று குடும்பக் கோள்களில் புவிக்கோளில் மட்டுமே நீர் உள்ளது. ஆதிமனிதன் தீயை இயற்கையின் மூலமே பெற்றான் போன்ற செய்திகளை அறியமுடிகின்றது.
- உலகிற்கு இயற்கை அளித்த மிகப்பெரிய வரப்பிரசாதம் மழை. மழை மேகங்களின் வழியே இடியும், மின்னலும் உருவெடுக்கின்றது என்ற செய்தியினைப் பெறமுடிகின்றது.
- சங்க இலக்கியப் பாடல்களில் ஐம்பூதங்களுள் ஒன்றான நீர் குறித்த பதிவுகளே அதிகமாகக் காணப்படுகின்றன. அதனையடுத்து நிலம், வானம் பற்றியச் செய்திகளும், காற்று, தீ குறித்த செய்திகளும் அறியமுடிகின்றது.
- சங்க இலக்கியப் பாடல்களின் வாயிலாக அயிரியாறு, அரிசிலாறு, பஃறுளியாறு, பேரியாறு, பொருநைஆறு, சிலம்பாறு, குமரிஆறு, வாணிஆறு, வைகைஆறு, காவிரியாறு போன்ற ஆறுகளைப் பற்றிய செய்திகளை அறிய முடிகின்றன.
- மனம் ஒத்த தலைமக்களின் வாழ்க்கையில் நீரும், நீர்த்துறைகளும் பெறும் பங்களிப்பினை சங்க அகப்பாடல்களின் வழியே உணரமுடிகின்றன.
- தலைமக்களின் சந்திப்பிற்குக் குறியிடமாக நீரும், நீர்த்துறைகளும் இடம் பெறுதலோடு, உவமையாகவும், குறியீடாகவும், நீர்நிலைகள் பயன்படுத்தப் பட்டுள்ளதனை அறியமுடிகின்றது.

- தலைவனைப் பாராட்டும் இடத்திலும் தலைவியின் மென்மைத்தன்மை குறித்து குறிப்பிடும் இடங்களிலும் தோழிக் கூற்று பாடல்களின் வழியேயும் நீர்நிலைகள் பெற்றிருக்கக்கூடிய முக்கியத்துவத்தினைக் காணமுடிகின்றது.
- கற்பு வாழ்விலும் நீர் முக்கிய ஊடகமாகத் திகழ்கிறது.
- பரத்தையுடன் புனலாடிய செய்தியைக் கேட்டு, ஊடல் கொள்ளும் தலைவியிடம் இனி பரத்தைத் தொடர்பை விரும்பேன் எனத் தலைவன் நீர்த்துறையின்மீது சூளுரை நிகழ்த்தியமை போன்ற செய்திகளின் வழியேயும் அகவொழுக்க வாழ்வியலில் நீர் பெறும் ஆளுமைத்திறனைப் பெற்றிருக்கின்றது.
- புறப்பாடல்களின் வழியாகச் சங்கத்தமிழர்களின் நீரியல் சிந்தனை குறித்த பதிவுகளை விருந்தோம்பல் பண்புகளிலும், நீர்நிலை குறித்த சடங்குகளிலும், வழிபாடுகளிலும் காணமுடிகின்றது.
- நீரில்லாக் காலங்களிலும், தாகமிகுதி நிலையிலும் அடிப்படைத் தேவைகளுக்கும் சங்கத் தமிழர்கள் மேற்கொண்ட நீரியல் மேலாண்மை சிந்தனை குறித்த செய்திகளையும் பெறமுடிகின்றது.
- மன்னர்கள் செயற்கை நீர்நிலைகளாகிய ஏரி, குளங்களை உருவாக்கி தங்களது நாட்டின் வளமையை மேம்படுத்த மிகுந்த முயற்சி மேற்கொண்டிருந்தனர் என்பதனை அறிய முடிகின்றது.
- மன்னனின் புகழ்மிக்க ஆட்சித் திறனை எடுத்துரைப்பதற்கும் மன்னன் என்பவன் பஞ்சபூதங்களைக்காட்டிலும் பெருமைக்குரியவனாகப் போற்றப்

பெறுவதற்கும் மன்னனை நீரோடும் நீர்த்துறைகளோடும் ஒப்புமைப் படுத்தப்பட்டுள்ளதனைப் புலவர்கள் தம் பாடல்களின் வழி தெரிய வருகின்றது.

- மன்னன் நீரை விடவும் இனிமை மிக்கனவாகவும், மென்மை மிக்கவனாகவும் காட்சிப் படுத்தப்பட்டுள்ளதனையும் காண முடிகின்றது.
- தண்ணீரும் உணவும் ஆகிய இரு மருந்தை மக்களுக்கு அளித்து நாட்டைக் காக்கும் மன்னவன் என்று நீரோடும் நீர்நிலைகளோடும் புகழப்படுவதனையும் அறிய முடிகின்றது.
- நீர்நிலைகளைப் பராமரிப்பதற்கும் பாதுகாப்பதற்கும் காவலர்கள் பணியமர்த்தப்பட்டிருந்தமையும் உணர முடிகின்றது.
- நாடு பிடிக்கும் ஆசையில் எதிரி நாட்டுவளங்களை அழிப்பதில் நீர்நிலைகள் பெற்றிருந்த முக்கியத்துவத்தினையும் புறப்பாடல்களில் நீரியல் குறித்த சிந்தனையாக வெளிப்படுவதைக் காணமுடிகின்றது.
- உலகத்தோற்றம் தொடங்கி அனைத்திலும் நீரே முக்கியப் பங்காற்றுகின்றது என்பதனை அறியமுடிகின்றது.
- ஏனைய கருப்பொருள்களை நிர்ணையிக்கும் காரணியாகவும் நீரே விளங்கப் பெறுவதனைத் தொல்காப்பியரின் நூற்பாவின்வழி பெறமுடிகின்றது.
- மனித நாகரிக வளர்ச்சிக்கு நீர் முக்கியப் பங்காற்றி இருந்து வந்துள்ளதனையும் அறிய முடிகின்றது.
- மனித உடல் எடையில் முக்கால் பங்கு அளவு நீரே ஆகும். புவியில் மூன்றில் இரண்டு பங்கு நீரால் சூழப்பட்டிருப்பினும் ஒரு சதவீத நீர் மட்டுமே

பயன்படுத்தக்கூடிய வகையில் அமைந்துள்ளது, அதனையும் நீரியல் சுழற்சி மூலமாக மழையின் வழியே பெறமுடிகிறது என்ற நீரியல் சுழற்சி சிந்தனையை அறியமுடிகின்றது.

- இன்றைய அதிநவீன அறிவியல் தொழில்நுட்பக் கருவிகள் எதனையும் கண்டிராத பழந்தமிழர்கள், கூர்த்த தம் மதிநுட்பத்தால் கோள்களின் நிலையை வைத்தும், மேகத்தின் இயக்கத்தைக்கொண்டும், காற்று வீசும் திசையை நோக்கியும், மழை வருவதற்கான சில நிமித்தங்களைக்கொண்டு கணிக்கும் திறன் பெற்றவர்களாகச் சங்ககாலத் தமிழர்கள் விளங்கியுள்ளனர் என்பதனையும் ஆய்வின் கருத்தின் வழியே பெறமுடிகின்றது.
- ஐந்திணைகளில் வேளாண் தொழிலுக்குப் பயன் தந்த, பயன்படுத்தப்பட்ட நீர்நிலைகள் குறித்த பதிவுகளையும், விளைநிலங்களுக்கு அருகிலேயே நீர்நிலைகளை ஏற்படுத்தி உபரி உற்பத்தி பெருமளவிற்கு வேளாண்மையில் கண்ட சிறந்த மேலாண்மை தொழில்நுட்பத் திறத்தினையும் அறியலாகின்றது.
- நீரினை அணைகட்டித் தேக்குவதற்கு முயற்சி மேற்கொண்டுள்ளனர்.
- பெருக்கெடுத்து வரும் ஆற்றின் வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தி, அந்நீரினைத் தேக்குவதற்காக அணை போல கரும்பின் கழிகளைப் பயன்படுத்தி உள்ளனர். ஆற்றில் கரை அமைத்து, அந்தக் கரைகளை வலுப்படுத்தும் விதமாக கரும்பினை கரைகளில் நட்டுள்ளனர்.
- மிகுதியான வெள்ளம் வரவே கரும்பினைக்கொண்டு கட்டப்பட்ட கரையானது, வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டுள்ளது. வெள்ளத்தினைத் தடுத்தல்

பொருட்டு வைக்கோல் பூரிகள் சூழ்ந்த மணலான மூட்டைகளைக்கொண்டு கோட்டைகளை அமைத்ததாகவும் அதனையும் வெள்ளம் வந்து கரைத்ததாகவும் குறித்த செய்திகளை அறியமுடிகின்றது.

- இருப்பினும் மக்கள் அணையினை மூடுகின்ற பணியில் தங்களை ஈடுபடுத்தி கொண்ட செய்தியினையும் காணமுடிகின்றது.
- இந்நிகழ்வு இன்றளவிலும் மழை வெள்ளக் காலங்களில் கரையமைக்கும்போது மணல் மூட்டைகளையே தடுப்பாக அமைக்கின்ற பழக்கம் நடைமுறையில் இருந்து வருவதை காணமுடிகின்றது.
- மேற்கண்ட முயற்சி தோல்வியுறவே வலிமையான தடுப்பணை அமைக்க, இரு பக்கமும் மலைகளைப் பக்கச்சுவர்களாகக்கொண்டு ஒரு பக்கம் மட்டுமே எட்டாம் நாள் பிறைச்சந்திரனைப் போன்று வளைவாகக் கரைகளை அமைத்துள்ளனர்.
- இன்றும் குளங்களை அமைக்கும்போது இம்முறையே பின்பற்றப்படுகின்றது. சங்ககால மக்கள் மேற்கொண்ட கட்டுமான உத்தி முறைகளையே இன்றைய பொறியாளர்களும் அணைகளைக் கட்டுவதற்கு பின்பற்றப்படுவதனைக் காணமுடிகின்றது .
- கோடைக் காலங்களில் நீரற்ற குளங்களில் நீரினை எடுப்பதற்குக் குழி அமைத்து நிலத்தடி நீர் பெற்றுள்ளனர் என்பது அவர்கள்தம் நீரியல் தொழில் நுட்பம் குறித்த அறிவினை பறைசாற்றுவதாகக் கொள்ளலாம்.

- சங்க இலக்கியத்தில் குளம், பொய்கை, குட்டம், இலஞ்சி, அகழி, சூழி, கடல் போன்ற நீர்நிலைகளும் சுட்டப்பட்டுள்ளன.
- சங்ககாலத்தில் நிலத்தடி நீர்மட்டம் மிகுதியாக காணப்பட்டதாகவும் நீர்மட்டம் எவ்வளவு மிகுதியாகக் காணப்படினும் மழைநீரை சேமிக்க வேண்டும் என்கின்ற எண்ணம் சங்ககால மக்களுக்கு மிகுதியாக இருந்துள்ளது என்பதைச் சங்கப்பாடல்களின் வழி அறியமுடிகின்றது.
- அதன் காரணமாகவே சங்ககாலத்தில் மாடமாளிகையில் பொழிகின்ற மழை நீரை அனைத்தையும் ஓரிடத்தே ஒன்று சேர்க்கக் கூடிய வகையில் மழைநீர் சேகரிப்பு முறைகளை அமைத்தனர். இதனை இக்கால மழைநீர்சேகரிப்பு முறையின் முன்னோ டியாகக் கொள்ளலாம்.
- நில அமைப்பிற்கு ஏற்ற வகையில் தனிக்குளம் மற்றும் சங்கிலித்தொடர் ஏரி, குளம் போன்ற நீண்ட நெடிய கரையுடன் கூடிய தாங்கல், ஏந்தல் போன்ற பல்வேறு விதமான குளங்களை ஏற்படுத்திய சங்கத்தமிழரின் தொழில்நுட்பத் திறனை அறிய முடிகின்றது.
- சங்ககாலத்தில் நீர்நிலைகளைக் காப்பதற்கும் மண்ணரிப்பு நேராமல் காப்பதற்காகவும் நீர் நிலையின் ஆழம் குறையாது இருக்கச் செய்யவும் நீர் நிலைகளைச் சுற்றிலும் கடம்பம், கோங்கம், காஞ்சி, மூங்கில் போன்ற மரங்கள் நடப்பட்டு நீர்நிலைகள் பாதுகாக்கப்பட்டன என்ற செய்தியினைக் காண முடிகின்றது.

- சங்ககாலத்தில் நீர் நிலைகளிலிருந்து நீரினைப் பாசனத்திற்கு கொண்டு செல்வதற்கு ஏதுவாக நீர் பாசன கட்டுமான அமைப்புகளான புதவு, குமிழி, தூம்பு, சுருங்கை, கலிங்கு, மதகு, மடை போன்ற அமைப்புகளை மேற்கொண்டு நீர்மேலாண்மை பணியை மேற்கொண்டதனை அறிய முடிகின்றது.
- நாட்டின் நீர்வளங்களைப் பாதுகாக்கவும் பராமரிக்கவும் இந்திய அரசால் ஜல்சக்தி அமைச்சகம் என்ற ஒரு புதிய அமைச்சகத்தை உருவாக்கி அதன்வழி நாட்டின் நீர்வளங்களை மேம்படுத்தவும் முறைப்படுத்தவும் பொறுப்பு அளிக்கப்பட்டுத் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளதனையும் காணமுடிகின்றது.
- நாட்டில் நிலைத்து நிற்கும் நீராதாரங்களை உருவாக்க ஒவ்வொரு மாவட்டத்திலும் எழுபத்தி ஐந்து நீர்நிலைகளை உருவாக்கி அல்லது மேம்படுத்தி புத்துயிர் அளிப்பதை நோக்கமாகக்கொண்ட அம்ரித்சரோவர் திட்டங்களை மத்திய அரசுடன் தமிழக அரசு இணைந்து செயல்படுத்தி வருவதனை அறியமுடிகின்றது.
- பழந்தமிழர்கள் மேற்கொண்ட நீரியல் சிந்தனை என்பது இன்றளவும் பின்பற்றப்பட்டு வருதலோடு தற்காலத்திற்கு ஏற்றவாறு பல அதிநவீன தொழில்நுட்பக் கண்டுபிடிப்புகள் உருவாக்கப்பட்டு கையாளப்பட்டு வருவதனையும் தற்கால நீரியல் மேலாண்மை குறித்த செய்தியாக மேற்கண்ட ஆய்வியல் கருத்துக்களின் வழி உணர முடிகின்றது.

**ஆய்வின் சாரம்**

- இயற்கையின்மீது தீராத காதலினைக் கொண்டவர்கள் சங்கத் தமிழர்கள். இயற்கையோடு ஒன்றிணைந்து அதன் மாற்றங்களை ஏற்றுக்கொண்டு, அவற்றின் வளங்களை அழிக்காது, தங்கள் வாழ்வினை வளப்படுத்தி கொண்டமை குறித்த செய்திகளைச் சங்கப் பாடல்களின்வழி அறிய முடிகின்றது.
- சங்க அகமாந்தர்களினூடே அக வாழ்வில் நீர் பெறும் ஆளுமை திறத்தினையும், சங்கப் புலவர்களின் நீரியல் சார்ந்த கற்பனைத்திறத்தினையும் காண முடிகின்றது.
- சங்கப் புற வாழ்வில் நீரியலின் தாக்கமானது மக்களின் சமூகப் பண்பாட்டு நிகழ்வுகளில் காணப்பெறுவதோடு, மன்னர்கள் தம் அழியாப் புகழிற்கும் பரந்த ஆட்சியமைப்பிற்கும் நிலைக்களனாக நீர்நிலைகள் விளங்கப் பெற்றிருந்தமையும் உணரமுடிகின்றது.
- உலக உயிர்களின் ஆதாரமாகத் திகழும் நீரினைச் சங்கத் தமிழர்கள் மேலாண்மை செய்த திறன் வியப்பிற்குரியதாகும். நீரின் முக்கியத்துவத்தினைக் குறித்து முன்னமே உணர்ந்திருந்தமையால் நீரினை தேக்குவதற்கு உரிய உத்தி முறைகளை ஆராயத் தலைப்பட்டமையை அறியமுடிகின்றது. எவ்வித அறிவியல் தொழில்நுட்பமும் வளராத அக்காலத்தில் நில அமைப்புகளுக்கு தக்க வகையில் செயற்கை நீர்நிலைகளைத் தோற்றுவித்து அதன் வழி தங்கள் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டமையோடு அன்றாட

வாழ்வியலுக்கும், உணவு உற்பத்திக்கும் ஏற்ற தொழில்நுட்பங்களைக் கண்டறிந்தமையை அறிய முடிகின்றது .

- இதன் விளைவாக மடை, மதகு, புதவு போன்ற அணை நீர்த் தேக்கத் தொழில்நுட்பங்களைப் பயன்படுத்தி பாசன காலங்களில் ஏரி, குளங்கள் வழியாக விளைநிலங்களுக்கே சென்றடையும் வகையில் தொடர் சங்கிலி போன்ற கால்வாய்கள் அமைத்து, வேளாண்மையில் நீரினை மேலாண்மை செய்த சங்கத் தமிழர்களின் நீரியல் மேலாண்மை நுட்பச் சிந்தனைத்திறனை உணரமுடிகின்றது.
- தற்காலத்தில் மேற்கொள்ளப்படும் நவீன நீர்வள மேம்பாட்டுச் சிந்தனைகளுக்கெல்லாம் முன்னோடியாகத் திகழ்பவை சங்கத் தமிழர்களின் நீரியல் மேலாண்மை தொழில்நுட்பச் சிந்தனையே என்பது மேற்கண்ட ஆய்வின் சாரமாகும்.

**மேலாய்வுக் களங்கள்**

- சங்ககாலத் தமிழர்கள் பின்பற்றிய நீரியல் சிந்தனைகளை வேளாண்மையில் மேற்கொண்ட நீரியல் சிந்தனைகளோடும் சங்ககால நீரியல் பயன்பாடு மற்றும் நீர்த் தேக்கத் தொழில்நுட்பம் என்ற தலைப்பிலும்,
- சங்ககாலத்துக்குப் பின்பு தோன்றிய பிற்கால இலக்கியங்களோடும் ஒப்பீடு செய்தும் ஆய்வுகள் மேற்கொள்ளலாம்.
- மேலும் சங்ககால அரசியலில் நீரின் ஆளுமை என்ற தலைப்பிலும், தமிழ் இலக்கியங்களில் வழி அறியலாகும் நீரியல் சிந்தனைகள் என்ற தலைப்பிலும் ஆய்வுகள் மேற்கொள்ளலாம்.
- தற்கால நீர்வளப் பாதுகாப்பு மற்றும் தொழில்நுட்பம் என்ற தலைப்பில் தனி ஆய்வாகவும் இவ்ஆய்வினை மேற்கொள்ளலாம்.